

ரமணிசந்திரன்

# கண்ட நாள் முதலாய்...

மனம் மயக்கும் மலர் தொடர்

அன்று அவளுக்குப் படுக்கையை விட்டு எழவே மனமில்லை! மனமில்லை என்பதை விட, முடியவில்லை எனலாம்.

இன்று மட்டுமல்ல... சில பல தினங்களாகவே இப்படித்தான்! டாக்டரிடம் போக வேண்டும் என்று நினைப்பாள். ஆனால், உடனே அவர் அறிவுரை கூறத் தொடங்கிவிடுவாரே என்ற எரிச்சலில் தள்ளிப் போடுவாள். ‘இது கூடாது, அது சரியல்ல’ என்று, என்னவோ அவளுக்குப் புத்தியே இல்லாதது போல அவர் சொற்பொழிவாற்றுவதை யார் கேட்டு சகிப்பது? அந்த மாதிரிப் பொறுமையெல்லாம்,

Contact Email



அவளுக்குக் கிடையவே கிடையா துப்பா!

நிச்சயமாகக் கிடையாது என்று தலையை லேசாகச் சிலுப்பியபடியே எழ முயன்றால், இயலாமல், தலை பத்திருபது கிலோ சுமையாகக் கனத்து, அவளை மறுபடியும் படுக்கையில் தள்ளியது. என்ன இது என்று நெற்றிப் பொட்டைத் தேய்த்து விட்டுக் கொண்டாள். தலைக்கனம் சற்றும் குறைவதாக இல்லை!

இன்றும் பேசாமல், இப்படியே படுத்துத் திரும்பவும் தூங்கிவிட வேண்டியதுதான். அவளை யார் கேட்பது? கேட்கக்கூடிய தாயையும் கண்டபடி திட்டி விரட்டியாயிற்று! இனி, அவள் இந்த வீட்டுப்படி ஏறுவது... ஊகூம், நடப்பதற்கில்லை!

கணவன் ஒரு வார்த்தை கேட்க மாட்டான்! அவன் இதற்குள் அலுவலுக்கே கிளம்பிப் போயிருக்கக் கூடும். போயிருப்பானா?

மணி என்ன இருக்கக்கூடும்... ஒன்பது? ஒன்பதரை? கனமான திரைச்சீலைகளால் மூடப்பட்டிருந்த ஜன்னல்களும், இதமான ஏசியுமாக, விடிந்துவிட்டதா இல்லையா என்றே தெரிய விடாது மறைத்தன. நிச்சயமாக விடிந்து வெகு நேரம் ஆகியிருக்கும். இரவு ஒரு மணிக்குமேல் வந்து படுக்கையில் விழுந்தவளுக்கு, விடிகாலையில் விழிப்புத் தட்ட வாய்ப்பேது?

சூரிய உதயத்தை அவள் கண்ட ஞாபகமே இல்லையே! என்னவோ அழகாக இருக்கும் என்கிறார்கள். ஆனால், ஓர் அழகான காட்சியைக் காண்பதற்காக மட்டுமே, யார் காலையிலேயே விழித்து எழுவது? அதுவும் இரவெல்லாம் ஆடி ஆடி ஓய்ந்த பிறகு! இல்லையே... கால் சோர்ந்து வலிக்கிறது என்று, இப்போது சில நாட்களாகவே ஆட்டம் கூட மிகவும் குறைந்து போயிற்றே! விக்கி கூட அது பற்றி குறைப்பட்டானே!

ஏன் இப்படி என்று நெற்றிக் கூந்தலை ஒதுக்கியவாறு யோசித்தவளின் பார்வையில், நெற்றியை விட்டு இறங்கிய கை பட்டது.

தந்தக் குச்சி என்பார்களே... அது போல அழகான, வேலை செய்தறியாத மெல்லிய விரல்கள்! ஆனால், இப்போது ரொம்பவும் ஒல்லியாகத் தெரிகின்றனவோ? நகம் அதிக நீளமாகி விட்டதா... அல்லது..?

சிறு கலக்கம் தோன்ற, லேசாகத் தடுமாறியபோதும், பிடிவாதமாக எழுந்து சென்று, உடை மாற்றும் இடம் போனாள். சல்லாத்துணியால் ஆன இரவு உடை மறைக்காத உடலமைப்பு ஆளுயர முப்பட்டைக் கண்ணாடியில் தெளிவாகத் தெரிந்தது!

அழகான மெல்லிய மேனிதான். அவள் சிரமப்பட்டுக் காப்பதே, இந்த ஒசிந்தாடும் கொடி போன்ற மெலிதான உடலமைப்பை... உச்சி முதல் உள்ளங்கால் வரையிலான அழகை மட்டுமே. ஆனால், இப்போது அதிகப்படி மெலிவா



''நர்ஸ், அந்த பேஷன்ட் நாளைக்கு ஆபரேஷன்னு சொன்னதால பயந்துக்கிட்டு இருக்காரா?''
''இல்லை டாக்டர், ஏற்கனவே ரெண்டு தடவை தற்கொலை முயற்சியில தோல்வி அடைஞ்சதால, ரொம்ப நம்பிக்கையா இருக்காராம்!''
*- கோ.சிவகுமார், மதுரை.*

sms



கத் தோன்றுகிறதா?

மூன்று கண்ணாடிகளிலும், உடலைத் திருப்பித் திருப்பிப் பார்க்கையில், அந்த வேகம் தாளாது, தலை சுற்றிக் கீழே விழப்போனாள். கிட்டத்தட்ட விழுந்தே விட்டாள் எனலாம். சமாளித்துத் தரையில் அமர்ந்தவள், அப்படி உட்கார்ந்தபடியே யோசித்தாள். இப்படித் தலை எதற்காகச் சுற்றக் கூடும்?

சட்டென விழியகலத் திகைத்துப் போனாள் அவள். இது எப்படி நடக்கும்? போதையில், அரை உணர்வில் மயங்கிக் கிடந்தபோது, ஏதேனும் நேர்ந்திருக்குமோ?

இதைக் கணவனிடம் எப்படிச் சொல்ல முடியும்? அது நடக்கிற காரியம் அல்லவே! ஊருக்காக, எத்தனையோ பொறுத்துப் போகிறவன்தான். அது, ஒரு மாதிரி மானம் பார்க்கிறவன். ஆனால், இதை... ஊகூம். இதுவும் நடக்கிற காரியம் அல்லதான்!

**சீச்சீ!** இப்படிப் போய், மடத்தனமாக மாட்டிக்கொண்டாளே. அறிவுரை, விரிவுரை எல்லாம் ஆற்றினாலும் சகித்து, முதலில் டாக்டரைப் போய்ப் பார்க்க வேண்டும். பார்த்து ஆவன செய்ய வேண்டும் என்று முடிவு செய்தாள் அவள்.

ஆனால், மருத்துவரைப் பார்க்கும் நேரம் முன்பதிவு செய்வதற்காக செல்லில் எண்களைப் பாதி அழுத்தும்போதே, அவளது மனம் மாறிவிட்டது. மூளையில் முன்னெச்சரிக்கை மணி அடித்தது எனலாம். கணவனுடனும், தாயுடனும் பேச்சு வார்த்தை வைத்திருக்கும் அந்த வைத்தியர், எந்த விதத்திலும் அவளுக்குப் பயன்படமாட்டார்.

ஆனால் ஏதாவது அரைகுறையிடம் சென்று, அது வேறு ஆபத்தாகி விடக்கூடாது. நன்கு விசாரித்து அவள் சென்ற மருத்துவர், உடனடியாக எந்த பதிலையும் சொல்லி விடவில்லை! மேலும் பல சோதனைகள் நடத்தப்பட்டன. 'என் செலவில் இந்தம்மா வாங்கி வைத்திருக்கும் பல்வேறு கருவிகள் மூலமாக வருமானம் பார்க்கிறாளா' என்று உள்ளூரப் பொருமிய போதும், மறுப்பின்றி அனைத்து சோதனைகளையும் செய்துகொண்டாள், வேலை முடிந்ததும், வார்த்தைகளால் அவளை ஒரு வாங்கு வாங்கிவிட வேண்டும் என்ற கறுவுதலோடு!

வைத்தியர் சொன்ன அத்தனை சோதனைகளும் முடிந்த பிறகும், சோதனை முடிவுகளோடு அமர்ந்திருந்த மருத்துவர், "உன் கணவரை வரச் சொல்" என்று அவளது பொறுமையை இன்னமும் சோதித்தார்.

ஆனால், அவளுக்கல்லவா காரியம் நடக்க வேண்டும்?

"எனக்கு ஒன்று என்றால் என்னிடம்தான் டாக்டர் சொல்ல வேண்டும்" என்றாள் சற்று அழுத்தமான குரலில்.

கூர் விழிகளால் நோக்கிவிட்டு, "அம்மா, அப்பா இருக்கிறார்கள் அல்



''தலைவர் ஆயிரத்தில் ஒருவர்னு எப்படிச் சொல்றே..?''

''எலெக்ஷன்ல அவர் தொகுதியில நிக்கப்போற ஆயிரம் பேர்ல அவரும் ஒருத்தர்!''

*- எஸ்.கோபாலன், சென்னை-61.*

sms



லவா? அவர்கள் அல்லது தோழியர்... யாரையேனும் அழைத்து வாம்மா'' என்றார் மருத்துவர் பரிவாகவே.

ஆமாமாம், இதை எல்லோரிடமும் தண்டோரா போடத்தான் கா...த்துக் கொண்டு இருக்கிறேன் என்று மனதுள் கடுகடுத்தபடி, "எனக்கு என்னவானாலும், நானேதான் பார்ப்பது. சும்மா பூச்சாண்டி காட்டாமல், என்னிடமே சொல்லுங்கள்'' என்று சற்று அதட்டலாகவே கூறினாள் அவள்.

முன்னே சாய்ந்து, அவளை மறுபடியும் கூர்ந்துவிட்டு டாக்டர் சொன்னதை ஜீரணிப்பது, அவளுக்கு இன்னமும் கடினமாகத்தான் இருந்தது.

அவள் கருவுற்று விடவில்லை என்பது மட்டுமே, மருத்துவர் சொன்னதில் சரியான, அவளுக்குச் சாதகமான விஷயம்.

மற்றபடி, அவள் எப்படிச் சீக்கிரமே செத்துவிட முடியும்? வெறும் இருபத்தி ஆறில்! எப்படி என்பதையும் அந்த டாக்டர் கிராதகியே சொன்னாள்.

கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று அவள் வாழ்ந்த வாழ்க்கை முறை, உட்கொண்ட போதைப் பொருட்கள் எல்லாமாக, அவளது உடல்நலத்தை, முக்கியமாக உள்ளுறுப்புகளைப் பாதித்து விட்டனவாம்... ரொம்பவே! அதன் விளைவுதான் இந்த அசதி, உணவில் விருப்பமின்மை, மெலிவு, நடுக்கம் எல்லாமாம்! சீக்கிரமே...

அவளது கண்களில் அவநம்பிக்கையைக் கவனித்து, "மாற்று அபிப்ராயங்கள் கேட்பதானால் சீக்கிரமாகச் செய்யம்மா! இப்போது போல தள்ளிப் போடாதே!'' என்று, செய்த சோதனைகள், முடிவுகள் அடங்கிய ஃபைலை அவள் புறமாக நகர்த்தினார் மருத்துவர்.

அப்போதும் நம்பிக்கை இல்லாமல் மேலும் இருமுறை அதே சோதனைகளையேகூட புதிதாகச் செய்து பார்த்தாள் அவள். ஆனால், முடிவு எல்லா இடங்களிலும் ஒன்றாகத்தான் இருந்தது. குறைந்தபட்சமாக, முதல் மருத்துவப் பெண்மணி பரிவாகவேனும் பேசினார் என்று, அவரிடமே மறுபடியும் போனாள்.

அவளுக்கு இன்னும் இருப்பது, அவள் நடந்து கொள்வதைப் பொறுத்து, ஐந்திலிருந்து பத்து மாதங்கள்! அப்புறம், அவள் ஃபட்... மேலே போய்விடுவாள்! இரவு போய் பகல் வருவது போல, இது உறுதி. அல்லது, பகல் போய் இரவு வருவது போல என வேண்டுமோ?

ஒருவேளை... என்பதெல்லாம் மாறி, அறுதியிட்டுக் கூறப்பட்டு விட்ட இறுதித் தீர்ப்பு!

ஒரு தெளிவற்ற திகைப்புடனேயே வீடு வந்து சேர்ந்தவள், இலக்கற்று அங்கும் இங்குமாக அலைந்து திரிந்தாள்.

எவ்வளவு பெரிய வீடு... பசேலென்று புல்வெளியும், அங்கங்கே வண்ண மலர் பாத்திகளுமாக, எவ்வளவு பெரிய தோட்டம்! இதில் எத்தனை பார்ட்டி

**''அவர் போலி வக்கீல்னு எப்படிச் சொல்றே?''**
**''வாதி யாரு... பிரதிவாதி யாருன்னு கேட்டதுக்கு... வாதிகிட்ட கேஸோட ஒரு பிரதியைக் கொடுத்தா, அவர்தான் பிரதிவாதின்னு சொல்றாரு!''**
*- டி.செல்வன், நெல்லையப்பபுரம்*

sms





கள் நடத்திபிருப்பாள்!

ஏஜமானியம்மா நின்று பார்ப்பதை எங்கிருந்தோ கவனித்துவிட்டுத் தோட்டக்காரன் விழுந்தடித்துக் கொண்டு வருவது தெரிந்தது! இந்தக் கிழட்டு மூஞ்சியை யார் சகிப்பது? சட்டெனத் திரும்பி வீட்டினுள் சென்றாள்.

அவளது விருப்பம் போல, அவளுடைய தந்தை கட்டிய வீடு! பெரிய ஹால்! ஒருபுறமாய், எஸ் வடிவில் வளைந்து செல்லும் மாடிப்படிகள். எதிர்ப்பக்கத்தில், க்யூரியோவில் கண்ணாடி அடைப்புகளுக்குள், எத்தனை விலைமதிக்கமுடியாத அழகான கலைப் பொருட்கள்! அவையெல்லாம் பெரும்பாலும், அவளுடைய தாயார் சேர்த்தவை!

தோட்டம், வீட்டு அலங்காரம் எல்லாமே, அவளுடைய தாயாரின் உழைப்பு! ஒரு மாதிரி அழகுணர்ச்சி உள்ள பெண்மணி! ஆனால், புத்தி சொல்லத் தொடங்கும்போதுதான், 'சை' என்று வெறுப்பாக இருக்கும்!

இங்கேயும், "என்னம்மா?" என்று வேலைக்காரி வரவும், எரிச்சலுற்று மாடிக்குப் போனாள். அவளது அறை! வீட்டைப் போலவே, அவளது அறையும் பெரியதுதான்! உட்புறச் சுவர்களில் இரண்டு புறம் முழுமையாக அடைத்து, வார்ட்ரோப் அமைப்பு.

திறந்து பார்த்தால், எத்தனை வகை ஆடை அணிமணிகள்! ஒரு நாளைக்கு, நாலைந்து முறை கூட மாற்றுவாள்! டாக்டர் சொல்லும் இந்த மிஞ்சி மிஞ்சிப் பத்து மாதங்களில், எதையெதை, எத்தனை




**43 ஆண்டுகளாக காது கேளாதவர்களுக்கும் ஊமைத்தன்மை உள்ளவர்களுக்கும் சிகிச்சை அளிக்கிறார்!**

**டாக்டர்.சாமிகிரி சித்தர்**

காதில் வலியா? காதில் நரம்புத் தளர்ச்சியா?
சீழ் வடிகிறதா? சரியாக காது கேட்கவில்லையா? இரைச்சலா?

**காதுக்கருவி இல்லாமல் அறுவை சிகிச்சை இல்லாமல் 3 மணி நேரத்தில் காது கேளாதவர்களை காது கேட்கச் செய்கிறார்!**

ஊமைத் தன்மையுள்ள 7 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு 3½ வருட சிகிச்சையில் காது கேட்கச் செய்கிறார். வாயும் பேச வைக்கிறார். பரிசோதித்த பிறகு சிகிச்சைக்கு ஏற்கப்படுவர். ஊமைத்தன்மை உள்ளவர்களுக்கு சிகிச்சை பெற்ற உடனே முன்னேற்றம் தெரியும். இதுவரை பேசாத சில வார்த்தைகளை உடனே பேசுவார்கள்.

**டாக்டர் சாமிகிரி சித்தர்**
**காதொலி நிலைய சித்த மருத்துவமனை,**
சித்த மருத்துவர்கள்: S.கிரிவாசன் S.கிரிராஜன் S.அருணகிரி
(401), 383, கிராஸ்கட் ரோடு, காந்திபுரம், கோயமுத்தூர் - 641 012
போன்: 0422-2234215, 4370303, 2473291, 98942 58007,98422 22007

முன்பதிவு செய்யவும்
பரிசோதனை நேரம்: மதியம் 2.00 to 4.00



Dr.கிரிவாசன்



Dr.கிரிராஜன்



Dr.அருணகிரி



தடவை அணிந்து மகிழ முடியும்? அணிந்தாலும், இனி மகிழ முடியுமா? பார்க்கப் பார்க்க நெஞ்சை அடைத்துக்கொண்டு, 'ஹோ' என்று வந்தது!

இதெல்லாம் இந்த இருபத்தியாறு வயதில், அவளுக்கு எப்படி நேரலாம்?

கொஞ்சம் தப்புதண்டாவாக வாழ்ந்தாள்தான்! ஆனால், அவளோடு சுற்றும் பலபேர் அப்படித்தானே வாழ்கிறார்கள்? அவர்களுக்கெல்லாம் இந்த இறுதித்தீர்ப்பு வழங்கப்படவில்லையே! அவளுக்கு மட்டும் ஏன்?

பதில் தெரியாத காரணத்தால், அவளுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. இந்தக் கோபத்தை அவளால் எப்படி சகிக்க முடியும்? சுற்றுமுற்றும் பார்த்தவளுக்கு, அறைவாயிலை ஒட்டியிருந்த ஸ்விட்ச் போர்டுக்குக் கீழே, கடைசல் பிடித்த கால்களுடன் கூடிய முக்காலியின் மேல், பொருத்தமான வண்ணப்பூக்களுடன் பெரிய பூஜாடி எழிலாக நிற்பது கண்ணில் பட்டது.

அவள் சாகப் போகிறாள்! இது இவ்வளவு அழகாக இருப்பதா? ஆத்திரத்துடன் அதைத் தூக்கி, முழு பலத்துடன் ஓங்கி வீசினாள்.


''கபாலி... நேத்து ராத்திரி அசோக் நகர்ல 12-ம் நம்பர் வீட்ல நீ திருடின மாதிரி கனவு கண்டேன்..!''
''அதுக்கு நான் என்ன சார் பண்றது..?''
''மாமூல் கொடுக்க வேணாமா..?''
- பா.து.பிரகாஷ், தஞ்சாவூர்.
sms


அறையை ஒட்டியிருந்த வராந்தா க்ரில்லைத் தாண்டி, கீழே ஹாலில் விழுந்து, உயர் ரக சைனா க்ளேயினால் செய்யப்பட்டிருந்த, விலை உயர்ந்த பூஜாடி, பூக்களெல்லாம் சிதறச் சுக்கல் சுக்கலாக நொறுங்கியது! பூஜாடியைத் தொடர்ந்தது, 'குக்கூ' கடிகாரம். அதுவும் சுக்கல் நூறுதான்.

கீழே ஏதேதோ ஓசைகள் கேட்டன. வேலையாட்களாக இருக்கும். ஆனால், வெளிக்காட்டிக்கொள்ளப் பயந்து ஒதுங்கி நிற்பார்கள்! நிற்கட்டும்... அடுத்து என்ன உடையுமோ, யார் மேல் விடியுமோ என்று நடுங்கட்டும்! என்றாலும், அவளது சீற்றம் தணிய மறுத்தது! அவளுக்கு இந்த நிலை எப்படி வரலாம்?

அரவம் கேட்டு நிமிர்ந்தால், அவளுடைய கணவன், மறுபுறத்து அறையிலிருந்து வெளிவந்து, மாடிப்படியில் இறங்கிக் கொண்டிருந்தான். உடைந்த பொருட்களையோ, உடைத்த அவளையோ சற்றும் கண்டுகொள்ளாமல், சலனமற்றுச் சென்று கொண்டிருந்தவனைக் காண்கையில், அவளுக்குத் தன் நிலையின் காரணம் புரிந்தது.

அவளுக்குக் கணவன் சரியில்லை! அவன் மட்டும், அவள் கூப்பிட்ட குரலுக்கு ஓடி வந்து, கால் வருடி, கை வருடி, கண்ணசைவு பார்த்து, அதற்கேற்ப கொஞ்சிக்கொண்டு, அவளது காலடியில் கிடந்திருந்தால், இவ்வளவு தூரம் போகுமா? அவனே, சீக்கிரமாகக் கண்டுபிடித்துக் குணப்படுத்தி இருக்கமாட்டானா?

அவள் உடைக்க வேண்டியது, அவனையே அல்லவா?

(தொடரும்)



வரவுசெலவுகளைக் கணக்கிட்டு, ‘‘வரும் ஆண்டில் நிறுவனத்தி லிருந்து ஆளுக்கு மூவாயிரம் ரூபாய் அதிகமாகச் சுரண்டலாம் என்று தோன்றுகிறது’’ என்றாள் பரிமளா.

அவர்களது ‘திரும்பிப் பார்’ நிறுவனத்துக்கு மறுநாள் ஆண்டு விழா. அன்றுடன் அவர்கள் நாலு பேருமாகச் சேர்ந்து இந்தத் தொழிலைத் தொடங்கி, ஓர் ஆண்டு காலம் முடிவடைந்து விட்டது.

# கண்ட நாள் முதலாய்...



முழு வரவு செலவுக் கணக்கை விரல்களிலேயே வைத்திருக்கும் பரிமளா சொல்வதைப் பார்த்தால், ஓர் ஆண்டிலேயே மூன்று மடங்கு அதிக வளர்ச்சி அடைந்திருக்கிறார்கள்.

இலியாசும் பரிமளாவும் இரண்டாண்டு முந்திய செட். பூபாலனும் சைதன்யாவும் அடுத்தடுத்து முடித்தவர்கள். நாலு பேருமே தையற்கலை முறையாகப் பயின்றவர்கள். தனிப்பட்ட பயிற்சியும் எடுத்திருந்தார்கள்.

எல்லோருமே எல்லாமே தைக்கக் கூடியவர்களே என்றாலும், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விஷயத்தில் அதிகப்படி திறமையும் இருந்தது.

இலியாசுக்கு ஆண்களின் உடைகளில் தனித்திறமையோடு, தன் வேலையோடு நாலுபேரை வேலைவாங்கும் திறமையும் இருந்தது. விழாக் காலங்களில் இரவு பகல் பாராமல் வேலை செய்வதோடு, மற்றவர்களையும் செய்ய வைத்துவிடுவான். பரிமளாவுக்குக் கணிப்பும் கணக்கும் அத்துபடி. கூடவே, நிறுவனத்தின் நிர்வாகமும். வரவு செலவுக் கணக்கும் அவளிடம்தான் இருந்தது. இந்த டிசைனுக்கு இவ்வளவு துணி ஆகும். அலங்கார வேலைப் பொருட்களுக்கு விலை, கூலி இவ்வளவு, மொத்தச் செலவு. இப்படி எல்லாம் வினாடிக்குள் கணக்கிட்டு, நிறுவனத்துக்கும் நோகாதவகையில் குறிப்பிட்ட சதவிகிதம் வைத்து வாடிக்கையாளரிடம் வாங்கி விடுவாள்.

பூபாலன் விற்பனைத் திறன் படைத்தவன். அவனிடம் பேச்சுக் கொடுத்துவிட்டால், எதையாவது வாங்காமல், எதற்காவது ஆர்டர் கொடுக்காமல் போகவே மாட்டார்கள். சைதன்யா கடைசி என்றாலும் கற்பனாசக்தி அதிகம். புதுப்புது விதமாக வடிவமைப்பதில் வெகு கெட்டிக்காரி. ஆளைப் பார்த்ததுமே, பொருத்தமான வண்ணங்களும் டிசைன்களும் அவளுக்குத் தோன்றத் தொடங்கிவிடும். அவள் எடுக்கும் அளவுகளும் கனகச்சிதமாக இருக்கும். அதன்படி வெட்டி, அதன்படியே தைத்தால், வெகு பிரமாதமாக இருக்கும்.

இவர்கள் நாலு பேரும் சேர்ந்தது ஆற்றுநீர் ஓட்டம்போல ஓரளவு இயல்பாவே நடந்தது. படிக்கும்போது ஒரு நிவாரண நிதிக்காக நடந்த கண்காட்சியில், ஸ்டால் போட, இவர்கள் நால்வரையும் அனுப்பி இருந்தார்கள்.

**ஜோக்**

**“அடுத்த வீட்டம்மா ஏன் அவசரமா கூப்பிடறாங்க?”**

**“சற்று முன் கிடைத்த வம்பைச் சொல்லப் போறாங்களாம்..!”**

*- ஏ.நாகராஜன், சென்னை-75.*



தைத்துத் தயாரித்து வைத்திருந்த உடைகளோடு, அந்தந்த உடைகளுக்கு ஏற்றவாறு கைப்பை, பெல்ட் அலங்காரப் பொருட்கள் அனைத்தையும் அவர்கள் சேர்த்து விற்றுக் கணக்கு முடித்த விதம் பலரையும் கவர்ந்தது. முக்கியமாக, அவர்களுடைய நிறுவன ஆசிரியர்களை!

“நீங்கள் நாலுபேரும் சேர்ந்து கடை போட்டால் பிரமாதமாக வரலாம்'' என்றனர் அவர்கள்.

சைதன்யாவும் பூபாலனும் படித்துக் கொண்டிருக்க, பெரியவர்கள் இருவரும் தையலில் முதுநிலைப் படிப்பை அந்த ஆண்டுதான் முடித்திருந்தனர். ஆசிரியர்கள் மூலமாகவே, ஆளுக்கு ஒரு தையல் நிறுவனத்தில் பயிற்சிக்கும் ஏற்பாடு நடந்திருந்தது.



அப்போதே ஆசிரியர்களின் கருத்து அவர்களுக்கும் ஒப்புதலாகவே தோன்றிற்று. அதுபற்றி அவ்வப்போது பேசினார்கள். எல்லோரும் படிப்பு, பயிற்சி முடிந்து, மறுபடியும் யோசித்தார்கள். அப்படிப் பலமுறை யோசித்துத் தொடங்கியதுதான், இந்தத் 'திரும்பிப் பார்'.

சாலையில் செல்வோரைத் தன்னை அறியாமலே ஒரு தரம் திரும்பிப் பார்க்க வைக்கும் அந்தப் பெயர், கண்குத்திப் பாம்பாக அவர்களைக் கவனித்தது. "இதேபோல எங்கள் உடைகள் மற்றவர்களைத் திரும்பிப் பார்க்க வைக்கும் திறம் படைத்தவை" என்று சொல்லியே முதலில் வாடிக்கையாளர்களைப் பிடித்தார்கள்.

ஒருவருக்கு நாலு பேரின் கருத்துப் பரிமாற்றங்கள் இருந்ததால், செய்பொருட்கள் எல்லாமே சிறப்பாக அமைந்து, வாடிக்கையும் பெருகியது. நாலு குடும்பங்கள் செழிப்பாக வாழ்வதற்கு இன்னும் எவ்வளவோ தூரம் செல்ல வேண்டும்தான். ஆனால் அவர்களது ஓர் ஆண்டு வளர்ச்சி, நம்பிக்கையூட்டும் வண்ணம் மிகச் சிறப்பாகவே இருந்தது.

ஆனாலும், பரிமளாவின் அறிவிப்பு எல்லோருக்கும் ஆனந்த அதிர்ச்சியே.

அதிர்ந்தாலும், "ஆ...யிரத்தில் மூ..ன்றா? சீக்கிரமே கம்பெனியை மூடிவிடப் போகிறோமா?" என்ற பூபாலன் மீது, மற்ற எல்லோருமே பாய்ந்தார்கள். "நல்ல வார்த்தையே உன் வாயில் வராதா? மூடி கீடி என்று என்ன பேச்சு?" என்று திட்டினார்கள்.



''தலைவர் அபத்தமா பேசறார்னு புலம்பறியே... அப்படி என்னதான் சொன்னாரு?''
''இரண்டு கூட்டணியிலேயும் சேர்ந்துட்டா வெற்றி வாய்ப்பு அதிகமாச் சேன்னு சொல்றாரு!''
*- குரு.சுப்ரமணியன், சென்னை-35.*

"பின்னே என்னப்பா? மாதம் ஆளுக்கு மூவாயிரம் என்றால், மாதம் பன்னிரண்டாயிரம். ஆண்டுக்குக் கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம் ரூபாய் சுட்டால், அப்புறம் நிறுவனத்தின் உயிர் பட்டென்று போய்விடாதா?" என்று பதிலுக்குக் கேட்டான் பூபாலன்.

"திரும்பவும் பார்... சுடுவது, உயிர் போவது என்கிறாயே?'' என்றாள் சைதன்யா.

"நம் குதிரை மட்டும் சுரண்டலாம் என்பாள். நான் சொல்லக் கூடாதா? நியாய புத்தியோடு நீயே சொல்லும்மா, பரியம்மா'' என்று முன்னவளையே கேட்டுவிட்டு, சற்றுத் தள்ளிப் போய் நின்று கொண்டான் அவன்.

''சுரண்டினால் கொஞ்சம்தான் எடுக்க முடியும். சுடுவது என்றால் முழுசாக முழுங்கப்பட்டுவிடும். ஆனால் அதென்ன பரி, குதிரை என்று சொல்லிக்கொண்டு... அப்புறம் உன்னைக் 'குங்குமப்பூ' என்று கூப்பிட, எனக்கு எவ்வளவு நேரம் ஆகும்?" என்று திருப்பினாள் பரிமளா.

"என்னது? குங்குமப் பூவா? என்னுடைய அழகான சின்னப் பெயரில், குங்குமப்பூ என்று இவ்வளவு நீளமாக ஒரு குட்டிப் பெயர், எப்படி எங்கிருந்து வந்தது என்று மட்டும் சொல்லிவிட்டால், தாராளமாக உங்கள் விருப்பம் போலக் கூப்பிட்டுக் கொள்ளலாம்" என்று அறிவித்தான் பூபாலன்.

''மக்குப் பையா'' என்றாள்



சைதன்யா குரலில் சிரிப்புடன். "பாலில் கலந்து சாப்பிடும் பூவுக்கு என்னப்பா பெயர்? பூவையும் பாலையும் சேர்த்தே வைத்திருக்கிறாயே'' என்று அவள் விளக்கம் தர, "அடக்கடவுளே... இப்படிக்கூட ஒன்று இருக்கிறதா? எனக்குத் தெரியவே தெரியாதே" என்று சோகமானான் பூபாலன்.

"எப்படித் தெரிய முடியும்? இதெல்லாம் பொம்பளைங்க சமாசாரம்... ஆம்பளைங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று பெண்கள் இருவரும் சேர்ந்து சொல்லி, கிளுகிளுத்துச் சிரித்தனர்.

"அதானே பார்த்தேன்... மற்றபடி இந்தப் பூவுலகில் இந்த பாலனுக்குத் தெரியாதது எது?" என்று கனகம்பீரமாக பூபாலன் போஸ் கொடுக்க, எல்லோருமே சிரித்தனர்.

சிரித்து முடித்துவிட்டு, "சரி... சிரிப்பு, கேலி எல்லாம் முடிந்துவிட்டால், பரிமளம் சொன்னது பற்றி மண்டைக்குள் கொஞ்சநஞ்சம் மிச்சமிருப்பதை வைத்து யோசிப்போமா?'' என்று வினவினான் இலியாஸ்.

''கொஞ்ச நஞ்சமென்ன? என்னைப் பொறுத்தவரையில் நிறையவே உண்டு. அதனால்தானே, பாவம், யோசிக்கிற வேலையை உங்களுக்கும் சேர்த்து எப்போதும் நானே செய்துவிடுவது!"

நமுட்டுச் சிரிப்புடன் பூபால் கூறவும், ''அப்பாடி'' என்று ஆறுதல் மூச்சுவிட்டாள் பரிமளா. "நம்மில் ஒரு மேல்மாடி மட்டும் காலியோ என்று அடிக்கடி கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். நல்லவேளையாக அப்படி இல்லை என்று அதுவே சொல்லிவிட்டது..."

சிரித்தபோதும் இலியாசின், "ப்ளீஸ்ப்பா..."வுக்கு இணங்கி, எல்லோருமாகத் தீவிரமாக ஆலோசனையைத் தொடங்கினர்.

எதிலுமே அவர்கள் அப்படித்தான். எந்த முடிவு எடுப்பதானாலும் நால்வரும் கலந்து ஆலோசித்துத்தான் செய்வது. அப்படித் தீவிரமாக யோசித்துதான், நிறுவனத்துக்குப் பெயரிட்டதோடு, தேவையான பல சட்டதிட்டங்களையும் உருவாக்கியிருந்தனர். எல்லாவற்றையும் எழுதி, நாலு பிரதிகள் எடுத்து, ஒவ்வொன்றிலும் நாலு பேரும் கையெழுத்தே போட்டு, ஆளுக்கொன்றாக வைத்துமிருந்தனர்.

எல்லா நிறுவனங்களிலும் போல, அவர்களுக்கும் வாடிக்கையாளரே கடவுள். ஒரு வாடிக்கை பிடித்தால், தலைகீழாக நடந்தேனும், அதைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டும். அதாவது, நீக்குப்போக்காக விட்டுக் கொடுத்து நடந்துகொள்ள வேண்டுமே தவிர, சில சங்கடங்கள், மான ரோஷங்கள் பார்த்து, வாடிக்கையை விட்டுவிடக் கூடாது. அவரவர் பார்க்கத் தொடங்கும் வாடிக்கையை, அவர்களே தொடர்ந்து பார்க்க வேண்டும். ஏனென்றால், பழகிவிட்ட உணர்வில் வாடிக்கையாளர் வேறு இடம் போகமாட்டார்.

நம்மிடம் தப்பு இருந்தால், பூசி



**''ஆனாலும் உங்க பையன் ரொம்பவும் மோசம்...''**
**''என்ன செய்தான்..?''**
**''பிறவிப் பெருங்கடல் எந்தக் கண்டத்திலே இருக்குன்னு கேக்கறான்!''**
*- குரு.சுப்ரமணியன், சென்னை-35.*



மெழுகாமல், நஷ்டப்பட்டாலும் திரும்பச் செய்து கொடுத்து விடவேண்டும். மாறுபட்ட கருத்துகள் ஏற்பட்டால், ஜப்பானியர் போலப் பெரும்பான்மைக் கருத்தை முழுமனதுடன் ஏற்க வேண்டும். அப்படி ஏற்ற கருத்து வெற்றி பெற, முழு மனதுடன் பாடுபடவேண்டும்.

ஒருவருக்கொருவர் கோபம் தாபம் கூடாது. முடிந்தவரையில் சேர்ந்தே இருக்க வேண்டும். அப்படி ஒருவர் வேறுவழியின்றி விலக நேர்ந்தால், அவரது பங்கை, சக பங்குதாரர்களிடம்தான் கொடுக்க வேண்டும். வெளியே விற்கக் கூடாது... இப்படி எத்தனையோ!

எல்லாமே தொழில் வளர்ச்சியையும் மேம்பாட்டையும், கூடவே அவர்களது ஒற்றுமையையுமே மனதில் கொண்டு, நன்கு கலந்து ஆலோசித்துச் செய்த விதிமுறைகள். அன்றுவரை யாரும் மீறவில்லை. மீற நினைக்கவுமில்லை.

SMS

''பாதுகாப்பு ஏற்பாட்டைக் கவனிக்க என் மாமனார் வந்து போனார்...''

''எதுக்கு?''

''அடுத்த வாரம் என் மாமியார் இங்கே வரப் போறாங்களே!''

*- ஏ.நாகராஜன், சென்னை-75.*



இந்த ஓர் ஆண்டில் அனுபவக் குறைவினால் முதலில் சில கஷ்ட நஷ்டங்கள் நேர்ந்தபோதும், இளமையின் ஆர்வமும், உண்மையான உழைப்புமாக, மொத்தக் கணக்கு நல்ல லாபத்தையே காட்டியது. எனவே, ஆண்டுவிழாவை எல்லோரும் உற்சாகத்துடனேயே கொண்டாடினர்.

தொழிலில் அவர்களோடு தொடர்புடைய சிலரை மட்டும் அழைத்திருந்தனர். பட்டன், ஹூக் தைத்துத் தரும் சற்று மூத்த பெண்மணி, தையல் வேலை முடிந்ததும் துணிகளை அயர்ன் பண்ணித் தருகிறவர், காலையில் வந்து இடம் சுத்தம் செய்கிற பெண், மிக முக்கியமாகத் துணிகளில் ஜர்தோஸி, குந்தன் என்று அலங்காரப் பூவேலை செய்து தரும் மனோகரி, அவளுடைய சுட்டிப்பையன் சின்னு, சின்னா என்றெல்லாம் அழைக்கப்படும் மூன்று வயது சின்னக்கிருஷ்ணன்.

மனோகரியும் சைதன்யாவின் வயதுடையவள்தான். ஆனால், முன்னவளுடைய பெற்றோர் செய்த தவறு, தப்பான ஒருவனுக்கு அவளைச் சிறுவயதிலேயே திருமணம் செய்து கொடுத்தது. மணமாகி ஆறு மாதங்களுக்குள்ளாகவே மனோகரி கொண்டு வந்த நகை, தொகை அனைத்தையும் எடுத்துக்கொண்டு, வயிற்றில் பிள்ளையையும் கொடுத்துவிட்டு, அந்தக் கணவன் காணாமல் போய்விட்டான்.

கல்யாணம்தான் தவறு என்றால், அவனைக் கணவன் என்பதும் தவறே என்று தெரிந்தபோது, அந்தக் குடும்பமே உடைந்து போயிற்று. இப்போது அவன் இன்னொருத்தியுடைய கணவன் என்பது காலம் கடந்து தெரிந்த உண்மை.

அவளது நல்லகாலம்... துணிகளில் பூவேலை செய்யக் கற்றிருந்தாள். அவளது மாதிரிகள், இவர்கள் நாலு பேருக்குமே பிடித்துப் போகவே, 'திரும்பிப் பாரி'ன் அலங்காரப் பூவேலைகளுக்கு அவளே என்றாகிப் போனது. அவர்களோடு சேர்ந்து மனோகரியும் வளர்ந்து, இப்போது அவளிடம் இரண்டு பேர் வேலை செய்தனர்.



மனோகரியுடைய பையன் சின்னு, அங்கே எல்லோருக்கும் செல்லம். தூக்கித் தூக்கிக் கொஞ்சுவார்கள். அதிலும் பூபால், சிறுவனுக்கு நிறைய சாக்லெட் வாங்கிக் கொடுத்து, மனோகரியிடம் திட்டும் வாங்கிக் கொள்வான். அசடு வழிந்தபடி!

**அ**ன்றும் அப்படித்தான்... விழாவுக்கு மனோகரியையும் அழைத்திருந்தார்கள். பிள்ளையை எதிர்பார்ப்பார்கள் என்று அறிந்திருந்ததால், மகனையும் சீவிச் சிங்காரித்து உடன் அழைத்து வந்திருந்தாள்.

காலையில் சீக்கிரமே வந்திருந்து, அவரவருக்கு விருப்பமான விதத்தில் கடவுளை வணங்கினார்கள். அதுவும், அவர்கள் முன்னரே திட்டமிட்டதுதான்.

''அடுத்த ஆண்டு இதே வேளையில், இந்தத் தொழிலில், நாம் முதலாமிடத்தைப் பிடித்து, லட்சங்களில் சம்பாதிக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்ளுங்கள்'' – இலியாஸ் சொல்ல, அதன்படியே எல்லோரும் மனதை ஒருமுகப்படுத்தி வேண்டினர்.

கூடவே சேர்ந்து, ''ஸாமி காப்பாட்டு'' என்று கீழே விழுந்து வணங்கி எழுந்து, உடனே "எங்கே லட்டு?'' என்று கேட்டு ஒரு சிரிப்பலையை எழுப்பினான் சின்னா.

"லட்டு இல்லாட்டி, சாக்லெட்டே பரவால்ல'' என்று பெருந்தன்மை போலக் கூறியவன், "இவ்ளோ நீள சாக்லெட்'' என்று, அவனது குட்டி முழங்கை வரை நீட்டி அளவு காட்டினான்!

முகம்சிவக்க, "உஷ்... சும்மா இருடா'' என்று மனோகரி அதட்ட, "சின்னப்பிள்ளையை அதட்டாதேம்மா... என்ன அழகாகக் கும்பிடுகிறான்'' என்றாள் பட்டன் தைக்கும் பெண்மணி.

"அங்கிள் வாங்கித் தருகிறேன்... வாடா'' என்று பூபாலன் அன்போடு அழைத்தான்.

ஆனால், "அதெல்லாம் வேண்டாம்'' என்று கத்தக் கத்த மகனை, மனோகரி தன்புறம் இழுக்கவும் பூபாலனின் முகம் லேசாக வாடியது.

சைதன்யா யோசனையோடு பார்ப்பதைக் கவனித்து, தன் தலையில் ஒரு தட்டுத் தட்டி, "சின்னுவுக்குச் சாக்லெட் ஒத்துக்கொள்வது இல்லை என்பது அடிக்கடி மறந்து போகிறது'' என்று சமாளித்தான்.

அடிக்கடி? மனோகரியிடம் ஆர்டர் கொடுப்பதற்கும், பூவேலை முடிந்து தயாரானவற்றை வாங்கி வருவதற்கும், 'வீட்டுக்குப் போகிற, வருகிற வழி' என்று சாக்கிட்டு, பெரும்பாலும் பூபாலனே செல்வது சைதன்யாவுக்கு நினைவு வந்தது.

தன் சிந்தனையை வெளிக்காட்டாமல், எல்லோருக்கும் இனிப்பு வழங்கியவாறே பாராமல் பார்த்தவளுக்கு, அந்த இரு ஜோடிக் கண்களிலும் இருந்த கவனமும், கவனத்தின் பின்னே மறைத்திருக்கும் வலியும் நன்றாகவே புலப்பட்டன.

பாம்பின் கால் பாம்பறியும். ஏனெனில், அது அவளும் பட்டறிந்து, பாடுபட்டுப் பயின்ற கலை ஆயிற்றே!

**(தொடரும்)**

''நம்ம தலைவர் ஏன் குட்ஸ் ரயில் டிரைவர்கிட்டே பேசிக்கிட்டிருக்காரு?''
''எதிர்க்கட்சி வண்டவாளங்களை தண்டவாளத்தில் ஏத்தப் போறாராம்!''
- குரு.சுப்ரமணியன், சென்னை-35.



# கண்ட நாள் முதலாய்...

ரமணிசந்திரன்

மனம் மயக்கும் மலர் தொடர்



'திரும்பிப்பார்' நிறுவனத்தின் ஆண்டு விழாவைப் பொறுத்த மட்டில், அன்றைய தினம் பொன்னெழுத்தில் பொறிக்கப்பட வேண்டிய நாள் என்றே இதன் பங்குதாரர்கள் அனைவருக்கும் தோன்றியது. பாகஸ்தர்கள் பூஜை முடித்து, உறவினர் போலப் பழகி விட்டிருந்த ஒருங்கிணைந்து வேலை செய்வோருக்கு இனிப்பு சிற்றுண்டி வழங்கி, தாங்களும் உண்டு, உண்ட இடம் ஒதுக்கி, சுத்தம் செய்து முடிக்கும்போதே வாடிக்கையாளர்கள் வரத்தொடங்கிவிட்டார்கள்.

பணிக்குச் செல்லும் முன்பாகவே அளவு தந்துவிட்டுப் போகலாம் என்று வந்தோம் என்றோ, தயாரானதை வழியில் வாங்கிப்போக என்றோ, அந்த நேரத்திலேயே சிலர் வந்தது நால்வருக்குமே மகிழ்ச்சியை அளித்தது. வாய்ப்பை விடாமல், அவர்களுக்கும் இனிப்பு வழங்கி வாடிக்கையாளர் உறவை மேம்படுத்திக் கொண்டார்கள்.

நாள் வெகு சந்தோஷமாகச் செல்கையில், மேலும் சிறப்பு கூட்டுவது போல சைதன்யாவின் பெயருக்கு கூரியர் வழி ஒரு கடிதம் வந்தது. அழகான பொன் வண்ணக் கோடுகளிட்ட ரோஜா நிறக் கடித உறையிலேயே மெலிதான ஓர் இனிய கமகமப்பு.

மற்றவர்களைப் போலவே அவளுக்கும் ஆச்சரியம்தான். இதுபோல உறையில், அவளுக்குக் கடிதம் அனுப்புகிறவர் – ஆணோ பெண்ணோ – யார் இருக்கிறார்கள்?

''ஏய்... என்ன? என்ன?'' என்று எல்லோரும் குறுகுறுப்பும் ஆர்வமுமாகப் பார்க்க, அந்த அழகான உறையைச் சிதைக்காமல் கவனத்துடன் பிரித்து, உள்ளிருந்த கடிதத்தை எடுத்துப் படித்தவள், ''ஆஹா'' என்று உற்சாகத்துடன் ஒரு குதி குதித்து நின்றாள்.

மற்றவர்கள் ஆவலாகப் பார்க்க, ''நம்முடைய முதல் ஒரு லட்சம்'' என்று கடிதத்தைத் தூக்கிக் காட்டி, மகிழ்ச்சியோடு அறிவித்தாள் அவள்.

''என்ன சார் அநியாயமா இருக்கு... உங்க மனைவி எங்க வீட்டு கிச்சன்ல வந்து சமையல் பண்றாங்க..?''

''என்ன பண்றது... வாஸ்துபடி எங்க வீட்டு கிச்சன் இங்கதான் இருக்கணும்னு ஜோசியர் சொல்லிட்டாரே!''

– வி.கிருஷ்ணகுமார், சென்னை-48.



SMS

சேர்ந்து அமர்ந்து, கடிதத்தை ஆராய்ந்த மற்ற மூவருக்குமே அப்படித்தான் தோன்றியது. அந்த அளவுக்குத் தொழில் பெருக்கத்தைத் தரப் போவதாகக் கோடி காட்டியது கடிதம்.

யாரோ ஒரு திருமதி நீதா பரன், 'திரும்பிப் பாரி'ன் உடை ஒன்றை ஒரு பார்ட்டியில் பார்த்தாளாம். பிடித்துப் போயிற்றாம். அதிலும், கைப்பை, கூந்தலுக்காக எலாஸ்டிக் பேண்ட், செருப்பு வரை அவர்கள் பொருத்தமாகத் தேர்ந்தெடுத்துக் கொடுத்ததாகக் கேள்வியுற்றதும், ரொம்ப ரொம்பப் பிடித்துப் போயிற்றாம். அதுபோல அவளுக்கும் வேண்டுமாம். ஒன்றல்ல... குறைந்தபட்சமாகப் பத்து செட்.

அவை தவிர, தொடர்ந்து சில முக்கியமான விழாக்கள் வர இருப்பதால், மிகவும் உயர்ந்த 'பார்ட்டி' உடைகளே நாலேனும் தேவையாம்.

இப்படியெல்லாம் எழுதியவள், கடைசியாக மிக முக்கியமான குறிப்பாக, பணம் கணக்கல்ல, உடைகளின் நேர்த்திதான் முக்கியம் என்று அடிக்கோடிட்டு எழுதியிருந்தாள்.

சிறப்பான உடையமைப்பு பற்றி நால்வருக்குமே மிகுந்த தன்னம்பிக்கை இருந்ததால், இந்த வாடிக்கை நிச்சயமாகக் கைக்கு வரும் என்று ஐயமற எண்ணினர்.

உடைகளின் வடிவமைப்பு, வண்ணம், துணி பற்றியெல்லாம் பேசுவதற்காக, பிரபல நட்சத்திர ஹோட்

டல் ஒன்றின் காஃபி ஷாப்புக்கு, மறுநாள் மாலை ஐந்து மணிக்கு வருமாறு அழைத்திருந்தாள், அந்தப் பெண், திருமதி நீதாபரன்.

வெறும் 'எம்எஸ்' போடாமல், 'திருமதி' என்று குறிப்பிட்டதில், திருமணம் ஆனவள் என்று நிச்சயமாகத் தெரிவித்தாள்.

எப்படி இருப்பாளோ? சில பெண்களைப் போல, மணமானதும் ஊதி விட்டிருந்தால், கொஞ்சம் சிரமம்தான். தான் பெருத்திருப்பது புரியாமல் உடை ஒல்லியாகக் காட்டவில்லை என்பார்கள். ஆனால், குண்டுப்பெண்களையும், ஏற்ற உடையால் அழகாகக் காட்டத் தங்களால் முடியும் என்ற திடமும் இருந்ததால், அந்த ஆண்டின் முதல் லட்ச ரூபாய் ஒப்பந்தம் நிச்சயமாகக் கிடைக்கும் என்ற உறுதியோடு, நீதாபரனைச் சந்திப்பது பற்றித் திட்டமிடலாயினர்.

ஒல்லி, குண்டு என்று எல்லாவித உடலமைப்புகளுக்கும் பொருத்தமான உடைகளின் வரைபடங்கள், அந்தந்த உடைகளுக்கு ஏற்ற துணிகள், உடைக்கேற்ற மற்ற துணைப்பொருட்கள் என்று தேவையான அனைத்தையும் பற்றி விவாதித்து, விவரங்களைத் திரட்டினார்கள்.

திரட்டப்பட்ட விவரங்களோடு, யார் யார் போவது என்று யோசித்தார்கள். கடிதம் வந்தது சைதன்யாவின் பெயருக்கு என்பதால், அவள் செல்ல வேண்டியது கட்டாயம். ஆனால், என்ன தான் நட்சத்திர ஹோட்டல் என்றாலும், அவளைத் தனியே அனுப்ப, மற்ற யாருக்கும் மனமில்லை.

"மண்டையில் கனம் ஏறி விடுமே என்று சொல்லப் பிடிக்கவில்லை தான். ஆனாலும், அழகாக இருக்கிறாயே... இந்தக் கடிதத்தை மட்டும் நம்பி உன்னை எப்படித் தனியே அனுப்புவது?'' என்றான் பூபாலன்.

மற்ற இருவரும் ஒப்புதலாகத் தலையாட்ட, ''இங்கே நாம் நாலு பேருமே, அவரவர் வழியில் பார்க்க நன்றாக இருப்பவர்கள்தான். ஆனால்...'' என்றவளை இடையிட்டு, "ஆனாலும், இவ்வளவு அடக்க ஒடுக்கத்தை நான் எதிர்பார்க்கவே இல்லைப்பா. பயங்கரமா ஷாக் கொடுத்துவிட்டாயே'' என்றான் பூபாலன், சொல்லுக்கேற்ற நடிப்புடன்.

சிரிப்பினூடே கையில் இருந்த தடிமனான குறிப்புப் புத்தகத்தை ஓங்கிக் காட்டி, ''முக்கியமான பேச்சின் நடுவே, இப்படி வேடிக்கை பண்ணினால், இதாலேயே ஒன்று போட்டு, மெய்யான அதிர்ச்சியே தந்து விடுவேன். ஜாக்கிரதை'' என்று எச்சரித்தாள் சைதன்யா. அவன் கைகட்டி வாய் பொத்திக் கொள்ள, "ஆனாலும் தனியே போக வேண்டாம், சைது'' என்றாள் பரிமளா.

"இல்லைக்கா, எனக்கும் அதே கருத்துதான்...''

"அரை சென்டி

''உங்க அம்மாகிட்ட எந்த அதிர்ச்சியான நியூஸையும் சொல்லாதீங்க... அவங்களால தாங்கமுடியாது!''
''இந்த விஷயத்தை என் மனைவிகிட்ட சொல்லாதீங்க டாக்டர்... சந்தோஷத்துல அவளுக்கு அதிர்ச்சியாகிடப் போகுது!''
- வி.சாரதி டேச்சு, சென்னை-5.



**SMS**





மீட்டர் மேக்கப்பை குறைத்துப் போட்டிருந்தால், இந்தப் பிரச்னையே எழுந்திராது'' என்று வாயை மூடியிருந்த விரல்களின் வழியே கூறினான் பூபாலன்.

அவனை லேசாக உறுத்துவிட்டு, "வரவர ரொம்பவும் லொடலொடக்கிறாய், பூபால்'' என்றாள் பரிமளா, சற்று கண்டிப்பான குரலில்.

பூபாலனின் கண்களைப் பார்த்த சைதன்யாவுக்கு, இந்த லொடலொடப்பு ஏன் என்று புரிந்திருந்ததால் மனம் உருகியது.

''வேலைக்கு நடுவே இப்படி ஒரு கலகலப்பும் நமக்குத் தேவைதானே, பரிமளாக்கா'' என்று அவள் சொன்னதை ஏற்று, ''அதுவும் சரிதான். ஒரேயடியாக வேலை வேலை என்று இருந்தால் தரம் குறைந்துவிட வாய்ப்புண்டு'' என்றான் இலியாஸ்.

தொடர்ந்து சைதன்யாவிடம், "ஆனால், நீ என்ன சொல்ல வந்தாய் சைதன்யா?'' என்று வினவினான்.

''போக இருப்பது, பெரிய ஹோட்டல்தான். ஆனால், ஏதோ காரணமாக, அந்த நீதாபரன் வரத் தாமதம் ஆனது என்று வைத்துக் கொள்வோம். அவ்வளவு பெரிய ஹோட்டலில், நான் தன்னந்தனியே உட்கார்ந்து இருப்பது, தப்பான கருத்தை உருவாக்குமோ என்று இருக்கிறது'' என்றாள் அவள்.

''அதற்காகத்தான் தனியே போக வேண்டாம் என்றேன். அதோடு, விற்பனைப் பேச்சில் நம் லொடலொடாதான் கெட்டிக்காரன். நீங்கள் இருவருமாகப் போய் வாருங்கள். சரிதானே?'' என்று பரிமளா சொன்னது, எல்லோருக்கும் ஏற்புடையது ஆயிற்று.

"அந்த நீதாபரன் சாப்பாடு போடுவாளா?'' என்று பூபாலன் ஆர்வம் காட்டிக் கேட்க, எல்லோரும் நகைக்க, ஆலோசனை முடிந்தது.

இப்படி சந்தோஷமாகத் தொடங்கியது, நட்சத்திர ஹோட்டலில் காத்திருக்கக் காத்திருக்க, மனம் வெறுத்துப் போயிற்று.

முதலில், காஃபி ஷாப்பின் இருக்கை, மேஜை அமைப்புகள், வண்ணங்கள், அவற்றுக்குப் பொருத்தமாகக் காணப்பட்ட பல்வேறு அழகுச் சின்னங்கள், வந்து போவோரின் உடைகள் என்று, இருவருக்கும் பொழுது நன்றாகத்தான் போயிற்று.

ஆனால், பத்து நிமிஷம், கால் மணி நேரம் காத்திருக்கலாம். மிஞ்சி மிஞ்சி அரை மணிக் காலமும் பரவாயில்லை... ஆனால், அரை, ஒன்றாகி, ஒன்றரை மணி நேரம் ஆன பிறகும், நீதாபரன் பற்றிய மூச்சுப் பேச்சே இல்லாது போகவும், பொறுமையிழந்து இருவரும் எழுந்துவிட்டனர்.

யாரோ அவர்களை முட்டாளடித்து இருக்கிறார்கள். அவர்கள் இடமும் இல்லாமல், இவர்கள் இடமும் இல்லாமல், பொது இடத்திற்கு வரச் சொன்னதே அதற்காகத்தான் போலும்.

என்னென்னமோ



யோசித்தவர்கள், இதை நினைத்துப் பார்க்கவே இல்லையே. ஹோட்டலுக்கு வந்து, சும்மா உட்கார்ந்திருக்க மனமின்றி வரவழைத்து அருந்திய காஃபிக்கான பில்லைப் பார்த்ததும், இன்னமும் எரிச்சல் அதிகம் ஆயிற்று. அந்த நீதாபரனை வாயார, மனதாரத் திட்டியபடியே இருவரும் அவர்களது அலுவல் இடத்துக்குப் போய்ச் சேர்ந்தனர்.

என்ன, என்ன என்று காத்திருந்த மூத்தவர்களுக்கும் விஷயம் அறிந்து கோபம்தான்... ஏமாற்றம், வருத்தம் எல்லாமுமே.

''நாமும் யோசித்திருக்க வேண்டும். கடித உறை, கடிதம் எழுதிய காகிதம் எல்லாம், இவ்வளவு சிறப்பாக இருந்தாலும், ஒரு டெலிபோன் எண் கூட அதில் குறிக்கப்படவில்லையே என்று யோசித்திருக்க வேண்டும். எவ்..வளவு பணம் என்று பணக்கணக்கில் மயங்கி, ஒரு செல் எண் கூட இல்லையே என்ற சாதாரண விஷயத்தைக் கவனியாது இருந்துவிட்டோம். இது நமக்கு இன்னொரு பாடம். ஒரு 'செல்', தரைவழி போன் இல்லாதவள், எப்படி இவ்வளவு பெரிய ஆர்டர் தருவாள் என்று யோசிக்காது போனோம். போகட்டும். இதற்காகச் செலவானதைப் புத்தி கொள்முதல் என்று வைத்துக் கொள்வோம்...'' என்றான் இலியாஸ்.

நடந்ததிலும் ஒரு நல்லதைக் கண்டுபிடித்துச் சொன்னபோதும், அவனுக்கும் வருத்தமே என்பது சைதன்யாவுக்கு நன்கு தெரிந்தது.

''புறமுதுகிட்டு ஓடிவந்த மன்னர், ஏன் டி.வி. காம்பியரர் மேல கோபமா இருக்காரு?''
''ஓடிவந்த பாதையை மறிச்சு நின்னுட்டு, 'போரைப் பத்தி என்ன நினைக்கறீங்க?'ன்னு மைக்கை நீட்டி கேட்டாராம்!''
*- சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.*

**SMS**



பூபாலனின் கலகலப்பு காணாமல் போயிருந்தது.

கடிதம் அவள் பெயருக்கு வந்ததால், எல்லாம் அவளது தவறே போல சைதன்யாவுக்கு மனதுக்கு வருத்தமாக, கூடவே அவமானமாகவும் இருந்தது. ஏனெனில், 'முதல் ஒரு லட்சம்' என்று பணக் கணக்கில் மனதைத் திருப்பிக் குதித்தவள், அவளே தானே?

''எல்லாம் என் தப்பு. பணம் பற்றி முதலிலேயே பேசியது நான் தான்'' என்றாள் சின்னக் குரலில்.

அவளது குரல் சொன்ன வருத்தம் உணர்ந்து, ''சரி சரி... விடு, சைது'' என்றாள் பரிமளா.

''இலியாஸ் சொன்னது போல, நம் எல்லோருக்குமே இது புத்தி கொள் முதல்தான். என் தப்பு; உன் தப்பு என்று வருத்தப்படத் தேவையில்லை. கொஞ்சம் விலை கொடுத்து, ஒரு பாடம் பயின்றிருக்கிறோம். அப்படி ஒன்றும் தாங்க முடியாத அதிக விலையும் அல்ல. சில நூறுகள் தானே? அதிலேயே தப்பித்தோம் என்று ஆறுதலே அடையலாம். அங்கே போக வர ஆட்டோ, அங்கே சாப்பிட நேர்ந்த காபி, இன்னும் எல்லாச் செலவுகளையும் எழுதிக் கொடுத்துப் பணம் பெற்றுக் கொள், சைது'' என்றாள் பரிமளா.

''ஆனாலும் இந்த ஓரவஞ்சனை உனக்கு ஆகாது, பரி. சொன்னால் கோபப்படுகிறாய். ஆனால், முகத்

தில் கண் மறைப்புக் கட்டிய குதிரை நேரே முன் பக்கமே பார்ப்பதுபோல, நீயும் பெண்களை மட்டுமேதானே எப்போதும் நினைக்கிறாய்?'' என்று பெரிதாகக் குறைப்பட்டான் பூபாலன்.

ஒரு கணம் கூர்ந்து விட்டு, "அங்கே செலவு செய்தது யார்?'' என்று சைதன்யாவிடம் கேட்டாள் பரிமளா.

சைதன்யா முறுவலிக்க, ''ஆமாம், அதையும் அவளிடமே கேள். அங்கே அழுதது எல்லாம் நான். ஆனால், பணத்தை சைதன்யாவிடம் கொடுக்கிறேன் என்கிறாயே. என் காசு அவ்வளவும் அம்பேலா?'' என்று மீண்டும் சோகக் குரலிலேயே இழுத்தான் அவன்.

"நிஜம்தான் பரிமளாக்கா, நான் ஆண்பிள்ளைச் சிங்கமாக்கும். நானேதான் பணம் கொடுப்பேன் என்று பிடிவாதம் பிடித்துப் பணத்தைக் கொடுத்தவன், இதோ இந்த புத்திசிகாமணியேதான்'' என்று உண்மையைச் சொன்னாள் சைதன்யா.

"அப்ப்..பா... ஒரு வழியாக ஒப்புக்கொண்டுவிட்டாள். இனி என் சொத்து என்னிடம் வந்து சேர்ந்துவிடும். இடைவழியில் எங்கே போய்விடுமோ என்று நடுங்கிக் கொண்டிருந்தேன்...''

"ஆமாம். பெரிய ஆயிரம் கோடி ரூபாய் பொக்கிஷமாயிற்றே! கைவிட்டுப் போய்விடுமோ என்று பெரிய்ய கவலையாகத்தான் இருந்திருக்கும்!''



''மன்னா... உங்கள் ஞாபகசக்திக்கு ஒரு பரீட்சை...''
''என்ன அமைச்சரே?''
''உங்கள் நாற்பத்தி மூன்றாவது மனைவியின் பெயர் என்ன?''
*- அனார்கலி, தஞ்சாவூர்.*



**SMS**

வருத்தமான சூழ்நிலையை எல்லோருமாக மாற்ற முயன்று, கிட்டத்தட்ட வெற்றியை நெருங்கிவிட்ட வேளையில், ''சார்...'' என்ற அழைப்புடன் ஒரு நபர் உள்ளே வந்தான்.

மடிப்பு கலையாத வெண்ணிறச் சீருடையில் வந்தவன், "இங்கே சைதன்யா...'' என்று கேட்டறிந்து, "உங்களிடம் இதைக் கொடுக்கச் சொன்னார்கள். எதற்கோ பரிகாரமாம்'' என்று கொடுத்துவிட்டு, நில்லாமல் திரும்பிப் போனான்.

ரோஜா நிற உறையைப் பார்த்ததுமே அவனைக் கூப்பிட்டுத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் போலத்தான் எல்லோருக்கும் முதலில் தோன்றியது. ஆனால், 'பரிகாரம்' என்ற வார்த்தை கொக்கி போட்டு இழுக்க, உறையைப் பிரித்துப் பார்த்தவர்கள் அப்போதும் திகைத்தார்கள்.

உறையினுள், ஆறு ஆயிரம் ரூபாய் நோட்டுகளும், 'வர முடியவில்லை. வெட்டியாகக் காக்க வைத்ததற்குப் பரிகாரமாக ஐயாயிரமும், ஹோட்டல் செலவுக்கு ஆயிரமும். நாளை மாலை சந்திப்போம்' என்று எழுதப்பட்ட ஒரு சின்ன துண்டுக் காகிதமும் இருந்தன.

மன்னிப்பென்று கேட்கவில்லைதான். ஆனால், வெறுமனே காக்க வைத்ததற்கே ஐயாயிரம் வெட்டும் இந்த வாடிக்கையை எப்படி விடுவது என்ற கேள்வி எல்லோர் கண்களிலும் பிரதிபலித்தது.

**(தொடரும்)**

## ரமணிசந்திரன்

### மனம் மயக்கும் மலர் தொடர் 4



அன்று அவ்வளவு நேரம் வீணாகக் காத்திருக்க வைத்ததற்காக மன்னிப்பு கேட்கும் – குறைந்தபட்சமாக வருத்தம் தெரிவிக்கும் எண்ணம் கூட அந்த நீதாபரனுக்கு இல்லையே என்று சைதன்யாவுக்குச் சற்று உறுத்தலாகத்தான் இருந்தது.

ஆனால், "பரிகாரம் என்கிற சொல்லே அதைத் தெரிவிக்கவில்லையா?" என்றாள் பரிமளா.

"அது மட்டுமல்ல.... நம் கொள்கை என்ன? இந்த மாதிரிச் சின்னச் சின்னக் குறைபாடுகளைப் பெரிதுபடுத்தி, வாடிக்கையை விட்டுவிடக் கூடாது என்பதுதானே? வாடிக்கை பெருகும்போதுதான்... அதிலும், இப்படிப் பணக்கார வாடிக்கை பெருகும்போதுதானே வேகமான

வளர்ச்சியும் கிடைக்கும்? இது உனக்கும் தெரியும்தானே, சைதன்யா?'' என்றான் இலியாஸ்.

''சைதன்யாவின் மண்டை ஓடு கொஞ்சம் கடினமானது இலியாஸ். ஓங்கி ஒரு குட்டு குட்டிச் சொன்னால்தான் உறைக்கும். குட்டட்டுமா?'' என்று எழுந்தான் பூபால்.

''ஆஹா... குட்டுவாய், குட்டுவாய்! அங்கே அந்த நீதாபரணைத் திட்டோ திட்டென்று திட்டி, நாம் நகரத்திலேயே நம்பர்–1 டெயிலரிங் ஹவுஸ் ஆகப் போகிறபோது, அவள் நம்மிடம் வந்து, காலில் விழுந்து கெஞ்சினாலும் அவளுக்கு ஓர் உடை கூடத் தைத்துக் கொடுக்கக் கூடாது என்றெல்லாம் சொன்னது யார் என்று, உனக்கு ஏதாவது நினைவிருக்கிறதா? அல்லது வழக்கமான குழந்தைத்தனமாக மறந்துவிட்டாயா, பாலன் தம்பி?'' என்று கேலிக்குரலில் அவனுக்கு நினைவுறுத்தினாள் சைதன்யா.

பின்னர் இலியாசைப் பார்த்து, ''நான் போக மாட்டேன் என்று சொல்லவில்லை இலியாஸ்... அந்தப் பெண்மணியிடம் சற்று எச்சரிக்கை தேவை என்று எண்ணினேன். அவ்வளவுதான்'' என்றாள்.

''ஆமாம், அதுவும் சரிதான். அவள் எங்கேனும், அவளது வண்டி எதிலும் கூப்பிட்டால் சட்டென்று ஏறிப் போய்விட வேண்டாம். இங்கே எங்களுக்கு விவரம் தெரிவித்துவிட்டுப் போங்கள். விஷயம் அறிந்தவர்கள் வெளியே இருக்கிறார்கள் என்பதே, தப்புதண்டா செய்ய விடாமல் தடுக்கும். அதோடு, நாளைக்கும் இருவரும் சேர்ந்தே போங்கள்'' என்றான் இலியாஸ்.

''போச்சு... நாளைக்கான என் ஆயிரத்தெட்டு முக்கியத் திட்டங்களும் குப்பைத் தொட்டிக்குத்தானா? இந்த நிறுவனத்துக்காக நான் செய்யும் அளப்பரிய தியாகங்கள் எல்லோருக்கும் நினைவிருந்தால் சரி. ஹூம்!'' என்று பெருமூச்சு விட்டான் பூபால்.

''ஆமாமாம். இருந்திருந்து மகா கேவலமான இடமாக, ஒரு நட்சத்திர ஹோட்டலுக்கல்லவா போக வேண்டியிருக்கிறது. ரொம்பவே பாவம்தான்'' என்று இலியாசும் சேர்ந்து கிண்டலடிக்க, சற்று நேரம் சந்தோஷமாகக் கழிந்தது.

சற்றுமுன் வரை இருந்த ஏமாற்றம், சோர்வு மாறி எல்லோருக்கும் மறுபடியும் உற்சாகம் துளிர்த்தது.

**ப**ல தரப்பட்ட மாதிரிகளைச் சுமந்துகொண்டு மறுநாளும் சைதன்யாவும் பூபாலனும் புறப்பட்டனர். செல்லும்போது, ''இன்றும் அந்த அம்மாள் வராதிருந்து பணத்தை மட்டும் அனுப்பினால், எப்படி இருக்கும், சைது? ஒரு மாதம் இப்படியே போனால், வேலையே இல்லாமல் எவ்வளவு பணம் சேர்ந்துவிடும், பார். அடேயப்பா'' என்றான் பூபாலன்.



''ஐயோ... புத்தி போகிற போக்கைப் பார்! தினமும் இரண்டு மூன்று மணி நேரம் உருப்படியான வேலை எதுவும் செய்யாமல், 'இன்னும் காணோமே காணோமே' என்று கவலைப்பட்டே கழிக்க வேண்டுமா? அதை விட நல்லதாக நாலு செட் உடை தைத்துக் கொடுத்து, அதை நாலுபேர் பார்த்து ரசித்து, அவர்களும் நம்மிடமே தைக்க வந்து... இப்படி வாடிக்கை பெருகினால், நம் தொழிலின் வளர்ச்சி எங்கே போய் நிற்கும் என்று யோசியேன்பா'' என்றாள் சைதன்யா.

சற்றே அசடு வழிய, ''நீ சொல்வது, சரிதான்யா'' என்று ஒப்புக்கொண்டவனின் கண்களில் கனவு படர்ந்தது. ''நமக்குத் தொழில் பெருகும்போது, மனோகரிக்கும் வேலையும் வருவாயும் அதிகமாகும். ஆர்டர் எடுக்கவும், செய்து முடித்ததைக் கொடுக்கவும் அடிக்கடி வருவாள்'' என்றான் குரல் மென்மையுற.

சைதன்யாவின் பார்வையை உணர்ந்து, உடனேயே, ''அவள் வந்தால், அவள் பையன் சின்னக்கிருஷ்ணனும் வருவான் அல்லவா? அவன் வந்தாலே, அதிகப்படி 'பல்ப்' போட்ட மாதிரி, நம் இடமே பளிச்சென்று தோன்றவில்லை? அதனால் சொன்னேன்!'' என்று விளக்கினான்.

ஒப்புதலாகத் தலையாட்டியதோடு நிறுத்திக் கொண்டாள் சைதன்யா. மனோகரியுடைய மகனின் நினைவு, இவனுக்கு மறவாதிருந்தால்... அது போதும்.

காபி ஷாப்பின் நுழைவாயிலில் நின்று, பார்வையை ஒரு தரம் சுழல விடும்போதே, சீருடை அணிந்த வெயிட்டர் ஒருவன் ஓடி வந்தான். ''அதோ, அந்த மேஜைக்கு வரச் சொன்னார்கள்'' என்று அடையாளம் காட்டினான்.

முதல் பார்வைக்கு நீதாபரன் பேரழகியாகவே தோன்றினான். வெளேரென்ற நிறம், மெல்லிய அழகான மேனி, பொருத்தமான ஒப்பனை, கூந்தல் அலங்காரம். இயல்பாக இருப்பது போலத் தோன்றினாலும், அது ஒப்பனை என்பது, பெண்ணான அவளுக்குப் புரிந்தது. உதட்டுச் சாயம் மட்டும் இன்னும் கொஞ்சம் மங்கிய நிறமானதாக இருந்திருக்க வேண்டுமோ என்று சைதன்யா நினைத்தாள். இருந்திருந்தால் சருமத்தை இப்படி சோகை வெளுப்பாகக் காட்டியிராது. அப்போதுமே, அவள் நல்ல அழகிதான். இவளுக்கு உடைகள் வடிவமைப்பதில் சிரமமே இராது. எல்லாமே பொருந்தி அழகாகவே இருக்கும்.

வந்தவர்களின் வணக்கத்தைத் தலையசைத்து ஏற்றுக் கொண்டவள், அவர்களையும் அமருமாறு அருகிருந்த இருக்கைகளைக் காட்டினாள்.

''அனாவசியமாக அறிமுகங்கள் தேவையில்லை என்று நினைக்கி

''ஜோசியருக்கு நான் கொடுத்த கடன் சீக்கிரம் திரும்பாது போலிருக்கு..!''
''ஏன்?''
''தினமும் என் ராசிக்கு மட்டும், 'கடன் வசூல் தாமதமாகும்'னு பலன் எழுதறார்!''
- ஏ.நாகராஜன், சென்னை-75.

SMS



றேன். நீங்கள் யார் என்று எனக்குத் தெரியும். நான் நீதாபரன் என்று புரிந் திருக்கும். உட்காரலாமே!''

அவளது மெல்லிய மேனிக்குச் சற்றுக் கனத்த குரல்தான். இன்னும் கனத்த ஆண்குரலைப் பயிற்சியின் மூலமாகப் பண்படுத்தியிருக்கிறாள் என்று சைதன்யா ஊகித்தாள். இது வும் ஒரு வகையில் அவளுக்கு மகிழ்ச் சியையே அளித்தது. ஏனெனில், தன்னைச் சரியானபடி மேம்படுத்திக் கொள்கிறவர்கள், அதற்கெனப் பயின் றவர்கள், பிறர் சொல்வதைப் பெரும் பாலும் ஏற்றுக் கொள்வார்கள். அவர்களுக்குப் பொருத்தமில்லாத வண்ணம், டிசைன்களில் பிடிவாத மாக இருக்க மாட்டார்கள்.

நீதாபரனின் நிறத்துக்கும், முக அமைப்புக்கும் ஏற்ற உடைகளைச் சைதன்யா கற்பனையில் காணத் தொடங்கிவிட, பூபாலனை ஏற இறங் கப் பார்த்தாள் நீதா.

''துணையாக வந்தீர்களா? அல்லது துணைவராகப் போகிறீர்களா?'' என்று அவள் கேட்கவும் திகைத்த பூபா லன் உடனே சமாளித்து, ''துணைவரா? மேடம்... யாராலாவது புலியோடு சேர்ந்து வாழ முடியுமா? அப்படி நேராமல் என் னைக் கடவுள் காப் பாற்றுவாராக!'' என்று வேடிக்கை போல, விழி களை மேலே உருட்டிக் கைகூப்பி வேண்டிக் கொண்டான்.

லேசாக முறுவலித் தவாறே, ''நீங்கள்?'' என்று சைதன்யாவை விசாரித்தாள் நீதா.

தன் சொந்த விஷயம் பேச, சைதன் யாவுக்கு விருப்பம் இல்லைதான். ஆனால், ஒரு வளமான வாடிக்கை யாளரின் முகத்தில் அடித்தாற்போல, அதைச் சொல்லவும் முடியாமல், பூபா லனைப் பின்பற்றி, ''அது குரங்கோடு சேர்ந்து வாழும் ஆசை வருகிறபோது யோசிக்க வேண்டிய விஷயம்'' என் றாள் கம்பீரமாக.

''சேச்சே... அவர் ஒன்றும் குரங்கு போல இல்லை'' என்று நீதா மறுக்கும் போதே, ''பார்த்தாயா... பார்த்தாயா? உன்னைப் புலி என்று இன்றுதான் பார்த்த இவர்கள் கூட ஒப்புக் கொள் கிறார்கள்'' என்று குறுக்கிட்டுக் கூறி னான் பூபாலன்.

'என்ன வேண்டுமானாலும் எண் ணிக் கொள்ளட்டும்... நிறைய ஆர் டர்கள் தந்தால் போதும்' என்று எண்ணியதை வெளிக்காட்டாமல், சிறு புன்னகையோடு நிறுத்திக் கொண் டாள் சைதன்யா. ஆனால் உரையா டலை நீதா விடாமல் தொடர்ந்து, பூபாலனுக்குப் பதில் சொன்னாள்.

''அப்படி இல்லை. ஆனால், ஏதோ ஒரு வேகம், யாருக்கோ ஜெயித்துக்காட் டும் வெறி சைதன்யா வுக்குள் இருக்கிறது'' என்றாள், அவளையே பார்த்து. அத்துடனும் நிறுத்தாமல், ''மிஸ்டர் பூபாலனைக் குரங்கு என்பதானால்... வேறு யாரேனும் அழகன் மன தில் குடியேறிவிட்டாரா? காதல்?'' என்று மேலும் துருவினாள்.

''எனக்குத் தொழில் மீதுதான் காதல். இந் தத் தொழிலில் முதல்

''என் மனைவி கோபம் வந்தா 1ல இருந்து 100 வரைக்கும் எண்ண ஆரம்பிச்சிடுவா...''

''கோபம் குறைஞ்சிடுமா..?''

''குறைஞ்சிடும்... நான் நூறு தோப்புக்கரணம் போட்டு முடிச்சதும்!''

-க.கலைவாணன், பாப்பிரெட்டிபட்டி.

SMS



இடத்தை அடைந்து நிறைய சம்பாதிக்க வேண்டும். அதுதான் எனக்கு முக்கியம்'' என்றாள் சைதன்யா எரிச்சலை அடக்கிக்கொண்டு.

''நிறையச் சம்பாதிக்க வேண்டும் என்றால்... அதற்குத் தொழில்தான் வழியா? யாராவது பணக்காரனைப் பிடித்து மணந்துகொண்டால் போதாதா?'' என்று நீதா விடாமல் கேட்கவும், சைதன்யாவின் பொறுமை மறைந்தது.

'நீ மெல்லுவதற்கான அவலை உன் வாய்க்குள் போடுகிறவள் நானல்ல' என்று உள்ளூர கடுகடுத்தபடி, ''அதெல்லாம் உழைக்கப் பிடிக்காத, கையால் ஆகாதவர்களின் வழி மேடம். எனக்குத் திறமை இருக்கிறது. உழைக்கும் ஆர்வம் இருக்கிறது. ஜெயிப்பேன் என்கிற நம்பிக்கையும் இருக்கிறது. அதனால் இந்தக் குறுக்கு வழிகளை நினைத்துப் பார்க்கவும் நான் தயாரில்லை. நேரம் ஆகிறதே... வந்த வேலையைப் பார்ப்போமா?'' என்று கையோடு கொண்டு வந்திருந்த ப்ரீஃப் கேசை எடுத்தாள் அவள்.

நீதா புன்முறுவல் செய்து, ''சொந்த விஷயம் பேசப் பிரியம் இல்லை என்று அழகாகச் சொன்னீர்கள். சரி வேண்டாம். ஆனால், என்னதான் உங்களுக்கு தொழில் மீது காதல் என்றாலும், அதைத் தொடங்க

''எதுகுற்றம் புலவரே... நான் எழுதிய பாடலில் குற்றமா?''
''என் பிழைப்பில் மண்ணை அள்ளிப் போட்டு, எனக்குப் போட்டியாகத் தாங்கள் பாட்டு எழுதுவதே குற்றம் மகாராஜா!''
-என். பார்வதவர்த்தினி, சென்னை-15.

SMS



இவ்வளவு அவசரப்பட வேண்டாம். உங்கள் இருவருக்கும் எப்படியோ... எனக்குப் பசிக்கிறது. கொஞ்சம் சாப்பிட்டு விட்டு, அப்புறமாக வேலையைத் தொடங்கலாம்!'' என்று இனிமையாகச் சொல்லி முடித்துத் திரும்பிப் பார்த்தாள்.

அதற்காகவே காத்திருந்தது போல கொண்டுவந்து பரப்பப்பட்ட பலவேறு சிற்றுண்டிகளைப் பார்க்கையில், பூபாலனின் விழிகள் தெறித்துவிடும் போல ஆயின.

**அ**த்தனை வகையான கேக்குகள். சைதன்யாவுக்கும் ஆச்சரியமே! இந்த ஹோட்டலில் ஒரு காபியே என்ன விலை என்று அவள் முன் தினம்தான் அறிந்திருந்தாள். இவற்றின் விலை, இந்தப் பெண்ணுக்கு துரும்பாகவே இருக்கலாம். ஆனால், அந்தத் துரும்பையும் அவள் அறியாத இருவருக்காக அவள் ஏன் செலவு பண்ண வேணும்? ஒரு வேளை முந்தைய நாளுக்காக வருத்தம் தெரிவிக்கிறாளா? அதற்கு ஒரு வார்த்தை போதுமே. அதைச் சொல்லாமல்...

''சாப்பிடுங்கள்'' என்று உபசரித்து விட்டுத் தன்புறமாக ஒரு கிண்ணத்தை நீதா இழுக்க, பூபால் கேக் ஒன்றைக் கையிலெடுத்தான். அதிகமாகக் க்ரீம் இல்லாத ஒன்றைத் தேடினால், அப்படி எதுவும் இல்லவே இல்லை. எதுவும் வேண்டாம் என்றால் மரியாதை குறைவாகத் தோன்றுமோ என்று, ஒன்றை எடுத்து மெல்ல மென்ற

படியே, நீதாவின் கிண்ணத்தைப் பார்த்த சைதன்யாவுக்கு உறுத்தியது. அத்தனை வகை உண்டிகளை வரு வித்த நீதா, வெறும் பழக்கலவையை அளைந்து கொண்டிருந்தாள். பசிப்ப தாக வேறு கூறியவள்!

சைதன்யா பார்த்துக் கொண் டிருக்கும்போதே, நீதா, சட்டெனக் கையைத் திருப்பி மணி பார்த்தாள். முன்னே இருந்த கிண்ணத்தை ஒதுக் கிவிட்டு, ''சைதன்யா, உங்களுக்கு முதலிலேயே எழுதியது போல, எனக்கு நிறைய உடைகள் வேண்டும். இப்போ தைக்கு, உடனே ஒரு பார்ட்டி உடை. என் மாமனார், மாமியா ரின் கல்யாண நாளுக் காக நான் ஏற்பாடு செய்திருக்கும் விருந்தில் அணிவதற்காக, சிறப்பா னதாக. அன்று காலை யில் கோயிலுக்குச் செல் வதற்காக, அடக்கமாக... ஆனால் அழகாக ஒரு சல்வார் செட். இப்படி முதலில் இரண்டு செட் வேண் டும். நான் தேர்ந்தெடுப்பதற்குச் சரி யாக, நாலைந்து டிசைன்கள் எடுத்துக் கொண்டு, என் வீட்டிற்குச் சரியாக நாளை மாலை ஐந்து மணிக்கு வந்து விடுங்கள். வீடு கிழக்குக் கடற்கரைச் சாலையில் இருக்கிறது!''




அந்தச் சாலைக்கு ஐந்து மணிக் குப் போனால், திரும்பி எப்போது, எப்படி வருவது? இவள் மெய்யா கவே அவர்களிடம் வாங்கப் போகி றாளா? அல்லது சும்மா அவர்களை அலைக்கிறாளா? ஆனால், அந்த ஆறாயிரம்?

சைதன்யா போலவே, தானும் குழம்பினாற்போல, பூபாலன் அவ ளைப் பார்த்தான். இருவரையும் கவ னியாது கைப்பையைத் திறந்து நோண் டிய நீதா, ஒரு 'செக்'கையும் முகவரி எழுதிய காகிதத்தையும் எடுத்து, பூபாலனிடம் நீட்டினாள். ''என் முக வரி, இருபதாயிரத்துக்கான செக். இதை, எனக்குத் தைக்க இருக்கும் உடைகளுக்கான முன்பணமாக வைத்துக் கொள்ளுங்கள். அவ்வப்போது கணக்குப் பார்த்து மேலே ஆவது, முன்பணம் என்று தரு கிறேன்'' என்று எழுந் தாள். ''நீங்கள் உண் டது போக மீதியை பார்சல் செய்து தரச் சொல்லியிருக்கிறேன். பணமும் கொடுத் தாயிற்று. நாளை மாலை ஐந்து மணி... முன்னே வந்தாலும் பரவாயில்லை. எக் காரணம் கொண்டும் தாமதம் ஆகாமல் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றபடியே எழுந்து, மடமடவென்று வெளியேறிச் சென்று விட்டாள்.

ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்ட அந்த இருவருக்கும், அப் போதும் குழப்பமாகத்தான் இருந் தது. ஆனால், அவளது வீட்டுக்குப் போவது நிச்சயம் என்பது உறுதியாகத் தெரிந்தது. இரண்டு தரம் நேரம் விர யமானதாலோ என்னவோ, சைதன் யாவுக்கு அது ஏனோ அவ்வளவாகப் பிடிக்காது போயிற்று.

(தொடரும்)

சொந்த விருப்பு வெறுப்புகளைத் தொழிலில் காட்டக் கூடாது என்று எல்லோருடனும் சேர்ந்து, அவளுமே ஒப்பியிருந்ததால், தன் மனநிலை குறித்து யாரிடமும் எதுவும் சொன்னாளில்லை சைதன்யா.

ஆனால், இயல்பாகவே கிழக்குக் கடற்கரைச் சாலையில் உள்ள வீட்டுக்குச் செல்ல வேண்டும் எனும்போது, அவ்வளவு தூரமா... போக வரவே எவ்வளவு ஆகும் என்று அந்தச் செலவு, அவர்கள் எல்லோருக்குமே பெரிதாகத் தோன்றியது.

வளர வேண்டுமானால், வளர்ச்சியைக் கவனிப்பதோடு, செலவையும் மட்டுப்



படுத்த வேண்டும்தானே? ஆனால், நீதாபரன் கொடுத்த செக் வேறுமாதிரியாக... பெரிய லாபம் வரும்போது செலவைப் பற்றி கவலைப்படக் கூடாது என்பதாகவும் அவர்களை எண்ண வைத்தது!

"இந்த ஒரு வாடிக்கை செலவுக்கு மிஞ்சி வரும் என்பதோடு, நீதாபரனின் உடைகளைப் பார்த்து, அந்த வட்டத்தில் வேறு பல வாடிக்கைகளும் நமக்குக் கிடைக்கக் கூடுமே! அதனால் இந்தச் செலவைப் பெரிதாக நினைக்கக் கூடாது" என்றாள் பரிமளா.

பண விஷயமாகப் பரிமளா சொல்வதைப் பொதுவாக எல்லோரும் ஒப்புக்கொள்வதுதான் வழக்கம். என்றாலும், "நீ சொல்வது சரிதான் அக்கா. ஆனால், செலவு மட்டுமில்லாமல் அவ்வளவு தூரம் போய் வர எவ்வளவு நேரம் வீணாகும்? அதையும் சற்று யோசிக்க வேண்டுமே" என்றாள் சைதன்யா மெதுவாக.

"ஆமாம். வேலை நேரமும் நிறையவே பயனற்றுப்போகும்தான். ஆனால், பின்னால் வரக்கூடிய நலன்களை நினைத்து, இதை முதலீடாக எண்ணிச் செய்யவேண்டியதுதான். அந்தப் பெண் இழுத்தடிப்பதைப் பார்த்தால், எதையும் சட்டென முடிவு செய்வாள் போலத் தெரியவில்லை! அதனால், அங்கே காத்திருந்து திரும்பி வருவதற்குச் சேர்த்தே ஆட்டோ பிடித்துப் போங்கள். ஒருவேளை தாமதமானாலும், அங்கிருந்து வருவது பிரச்னை ஆகாது!" என்று மேற்கொண்டு திட்டமிட்டான் இலியாஸ்.

போவது உறுதியாயிற்று!

ஓர் அழகான பெண்ணுக்கு உடை அமைக்கும்போதான வழக்கமான உற்சாகம், சந்தோஷம், சைதன்யாவுக்குத் தோன்ற மறுத்தது!

ஒருவேளை நீதாபரன் வம்பு பேச முயற்சித்ததால் இப்படித் தோன்றுகிறதா என்று எண்ணிப் பார்த்தால், 'சிறு வயசாக ஆணும் பெண்ணுமாக நாலுபேர் கூடவே இருக்கிறீர்களே, தப்பு நினைப்பு வரலியா? அல்லது உங்களுக்குள்ளேயே ஏதாவதா?' என்று நேரடியாகவே கேட்ட பெண் மணிக்குக்கூட அழகாக பிளவுஸ் தைத்துத் தந்திருக்கிறாளே... அதுவும் 'பிரின்சஸ் கட்'டில்!

நன்றி, தயவுபண்ணி, வருந்துகிறேன் என்பன போன்ற சுமுகத்தை வளர்க்கும் சில பல வார்த்தைகள் நீதாவுக்குப் பழக்கமில்லை என்றால், இப்போது பலருமே அப்படித்தானே இருக்கிறார்கள்! படிக்கும்போதும், பயிற்சி எடுத்தபோதும், நால்வருமாகத் தொழிலைத் தொடங்கிய இந்த ஓர் ஆண்டுகாலமாகவும் பலதரப்பட்ட மனிதர்களை சைதன்யா பார்த்துப் பழகியவள்தான். பணக்காரர்கள், பணமில்லாதவர்கள், சம வயதுக்காரர்கள், சின்னவர்கள், பெரியவர்கள் எல்லாரிடமும் கலகலப்பாகப் பேசக்கூடியவளும்




**''தலைவர் சரியான அலட்டல் பேர்வழின்னு சொன்னது உண்மைதான்!''**
**''என்னாச்சு..?''**
**''அவரோட பொண்ணை தேனிலவுக்கு சந்திராயன்ல ஏத்தி நிலாவுக்கு அனுப்பப் போறாராம்!''**

*- பி.என்.நரசிம்மமூர்த்தி, சென்னை-33.*

கூட!

நீதாவைப் பார்க்கும்போது, உடையமைப்புக்கு ஏற்ற உடல், முகம் என்பதற்கு மேல், சகஜமாகப் பழக முடியாமல் ஏதோ அவளைத் தடுப்பதாக உணர்ந்தாள் அவள். இந்தத் தடையை முகத்தில் காட்டிவிடுவோமோ என்று அவள் பயப்படவில்லை. உள்ளே என்ன இருந்தாலும் மறைத்து, முகத்தில் புன்னகையோடு இயல்பு போலப் பழகும் வல்லமை தனக்குக் கைவந்துவிட்டது என்ற திடம் நிறையவே இருந்தது!

ஆனால், காரணமற்றுத் தானாகத் தோன்றிய இந்த ஒதுக்கம், நீதாவுக்கு உடை அமைப்பதில் திறமையைக் குறைத்துவிடக் கூடாதே என்ற கவலைதான் அவளுக்கு! எனவே, பிடிவாதமாக நீதாவின் உருவத்தை மனதில் கொணர்ந்து, அவளுக்கேற்ற உடைகளை மனதில் உருவாக்கி, அவற்றை பூபாலனிடம் விவரித்து விவாதித்தவாறே, ஆட்டோவில் பயணம் செய்த நேரத்தைப் பயன்படக் கழித்தாள் சைதன்யா.

“மாமியார், மாமனாரின் திருமண நாள் என்றால், அநேகமாக சேலையாகத்தான் இருக்கும். நல்ல பூவேலை செய்து...”

“அந்த மாதிரி சேலை முழுதுக்கும் என்றால், மனோகரியிடம் கொடுத்து விட்டால் போதும். பிரமாதமாகச் செய்து விடுவாள்! நீதாபரன் மயக்கம் போட்டுவிடும்!”

“உண்மைதான் என்றாலும், மனோகரியின் புகழை, நாம் உடை விவரம் பேசி முடித்த அப்புறமாகப் பாடலாமே!” என்று சின்னதாக அவள் வைத்த குட்டில், பூபாலன் முகத்தில் அசடு வழியவும்... அவளுக்குச் சிரிப்பு வந்தது.

கூடவே யோசனையும் பிறக்க, “பெற்றவர்கள் செய்த பிழைக்காக, மனோகரியின் வாழ்வு பாழாவதை என்னால் ஒப்புக்கொள்ளவே முடியவில்லை, பூபால்!” என்றாள் சைதன்யா சீரியசாக.

அவளது ஓரக்கண் பார்வையைக் கவனியாமல், பூபாலனின் முகம் பளிச்சிட்ட விதம் அவன் மனதை அப்படியே எடுத்துக் காட்டிற்று. “இதையேதான் நானும் அவளிடம் அடிக்கடி சொல்லிக்கொண்டே இருக்கிறேன், சைது! ஆனால், இவ்வளவு நாகரிகத் தோற்றத்துக்கு, அவள் மனம் இன்னும் பழம் பாடாவதியாகவே இருக்கிறது” என்று பெருமூச்சுடன் குறைபட்டான் அவன்.

காற்று வீசும் திசை தெளிவாகிவிட்டது... இது நடந்தால் எவ்வளவோ நன்றாகவும் இருக்கும்! கடவுள் அருளால் நடக்கட்டும் என்று உள்ளூர வேண்டிக் கொண்டாள் சைதன்யா. நடக்கும்வரை இது பற்றிப் பேசி இவனைத் தூண்டி விடுவது தவறு என்று தோன்ற, அங்கிருந்து பேச்சை வேறுபுறம் திருப்பினாள்.




“குப்பையில இருந்து மின் சாரம் தயாரிக்கறதுக்கு நம்ம தலைவர் குடுத்த திட்டத்தை ஏன் நிராகரிச்சாங்க..?”
“அவர் அதை சிங்கப்பூர்ல செய்யப்போறதா சொன்னாராம்!”

"மனோகரியின் கைத்திறமையால், சேலை ஓகே ஆகிவிடும். ஆனால், பிளவுசையும் பிரமாதமாக அமைத்தால்தான் நீதாபரன் ஏற்றுக் கொள்வாள், இல்லையா? அழகாகவும் இருக்க வேண்டும், இந்த விழாவுக்குப் பொருத்தமாகவும், அதே சமயம் புது மோஸ்தராக அந்த நீதாவுக்குப் பிடிக்கக் கூடியதாகவும் இருக்கும்படி... பூபால், சேலை போலவே கையில் மட்டும் பூவேலை செய்து டிஷ்யூவில் 'ஷோல்டர்லெஸ்' ஆக பிளவுஸ் தைத்தால் எப்படியிருக்கும்? நீதாவின் உயரத்துக்கும் பாவனைக்கும்..."




"நான் லவ் பண்ண ஆரம்பிச்சு 2 வருஷம், மூணு மாசம், பத்து நாள் ஆகுது..."
"இதை எல்லாம் ஏன் எண்ணிக்கிட்டு இருக்கே?"
"பின்னாடி எண்ணி வருத்தப் படக்கூடாது பாரு!"
*- ஷேக் உசேன், செஞ்சி.*

"கையைக் கொடு சைது! அவ்வப்போது, நீ வெறும் சோதா அல்ல என்று இப்படி நிரூபித்துவிடுகிறாயே!" என்று தன் வழியில் பாராட்டிவிட்டு, "ஆக, விழா உடை முடிந்தது! இனி மேல் கோயிலுக்குப் போகிற அடக்கமான ஆடையைத்தான் பார்க்க வேண்டும்" என்றான் பூபாலன்.

அவனது புகழ்ச்சி ஓரளவு மகிழ வைத்தபோதும், "இன்னும் முடியவில்லை. நம் ஐடியா நீதாபரனுக்குப் பிடித்தால்தான், விழா உடை வேலை முடியும். இந்த ஐடியா பிடித்தாலும், வண்ணக்கலவை, பூ வேலை டிசைன் என்று இன்னும் அவள் ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயம் நிறைய இருக்கிறது. அதையெல்லாம் யோசியாது 'பாலன்தான்' என்று அவ்வப்போது நிரூபித்துவிடுகிறாயே, பூபால்!" என்ற வழக்கமான சிறு கேலியைச் செய்து சிரித்தாள் சைதன்யா.

"யப்பா! ஒருசின்ன வாய்ப்பு கிடைத்தால் போதுமே! நீங்கள் யாரும், இந்த பாலன் பேச்சை விடவே மாட்டீர்களே!" என்று குறைபட்டபோதும், கூடச் சேர்ந்து சிரிக்கவே செய்தான்.

"வாய்ப்பை நீ தருவதால்தானேப்பா, தம்பிப் பையா?" என்று அவள் கூற, இருவருமாக மேலும் நகைத்துவிட்டு, மறுபடியும் தொழில் பேச்சைத் தொடங்கினர்.

**வீ**ட்டை அடைந்ததுமோ, இருவர் மனதிலும் கொஞ்சநஞ்சம் இருந்த தயக்கங்களும் மறைந்து, தோட்டம் மற்றும் வீட்டின் அழகே நெஞ்சை நிறைத்தது. நீதா சொல்லி வைத்திருந்தாள் என்பது, யார் என்று தெரிந்ததுமே வேலையாள் அவர்களை உள்ளே அழைத்துப் போய் உட்கார வைத்ததில் தெரிந்தது! ஆனால், அமர வைத்த விதம்தான் சைதன்யாவுக்கு வியப்பை அளித்தது.

விசாலமான வரவேற்பு ஹாலின் ஒருபுறமாக, 'ட்' வடிவில், நீளமான சோபாக்கள் போடப்பட்டிருந்தன. ரத்தினக் கம்பளம் என்பார்களே, அது போல விலை உயர்ந்த கார்பெட்டும் விரித்திருந்தது. ஆனால் அங்கே உட்கார வைக்காமல், பளபளவென்று துடைக்கப்பட்டிருந்த கண்ணாடியின் பின்னே அழகான கலைப் பொருட்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த

‘க்யூரியோ’வின் ஒருபுறமாகப் போடப் பட்டிருந்த சில இருக்கைகளில் அவர் களை உட்காரச் சொன்னான் அந்தப் பணியாள்.

இந்த இருக்கைகளும் தரத்தில் குறைந்தவை அல்ல! ஒருவேளை அவர்களது வடிவமைப்புகளைப் பரப் பிக் காட்டுவதற்கு வசதியாகப் போடப் பட்டிருந்த மேஜையை, ரத்தினக் கம்ப ளத்தில் பளீரிட்ட வண்ணப்பூக்களை மறைத்துப் போட மனமற்று இந்த இடத்தில் புதிதாக இருக்கை ஏற்பாடு செய்தார்களோ, என்னவோ?

எப்படி என்றாலும், அவர்களுக்கு வேண்டியது உட்கார இருக்கைகளும் வடிவமைப்புகளை பரத்திக்காட்ட ஒரு மேஜையும். இங்கே இருக்கின் றன, அது போதும்!

அழகான மாடிப்படிகளில், எழி லாக இறங்கி வந்த நீதாபரன், மாடல் வீட்டம்மாவாக உபசாரம் செய்தாள். ஆனால், முதலில் வேலையை முடித் துக் கொள்வோமே என்றதையும் ஏற்று, சைதன்யா காட்டிய டிசைன் களைப் பார்த்தாள்.

விழா உடை, பூபால் சொன்னது போல, உடனேயே ஒப்புக்கொள் ளப்பட்டது! வண் ணம், பூவேலை குறித் தும் அதிகப் பிரச்னை எழவில்லை! சல்வார் செட்டும் அப்படியே! சொல்லப் போனால், வந்தவர்களிடம் முழு நம்பிக்கை வைத்த வள் போல, அவர் கள் சொன்னதைக் கிட்டத்தட்ட அப்ப டியே ஒப்பினாள் என லாம்.

நீதாவின் பார்வைகூட இதிலேயே இருந்தது என்று சொல்வதற்கில்லை! அவளது கவனம் இங்கே இல்லையோ என்ற ஐயம்கூட சைதன்யாவுக்கு லேசாக உண்டாயிற்று! அதற்கு ஏற்றாற் போல நீதா ஒரு தரம் எழுந்துபோய் செல்லில் பேசிவிட்டும் வந்தாள்.

ஆனால், “வேலை முடிந்தது. இன்னொரு தரம் வந்து சாப்பிடுகி றோம்” என்று நாசூக்காகக் கிளம்ப முயன்றவர்களை, “சிற்றுண்டிக்குப் பிறகு, இன்னும் சில சாதாரண உடை களைப் பார்ப்போம்” என்று தொழில் ஆசை காட்டி உட்கார வைத்தாள்.

**கொ**ண்டு வந்து வைக்கப்பட்ட பலகாரங்களில் நெய்யும் ஜீராவும் சொட்டின. கார வகைக்குப் போனால் பாதாமும் முந்திரியும் அதிலும் நிறைந் திருந்தன. சுவையும் நிறையவே! எப் படி, எப்போது கழன்றுகொள்வது என்று யோசித்தவாறே, ஓர் இனிப்பை எடுத்துச் சுவைத்தபடி இலக்கற்று நோக்கிய சைதன்யா, சட்டெனத் திகைத்தாள்.

‘க்யூரியோ’வின் கண்ணாடியில், நீதா அவளையே வெறித்துப் பார்த் துக் கொண்டிருந்தாள். ஆனால், சைதன்யாவின் பார்வை அவளைச் சந்தித்த வினாடி முடியு முன்னரே, நீதாவின் பார்வை விலகியும் போய்விட் டது!

இது தற்செயல் தானா? அல்லது... அடிக்கடி நீதாவின் பார்வை சென்ற இடமே இதுதானா? ஆனால், அவளை



**SMS**

**“நேத்து கூட்டத்துல தலைவர் மானத்தை வாங்கிட்டாரு...”**
**“என்ன செய்தாரு?”**
**“எங்கிருந்தோ இங்கு வந்து டயர் கடை வைத்திருக்கும் வல்கனை ‘சிங்’கைப் பார்த்து உழைக்கக் கத்துக்கணும்னு பேசிட்டாரு!”**

*- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.*

எதற்காகக் கண்காணிக்க வேண்டும்? பலரின் பார்வை தன் மீது படிந்து மீள்வது, சைதன்யா அவ்வப்போது அனுபவிப்பது தான். ஆனால், பெண்ணுக்குப் பெண்... நீதா நேராகவே பார்க்கலாமே!

தற்செயலாகத்தான் இருக்க வேண்டும் என்று முடிவே செய்தாலும், இது அது என்ற உண்ண எடுக்கும் பாவனையில் சைதன்யா லேசாகக் கவனித்தபோதெல்லாம், நீதா அந்தக் கண்ணாடியில், அவளையேதான் பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரொரு சமயம் சுற்றிப் பார்க்கிறமாதிரி பார்வையை அங்கே கொண்டு செல்லுகையில், நீதா வேறு பக்கம் திரும்புவதும் தெரிந்தது.

ஆக, இது தற்செயல் அல்ல... இந்த இடத்தில் இருக்கைகளை அமைத்ததே இந்தக் கண்காணிப்புக்காகத்தான்! ஆனால், ஏன்?

விடை கிடைக்காதபோதும், முகத்தில் எதையும் காட்டாமல் கவனத்துடன் இருக்க சைதன்யா முடிவு செய்தாள். அது ஒன்றும் அவளுக்குக் கடினமும் அல்ல. திடுமென நீதாவின் உடல் விறைத்து நிமிர்ந்ததோடு, அவள் லேசாகத் திரும்பி அமர்வதை சைதன்யா கவனித்தாள்.

அதாவது, வாயிலையும் அதே சமயம் இங்கே கண்ணாடியில் தன்னையும் பார்க்கக் கூடியவாறு மற்றவள் அமர்ந்த விதம், வெளியே வந்து நின்ற




''உண்மையைச் சொல்லுங்க... உங்க அம்மா தூக்கத்துல நடக்கற வியாதி இருக்கறமாதிரி நடிக்கறாங்களா?''
''ஏன் கேக்கறே..?''
''நான் எங்க தூங்கினாலும் வந்து மிதிக்கறாங்களே!''
*- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.*

காரிலிருந்து இறங்கி வரப் போகிறவர்தான் பிரச்னைக்குரிய ஆள் என்பதை அவளுக்குப் புரிய வைத்தது! எச்சரிக்கையோடு இருக்கவும் வைத்தது!

அவள்... நீதாபரன்!

நம்ப முடியாத ஊகத்தில், நெஞ்சு திடுதிடுத்தபோதும், முகம் மாறாமல் காத்தபடி, தொண்டையில் அடைத்ததைத் தண்ணீரைக் குடித்து விழுங்கிவிட்டு சைதன்யா நிமிர்ந்தபோது, அந்தப் பெரிய ஹாலுக்குள் அவன்... அவனேதான் வந்துகொண்டிருந்தான்.

அந்த நேரத்துக்கு உரிய முகபாவத்தோடு சைதன்யா நோக்க, "மிஸ்டர் மானபரன். என் கணவர்! சைதன்யா, என் உடை தைக்கிறவள்!'' என்று அறிமுகப்படுத்திய நீதாவின் முகத்தில், அவள் ஏமாற்றத்தை மறைக்க முயன்றது நன்றாகவே தெரிந்தது!

ஏனெனில், சைதன்யாவைப் போலவே மானபரனின் முகத்திலும், 'அப்படியா' என்பதற்கு மேல் எதுவும் இல்லை!

ஒரு காலத்தில், அவளைச் சுற்றிச் சுற்றி வந்ததற்கான அடையாளம், அவன் முகத்தில் சிறிதளவுகூடத் தெரியவில்லை!

நெஞ்சுக்கூட்டினுள் தீப்பற்றி எரிவதைக் காட்டிக் கொள்ளாமல், தானும் அமைதியாகவே வணக்கம் தெரிவித்தாள் சைதன்யா!

**(தொடரும்)**



**ரமணிசந்திரன்**

சும்மா என்றால், அவர்களது உரையாடல் எப்படித் தொடர்ந்திருக்குமோ, சொல்வதற்கில்லை! ஏனெனில், மனதை முகத்தில் காட்டிக் கொள்ளாமல் அமைதியாக இருப்பது வேறு; கலகலப்பாக உரையாடுவது வேறு அல்லவா?

அதுவும், ஏதோ சந்தேகம் தட்டி, நீதா அவர்களைச் சந்திக்க வைத்திருக்கிறாளோ என்ற ஐயம் உள்ளே குழப்புகையில், உடல்மொழி வரையிலும்

கூட மிகுந்த கவனம் தேவைப்பட, சைதன்யாவுக்கு இயல்பான பேச்சு வர சங்கடப்பட்டது!

நல்லவேளையாக பூபாலன் அந்த இடைவெளியை... அது இடைவெளி என்று தோன்று முன்னரே இட்டு நிரப்பினான். உள் விவரம் அறியாமலேதான்.

நீதாவின் அறிமுகப் படலத்தில், தான் விடுபட்டுப் போனது அவனுக்கு வருத்தம்!

எனவே, சைதன்யா வணக்கம் கூறி முடிக்கும்போதே, ''என்ன மேடம், என்னை விட்டுவிட்டீர்களே!'' என்று குறைபட்டவன், "சார், என் பெயர் பூபாலன். நானும் 'திரும்பிப்பார்' தையல் நிறுவனத்தில், சைதன்யா போலவே ஒரு சம பங்குதாரர்தான்'' என்று தன்னைத் தானே மானபரனுக்கு அறிமுகம் செய்து கொண்டான்.

தன் கார்டை எடுத்துக் கொடுத்து, "புதிய நிறுவனம் சார்... தொடங்கி ஓர் ஆண்டுதான் ஆகிறது! உங்களைப் போல வாடிக்கையாளர்கள் தான் எங்கள் மூலதனமே!'' என்று, தன் விற்பனைப் பேச்சையும் எடுத்து விட்டான்.

"அதாவது, இலகுவாக உறிஞ்சத் தோதான ஏமாளிகள் நாம் என்று குறிப்பாகச் சொல்லுகிறார் போல!''

SMS

''ராத்திரி என் கனவுல நமீதா வந்தாங்க; இவனோட கனவுலயும் வந்தாங்களாம்... எப்படி டாக்டர்?''

''டபுள் ரோல் பண்ணியிருப்பாங்க!''

- கே.சேகர், ஓரியூர்.



என்று கிண்டல் போலத் தன் எரிச்சலைக் காட்டினாள் நீதா.

"ஐயோ, ஐயோ! அப்படியில்லை மேடம்! உங்களைப் போலப் பணம் உள்ளவர்கள்தான், அந்தந்த வேலைக்கு உரிய பணத்தைத் தடையின்றிக் கொடுப்பீர்கள். மதிப்பு புரிந்தவர்கள்!'' என்று ஐஸ் வைத்தான் பூபாலன்.

அது உண்மையும்கூட... அன்று வரை நீதா பேரமே பேசவில்லையே!

கார்டைப் பார்த்துவிட்டு, ''நாலு பேர் பங்குதாரர்கள் என்றீர்கள். ஏதாவது திட்டத்தில் செல் வாங்கினால், ஒருவருக்கொருவர் பேசச் செலவே இராது! இப்போதெல்லாம் கூட்டுத் தொழிலுக்கு இப்படி எத்தனையோ வசதிகள். நீங்களும் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். புது நிறுவனம் என்பதால் சொன்னேன்'' என்றான் மானபரன்.

''நன்றி சார்!'' என்றான் பூபாலன் உற்சாகத்தோடு... "நாங்கள்கூட இந்த செல் ஐந்து வாங்கினோம். ஒன்றை எங்களுக்காக அலங்காரப் பூவேலை செய்து தருகிறவருக்குக் கொடுத்திருக்கிறோம். அவளுடைய டிசைன்கள் மிக அழகாக இருக்கும், சார்! மேடத்துக்குக்கூட அவள் தான் செய்யப் போகிறாள்!'' என்று மனோகரியைப் புகழத் தொடங்கினான் பூபால்.

கூர்மையாகப் பார்த்திருந்துவிட்டு, "பரன் வேறு கேட்கிறார்... அதாவது, பூபாலன் கார்டு கொடுக்கிறார். நீங்கள் தரவில்லையே என்று கேட்கிறார்'' என்று சைதன்யாவை நோக்கிக் கூறினாள் நீதா. "அதோடு,

உங்கள் செல் எண்ணையும் தெரிந்து கொள்ளலாம் என்றுதான்! தொடர்பு கொள்வதற்கு, ஒன்றுக்கு இரு எண் கள் இருப்பது நல்லதுதானே? ஒன் றில் பேசிக் கொண்டிருந்தாலும், அடுத்ததில் உங்களைப் பிடித்துவிட லாமே!'' என்று விளக்கமும் அவளே தந்தாள்.

சரியான விளக்கம்தான். இவ ளைத் தவறாக எண்ணுவதுதான் தவறோ?

ஆயினும், சற்று முன் 'க்யூ ரியோ'வில் பார்த்த பார்வை நினை வுக்குவர, ''என் கார்டை எடுத்து வர மறந்துவிட்டேன்'' என்றாள் சைதன்யா நிதானமாக.

''அடடா.! என்ன மறதி சைது, உனக்கு! இருந்திருந்து, இந்த கார் டைப் போய் மறப்பாயா? சார் கேட்கும்போது கொடுக்க முடிய வில்லையே!'' என்று துடித்தான் பூபால்.

''ரொம்பவும் வருத்தப்படாதீர் கள், பூபாலன். உங்களைத் தொடர்பு கொண்டால், சைதன்யாவிடம் கொடுக்கமாட்டீர்களா? இரண்டு பேரும், எப்போதும் ஒரே இடத் தில்தானே இருக்கிறீர்கள்? பாருங் கள், கூடவே வருகிறீர்கள்; கூடவே போகிறீர்கள்! பசை ஒட்டின மாதிரி பக்கத்திலேயே இருக்கிறீர்கள், அப் புறமென்ன?'' என்று பூபாலிடம் ஆறுதலாகப் பேசினாள் நீதா.

ஆறுதலா... அல்லது வேறு ஏதா வது தப்பான குறிப்பா? அப்படியே இருந்தாலும், இந்தப் பேச்சை மறுப் பதும் கடினம்!

யோசனையோடு சைதன்யா பேசாதிருக்க, பூபாலன் அப்போதும், உள்ளத்தில் கள்ளமற்று அளந்தான்...

**SMS**

''எதிரி நாட்டு மன்னனை எப்படி புற முதுகிட்டு ஓடவைத்தீர்கள் மன்னா?''

''அவன் நாட்டுக்கு நமீதா வந்திருப்பதாக புரளி கிளப்பிவிட் டேன்!''

- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.



''சார், எனக்கு முந்திய எண்தான் சைதுவுடையது. நீங்கள் எப்போது வேண்டுமானாலும், முதல் நாலு எண்களில் யாரை வேண்டுமானா லும் கூப்பிடலாம். உடனே வந்து உங் களுக்கு வேண்டியது செய்வோம். மேடத்துக்கு மட்டும் இல்லாமல், ஆண்களுக்கும் மிகவும் சிறப்பாகத் தைப்போம், சார். எங்களில் ஒருவ ரான இலியாஸ் அதற்காக சிங்கப்பூ ரில் தனிப் பயிற்சி எடுத்தவர். அவ ரது தலைமையில் எல்லோருமே, எல்லாமே நன்றாகவே தைப்போம், சார்!''

''தேவைப்பட்டால் சொல்கி றேன். நீங்கள் பேசிக் கொண்டிருங் கள்!'' என்றதோடு படியேறினான் மானபரன். விழிகளால் அவனைத் தொடராதிருக்க சைதன்யா பெரும் பிரயாசைப்பட வேண்டியிருந்தது!

**இ**ன்னும் இவளிடம் உடை களைப் பற்றி விளக்கி, விவரிக்க வேண்டுமே! அவளது மனக் கட் டுப்பாட்டுக்கு பலமான பரீட்சை தான்! ஆனால், அதுவும் ஒரு வகைப் பயிற்சிதானே என்று தன்னைத் தானே சைதன்யா திடப்படுத்திக் கொள்ளும்போதே, நீதா வேறு சொன்னாள்.

''அவர் வந்துவிட்டார், சைதன்யா.

**SMS**



"ஏம்மா, உன் புருஷனோட மண்டை உடைஞ்சு ரத்தம் வர்ற வரைக்கும் நீ என்ன செய்துட்டு இருந்தே?"

"அவரை அடிச்சுக்கிட்டே இருந்தேன் டாக்டர்!"

-சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.

நான் போக வேண்டும். மற்ற உடைகளை அப்புறமாகப் பார்ப்போமே! நீங்கள் முழுமூச்சாக இந்த இரண்டையும் செய்து முடியுங்கள்! அடுத்து எனக்கு எப்போது நேரம் கிடைக்கிறதோ, அப்போது...'' என்றவளின் இனிமை வழிந்த குழைவுப் பேச்சில், ஒரு "சாரி, மேம்'' உடன் சைதன்யா குறுக்கிட்டாள்.

"இன்னும் உங்களுக்கு அளவே எடுக்கவில்லையே! எப்படித் தைப்பது? அளவு மட்டுமாவது எடுத்துக் கொள்கிறோம்'' என்றாள் தொடர்ந்து.

சைதன்யாவை வெறித்துப் பார்த்தாள் மற்றவள்.

அந்தப் பார்வையில் குழப்பமுற்று, "மிசஸ் ப...பரன்..?'' என்றாள் சைதன்யா.

முகச்சுளிப்புடன், ''பார் பெண்ணே! என் பேச்சில் யாரேனும் குறுக்கே புகுந்தால் எனக்குப் பிடிக்காது. இதை எப்போதும் நினைவில் வைத்துக்கொள்!'' என்று அவள் அடிக்கட்டைக் குரலில் சொன்னபோது, இரு தையல் வல்லுனர்களுமே திடுக்கிட்டுப் போயினர்.

சைதன்யா யோசனையாகப் பார்க்க, பூபாலன் ஏதோ சொல்வதற்காக வாயைத் திறந்துவிட்டு, மீண்டும் மூடிக் கொண்டான் இறுக!

அவன் சொன்னாலும் அதைக் கேட்பதற்கு இல்லாமல், நீதா எழுந்து சென்றிருந்தாள். வேறெங்கும் அல்ல. அறையின் மறு கோடி வரை சென்றவள் திரும்பவும் வந்தாள்.

வந்தவள் உட்காராமல், "நீங்கள் இருவருமே திருமணம் ஆகாதவர்கள் அல்லவா, சைதன்யா? அதனால்தான், காலையில் வெளியே சென்ற கணவன் மாலையில் திரும்பி வரும்போது ஒரு பெண்ணுக்கு எப்படி இருக்கும் என்பது உங்களுக்குப் புரியவில்லை என்று நினைக்கிறேன்!'' என்றாள் மறுபடியும் குழைந்துவிட்ட குரலில். "இதை யோசிக்காமல், என்னை என் கணவரிடம் போக விடாமல், நீங்கள் தடுக்க முயற்சிப்பதாக எண்ணிக் கோபப்பட்டுவிட்டேன். எங்களுக்கிடையே யாராவது குறுக்கிட்டால், அதை மட்டும் என்னால் சகித்துக் கொள்ளவே முடியாது! அப்புறம்...'' என்று மிரட்டும் தொனியில் கூறியவள், உடனே மாறி, ''அதிருக்கட்டும். நீங்கள் அளவெடுக்க நாளைக்கு... நாளைக்குக் காலையில்.... எத்தனை மணிக்கு வரவேண்டும் என்று போனில் சொல்கிறேன். இப்போது கிளம்புங்கள்!'' என்றவள், மேலே நில்லாமல் மெல்லப் படியேறலானாள்.

"வெளியேறு என்று கொஞ்சம் நாகரிகமாகச் சொல்கிறாள். கொஞ்சம்தான்! எனவே, விளக்குமாறை எடுத்து வருமுன் வா, சீக்கிரமாகக் கிளம்பி, ஓடி விடலாம்!''

கைப்பெட்டியை எடுத்துச் சரியாக மூடியபடி, பூபாலன் முணு

முணுத்தது சும்மா என்றால், அவளைச் சிரிக்க வைத்திருக்கும்! ஆனால், கணவரிடம் செல்ல நீதா துடித்தது சைதன்யாவை அமைதியிழக்கச் செய்தது.

ஆனால், அதுதானே இயற்கை? எப்போதுமே எதிர்பார்த்திருக்க வேண்டியது. இப்போது நீதா படியேறுவதைப் பார்ப்பதும் அநாகரிகம்தான்!

குனிந்து, தன் வேலையிலேயே கவனமாக இருந்தவள், ''உங்கள் டிசைன் ஃபைலை வைத்துவிட்டுப் போங்கள். எனக்கு வேண்டியதை நாங்கள் இருவருமாகச் சேர்ந்து தேர்வு செய்து வைக்கிறோம்'' என்று அருகிலிருந்து நீதாவின் குரல் கேட்கவும், தூக்கிவாரிப் போட்டு, திரும்பிப் பார்த்தாள்.

"என்ன... பேயைக் கண்ட மாதிரி விழிக்கிறாய்? என்னைப் பார்த்தால் பேய் மாதிரியா இருக்கிறது?'' என்று வேடிக்கை பேசிக் கிண்கிணியாகச் சிரித்தாள் நீதா.

இவள் எப்போது, எப்படி மாறுவாள் என்றே தெரியவில்லையே! ஆயினும் நீதா எதிர்பார்த்த பதிலைச் சொல்ல, சைதன்யாவுக்கு மனமில்லை. எனவே, "சாரி மேடம். நான் பேயைப் பார்த்தது இல்லை என்பதால், ஒப்பு நோக்கிச் சொல்ல வழியில்லை'' என்று, தானும் வேடிக்கை போலவே மொழிந்தாள்.

சற்றே இடுங்கிக் கூர்ந்த மற்றவளின் விழிகளை நேரே சந்தித்து, 'என்ன' என்பது போல, விலகாத பார்வையாலேயே கேட்டாள்.

நேரடிக் கேள்விகளுக்குப் பதில் சொல்வது கடினம்!

எனவே நீதாவும் வேடிக்கை போலவே, "அப்படியானால், நம்மில் யார் பேயைப் போல இருக்கிறோம் என்று சொல்வதற்குப் பேயை நேராகச் சந்தித்த யாரையாவதுதான் அழைத்து வர வேண்டும் போல!'' என்று மறுபடியும் நகைத்தாள் அவள்.

அதே கிண்கிணிச் சத்தம்! குரலை நயப்படுத்திக் கொண்டது போல, சிரிப்பும் பயின்றிருப்பாள் போல!

என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும்! அவளை ஒழுங்காக வேலை செய்யவிட்டுப் பணத்தையும் ஒழுங்காகக் கொடுத்தால் சரி! அதோடு, தொடர்பை அவள் வரையிலான வேலையோடு நிறுத்திக் கொண்டால், கோடிக் கும்பிடு என்று சைதன்யா எண்ணமிடும்போதே, ''உங்கள் இருவருக்கும் வாங்கி வைத்திருந்த ஸ்வீட் கொடுக்க வந்தேன்... இந்தாருங்கள்!'' என்று கொடுத்துவிட்டு, ''இனி, நம் பேய்ப் போட்டி! என் கணவரை வேண்டுமானால் கேட்டுப் பார்க்கலாமா?'' என்று கேட்டு, அவளை அதிர வைத்தாள் மற்றவள்.

சைதன்யாவின் தவிப்பு அத்தோடும் தீரவில்லை!

**SMS**

''என்ன இருந்தாலும் கபாலி மாதிரி வராதுன்னு ஏன் புகழறீங்க ஏட்டய்யா?''

''அவனோட வலது கை திருடும் போதே, இடது கை மாமூல் கொடுத்துடுதே!''

- அம்பை தேவா, திருநெல்வேலி.



"கட்சிக் கணக்கை எழுதிப்பார்த்தா நிறைய துண்டு விழுது..."
"அதையும் தலைவருக்கே போர்த்திடுங்க!"



SMS

- அம்பை தேவா, திருநெல்வேலி.

**ஆ**ட்டோவில் திரும்பிச் செல்லும்போது, அவளது செல் ஒலி எழுப்பியது. திரையில் வந்தது அறிமுகமற்ற எண்! ஊகமும் தவிப்புமாக எடுக்காமல் விட்டுவிடலாமா என்று பார்த்தால், "உன் செல்தான், சைதன்யா" என்று கவனப்படுத்தினான் பூபாலன்.

தயக்கத்தைக் காட்டிக் கொள்ளாமல் விட்டுவிடலாமா என்று பார்த்தால், அவளது எதிர்பார்ப்பு சரியாகவே இருந்தது.

அடுத்த ஊகமும் சரியாக, பேச்சில் நெருப்பைக் கொட்டினான் மானபரன்... "என்னம்மா, கடுகையும் சீரகத்தையும் எண்ணிப் போடத் தேவையிராத வசதியான வாழ்க்கை என்ன ஆயிற்று? அப்படி எந்த இளிச்சவாயனும் இன்னும் மாட்டவில்லையா? அல்லது, மாட்டிய சுறா உண்மை உணர்ந்து வலையை அறுத்துக் கொண்டு ஓடிவிட்டதா?" என்று எகத்தாளமாகக் கேட்டது அவனது குரலேதான்.

என்ன உண்மை? இதற்கு என்னவென்று சைதன்யா பதில் சொல்வாள்?

அதுவும் அவள் சொல்லக் கூடிய ஒவ்வொரு வார்த்தையும், அருகில் இருந்த பூபாலனின் காதில் தெளிவாக விழும் என் கையில் இன்னார் என்கிற அறிமுகத்தைக் காட்டிக்கொள்வதே முடியாத காரியம்!

அவசரமாக யோசித்து, "ஹலோ, நீங்கள் யார்? யாராக இருந்தாலும், வண்டி ஓடிக்கொண்டு இருப்பதால் எதுவும் தெளிவாகக் கேட்கவில்லை. வைத்து விடுங்கள்!" என்று பேச்சை முடிக்க முயற்சித்தாள்.

ஆனால், அவள் வாக்கியத்தை முடிக்கு முன்னரே, "கேட்கும்! மேலும் மேலும் பொய் வேண்டாம். ஆனால், நானும் உன்னுடன் உரையாடும் ஆசையில் இப்போது பேசவில்லை! உன்னை எச்சரிப்பதற்காக மட்டும்தான் கூப்பிட்டேன். நீ எதற்காக என் இடம் தேடி வந்தாயோ, எனக்குத் தெரியாது. ஆனால், உன் எண்ணம் எதுவும் நிறைவேறப் போவதில்லை. அத்தோடு, உன் மூச்சுக் காற்று பரவும் இடத்தில் இருக்கக் கூட எனக்கு விருப்பம் இல்லை! புரியும் என்று நினைக்கிறேன்!" என்று வேகமாக உரைத்தவன், அவள் பதிலேதும் சொல்ல இடம் தராமலே, செல்லை அணைத்து விட்டான்.

அவள் ஒன்றும் சொல்லாது, இயந்திரமாக செல்லை உள்ளே வைக்கவும், "யார் சைது, நீளமாகப் பேசி, அவரே முடித்துவிட்டாரே?" என்று ஆச்சரியமாகக் கேட்டான் பூபாலன்.

"ஏதோ தப்பு எண்" என்று முணுமுணுத்தவளை விசித்திரமாக நோக்கினான் அவன்!

(தொடரும்)

**ரமணிசந்திரன்**

## மனம் மயக்கும் மலர் தொடர்

# 7



தியானம், மூச்சுப் பயிற்சி என்று என்னென்னவோ செய்து, மனதை ஒருநிலைப் படுத்தி வழிக்குக் கொண்டுவரப் பழகியிருந்தவள்தான். ஆயினும், சைதன்யாவுக்கு அன்றைய தூக்கம் அடியோடு கெட்டுப் போயிற்று.

என்ன முயன்றும் வேண்டாத நினைவுகளை நிறுத்த அவளால் முடியவில்லை. அதுவும் 'கடுகையும் சீரகத்தையும் எண்ணிப் போட்டு' என்று அவள் சொன்ன அதே வார்த்தைகளை, அவன் அப்படியே சொல்லிக் காட்டிய பிறகு, வேறு எதுதான் அவள் மனதைக் கட்டுப் படுத்தக் கூடும்?

சொன்னாள்தான்... 'கடுகையும் சீரகத்தையும் எண்ணிப் போட்டே இதுவரை வாழ்ந்துவிட்டேன். இனியும் அப்படி வாழ விருப்பம் இல்லை. அதனால் பிரிந்துவிடுவோம்' என்று அவனிடமே சொன்னாள்



தான்.

அதுவும் பெயருக்கேற்றபடி தன்மானம் சற்று அதிகமாகவே உள்ள மானபரனிடம் சொல்லிவிட்டுத் தந்தைக்குத் தெரியாமல், எத்தனை நாள் அழுதிருக்கிறாள். தன்னை அறியாமல் பெருகி வழிந்த கண்ணீரில் தலையணை நனைந்து, சளிபிடித்து, அவளுக்குக் காய்ச்சல் கூட வந்திருக்கிறது.

அதெல்லாம், அவனுக்கு எங்கே தெரியும்?

அவனுக்கு மட்டுமா? யாருக்குமேதான் தெரியாது. யாருக்குத் தெரிந்தாலும், ஏதாவது ஒரு வழியில் விஷயம் கசிந்து, அவனை எட்டிவிடக்கூடாது என்று, அனைத்தையுமே அவள் தன்னுள்ளேயே புதைத்து வைத்திருக்கிறாளே...

அதை மட்டுமல்ல... இன்றியமையாதது என்பார்களே, அது போன்ற மூச்சுக்காற்றாக அவளுக்குத் தேவையாக இருந்த மானபரனின் தோற்றம், பேச்சு, அவனைப் பற்றிய நினைவுகளைக்கூட மனதுக்குள் அழுத்தமாகப் பூட்டி வைக்க அவள் பட்ட பாடு, எடுத்துக் கொண்ட முயற்சி, பயிற்சி எல்லாமே, அவனைப் பார்த்ததுமே காற்றிலிட்ட கற்பூரமாகக் கரைந்து காணாமல் போய்விடும். ஓத நேரக் கடலாக மனம் இப்படிப் பொங்கி, அவனுக்காக ஆர்ப்பரிக்கும் என்று அவள் சற்றும் நினைத்திருக்கவில்லையே...

மானபரனுக்காக ஏங்கவில்லை என்று சொன்னால், அது தனக்குத் தானே பொய் சொல்வதுதான். பெருமுயற்சி செய்து, இதுவரை மறைத்து வைத்தது அவ்வளவுதான். இப்போதும் வழக்கம்போல எல்லாவற்றையும் – மானபரனைக் கண்ணாலேனும் காணும் ஆவல் உள்பட அனைத்தையும் – வலிக்க வலிக்கத் தன்னுள்ளே ஒளித்து வைத்துக்கொண்டு ஒதுங்கி விடலாம் என்றால், 'திரும்பிப்பாரி'ல் மற்றவர்களிடம் காரணமென எதைச் சொல்வது?

வேறு வழியின்றி உண்மையைச் சொன்னாலும், அதை மற்றவர்கள் ஏற்பது கடினம்.

தொழில் விஷயத்தில் சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இடம் கிடையாது என்பது, அவர்கள் நால்வரும் ஏற்றுக்கொண்ட விதிகளில் ஒன்றாயிற்றே. இப்போது அவளுக்காக எப்படி மாற்ற முடியும்? மாற்றச் சொல்லிக் கேட்பதே நியாயமில்லை.

அதிலும், 'இம்'மெனுமுன் நீதா பணத்தை நீட்டுகையில், மறுக்க வாய்ப்பே இல்லை.

ஆனால்... நீதா, வாயிலையும் அவளையும் கண்காணிக்கும்விதமாக அமர்ந்தது, சைதன்யாவைக் கலங்க வைத்தது. அல்லது, 'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேயாகி' பழைய கதை காரணமாக, இயல்பான விஷயங்களைக் கூட



**sms**

''என்ன இது... மாப்பிள்ளை அருவாளோட நிக்கறாரு..?''
''நான்தான் சொன்னேன்ல... மாப்பிள்ளை 'ஹீரோ'வாட்டம் இருப்பார்னு!''

– ப.உ.மாமகேஸ்வரி, நெய்வேலி.

அவள்தான் தப்பாக எண்ணுகிறாளோ?

கணவன் வருகிற நேரம் என்று, அவனைப் பார்ப்பதற்காகவே, நீதா வாயிலைப் பார்க்கும்விதமாக அமர்ந்திருக்கலாம். மனு வந்ததும் அளவுகூட கொடுக்காமல், அவன் பின்னோடு நீதா மாடிக்குக் கிளம்பவில்லை? அதோடு கொஞ்சம் நன்றாயிருக்கும் இன்னொரு பெண்ணை இயற்கையான குறுகுறுப்பில் நீதா பார்த்திருக்கலாம். நேரில் பார்க்கக் கூச்சப்பட்டு, க்யூரியோவின் கண்ணாடிப் பரப்பில் அவளது பிம்பத்தைக் கூர்ந்திருக்கலாமே.

இரண்டு சாதாரண விஷயங்களைக் கொண்டு, 'மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும்' சைதன்யா முடிச்சே போட்டுவிட்டாளோ?

அப்படித்தான்... ஊகூம். அப்படியும் இருக்கலாம்... அப்படி இல்லாமலும் இருக்கலாம்.

**ம**றுபடியும் குழப்பமே மிஞ்ச, இந்தப் பிரச்னையை எப்படிச் சமாளிப்பது என்று அதே யோசனையாக அலுவலுக்குச் சென்றாள். மறுநாள் காலை ஒன்பது மணிக்கு, அவளது 'நீதாநிவாச'த்தில் இருக்குமாறு, நீதாவின் ரோஜா நிறக் கவரின் வழி, அன்று வந்த ஆணை கூறியது. மறுபடியும் அவர்கள் நால்வரின் மனப் போக்குக்குமே இது அதிகப்படி அதிகாரம்தான். ஆனால், வாடிக்கையாளர் கடவுள் ஆயிற்றே! அவர்கள் நால்வரும் ஒப்புக்கொண்டுள்ளபடி, முடிந்தவரை மறுக்கப்படக்கூடாத பெருந்தகை. தொகையும் அளிப்பவள்.

சைதன்யாவைப் பொறுத்தவரை கொஞ்சமேனும் நிம்மதி வேண்டும் என்றால், இது கட்டாயமாக மறுக்கப்பட வேண்டிய கட்டளையே. ஆனால், மற்ற மூவரிடமும் இதன் காரணத்தை அவளால் விளக்க முடியாதே. மீண்டும் மனம் அதே பிரச்னையில் உழன்றது. வட்டத்தின் தொடக்கம் முடிவைத் தேடுவது போல, விடையற்ற, தீர்வு தெரியாத பிரச்னை.

அப்போதும் அறிவு உந்த, "அவ்வளவு தூரம் போவது சிரமமாக... தலைவலி வந்துவிட்டதால், பரிமளா போனால் நன்றாக இருக்கும்" என்று சைதன்யா மெல்லச் சொல்லிப் பார்த்தாள்.

ஆனால், மற்ற மூவருமே அதை ஒப்பவில்லை. முதல் காரணம், சைதன்யாவின் பெயரைக் குறிப்பிட்டு வந்த அவளது வாடிக்கை அது. இருமுறை பழகிய நெருக்கத்தை விட்டு விடக்கூடாது. அதோடு ஆளுக்கேற்ற உடை அமைப்பில் சைதன்யாதான் அதிகத் திறமைசாலி. தலைவலி என்றால் ஒரு மாத்திரை போட்டுக் கொண்டு போக வேண்டுமே தவிர, இதற்காகவெல்லாம்



**sms**

''சினிமா லைட்மேனை நம்ம கட்சியில சேர்த்தது தப்பாப் போச்சு!''
''ஏன்... என்னாச்சு?''
''ஊழலை 'வெட்ட வெளிச்சமாக்குவேன்'னு அடம்பிடிக்கறாரு...''
- பீ.என்.நரசிம்மமூர்த்தி, சென்னை-33.



வாடிக்கைக்கு ஏமாற்றம் நேர விடக்கூடாது.

ஓரளவு இடம் பழகி விட்டால் சைதன்யா தனியே போய்க் கொள்ள வேண்டும் என்றும் அப்போது பேசப்பட்டது. சும்மா என்றால் ஒரே வேலை காரணமாக இருவர் நேரம் செலவாவதா என்று அவளே தனியே போவதாகச் சொல்லியிருப்பாள். ஆனால், இப்போது அங்கே பூபாலனின் துணையோடு செல்லக்கூட அவளுக்குத் தயக்கமாக இருந்தது. அவளது முடிவுக்கு விட்டால் இந்த வாடிக்கையை வேண்டாம் என்று கூடச் சொல்லி விட்டிருப்பாள்.

sms

''உன் மாமியாருக்கு வந்திருக்கிறது விஷக் காய்ச்சலா?''

''வேஷக் காய்ச்சல்... ஜுரம்னு சும்மானாச் சும் வேஷம் போட றாங்க..!''

- என்.பர்வதவர்த்தினி, சென்னை-75.

ஆனால், அது முடியாது எனும் போது, ''வழி சரியாகப் பிடிபட வில்லை பரிமளாக்கா. அதுவரை, பூபால் கூட வரட்டுமே. அதோடு, அந்த நீதாபரனை நமக்குச் சாதகமாகத் திருப்ப இவனால் மட்டும்தான் முடியும் போலிருக்கிறது'' என்று வாயில் வந்ததைச் சொல்லிச் சமாளித்தாள்.

பூபாலனின் சற்று வியந்த பார்வையைக் கவனியாததுபோல வேறு பேசலானாள்.

வியக்கத்தான் செய்வான். 'வா வா' என்று அழைத்து, வயிறு முட்டத் திணித்து உபசாரம் செய்கிறவளைச் சாதகமாகத் திருப்ப ஆள் வேண்டும் என்றால் ஆச்சரியமாகத்தானே இருக்கும்?



எப்போதும் போல இன்னோர் அதிநவீன உடையில் நீதா அவர்களை வரவேற்றாள்.

சிறுத்தையின் தோலை அணிந்திருப்பது போல வெல்வெட்டில் உடலோடு ஒட்டித் தைக்கப்பட்டிருந்தது. இவ்வளவு நேர்த்தியாகத் தைப்பவரை ஏன் மாற்றுகிறாள் என்று எண்ணத் தோன்றும் அளவுக்கு அழகாக இருந்தது. இதை விடவும் அழகாகத் தெரியும்படி தைக்க வேண்டும் என்று உள்ளிருந்த தொழில்திறன் போட்டியுணர்வைத் தூண்டியது.

அந்த உணர்வே சைதன்யாவை நிமிர வைத்தது எனலாம்.

''மேடம், முதலில் அளவெடுத்து விடலாமா? இந்த உடைகள் விரைவில் வேண்டும் என்பதால், அதற்கான முதல் வேலையை முடித்துவிடுவோம். அப்புறமாக, மற்ற உடைகளைத் தீர்மானித்து, அவற்றுக்கு ஏற்ப மறுபடி அளவு எடுக்கலாம்'' என்று கையோடு கொண்டு போயிருந்த சிறுபெட்டியில் இருந்து அளவு நாடா, நோட்பேட் முதலியவற்றை எடுக்கலானாள்.

"செய்யலாமே'' என்று சிரித்தாள் நீதா... ''இதோ அளவு எடுத்துக் கொள்'' என்று கைகளைத் தூக்கிக் கொண்டு நின்றாள்.

பேனாவையும், குறிப்புப் புத்தகத்தையும் அவசரமாக பூபால

ளிடம் திணித்துவிட்டு, அளவு நாடாவை எடுத்தாள் சைதன்யா.

அளவு எடுக்கும்போது அவளுக்கு ஏற்பட்ட சந்தேகத்தை உறுதி செய்கிறவளாக, ''திருமண நாள் பிளவுசில் தோள்பட்டைத் துணி கிடையாது அல்லவா? அப்படியானால், சட்டையிலேயே முன்புறம் உள்ளே 'பாட்டிங்' கொடுத்துத் தைக்க வேண்டும். ஐந்து மில்லிமீட்டர் தடிமன் உள்ளதாக இருக்கட்டும். எலாஸ்டிக்கும் நல்லதாக இருக்கட்டும்'' என்றாள் நீதா.

முகம் மாறாமல் ஒப்பியதோடு, மற்ற அளவுகளையும் சைதன்யா எடுத்து முடித்தாள். முன்தினம் போலவே ஒரு வேலை வெகு விரைவாக முடிந்துபோயிற்று.

அடுத்து, இன்னும் சில உடைகளின் வடிவமைப்புகள். அதைப் பற்றிப் பேசத் தொடங்கவும், ''ஐயையோ'' என்று தேள் கொட்டினாற்போல கையை உதறினாள் நீதா.

முன்தினம் கொடுத்துச் சென்ற மாதிரிகள் ஏதேனும் பாழாகிவிட்டன எனப் போகிறாளோ என்று மற்ற இருவரும் திடுக்கிட்டு நோக்குகையில், ''உங்கள் டிசைன்களை இரவு பார்த்துக் கொண்டிருந்தேனா, கையோடு கீழே கொண்டு வராமல் மாடியறையிலேயே விட்டுவிட்டேன். மேலே வலது பக்கமாக இரண்டாவது அறை. சிரமத்தைப் பார்க்காமல் மாடியேறிப் போய் அதை எடுத்து வந்து விடுகிறீர்களா, சைதன்யா?'' என்று மற்றவள் கேட்கவும், அப்பாடி என்ற ஆறுதல் பெருமூச்சுடன் சைதன்யா எழுந்தாள்.

கூடவே தயக்கமும் உண்டாயிற்று. என்னவோ இந்த நீதா சொல்வதைச் செய்வது தனக்கு நல்லதில்லை என்பது போல ஓர் உறுத்தல். ஆனால், நீதாவின் அறைக்கு அவளது அனுமதியோடு போய் வருவதில் என்ன கெடுதல் நேரக் கூடும்?

தயக்கத்தை உதறிவிட்டு அவள் படியேறத் திரும்பவும், ''படுத்துக் கொண்டே பார்த்தேன். அதனால், படுக்கை அருகில், படுக்கையிலேயே, தலையணைக்கு அடியிலே கூட இருக்கக்கூடும். நன்றாகத் தேடி எடுத்து வாருங்கள், சைதன்யா'' என்ற நீதா, பூபாலனின் பக்கம் திரும்பி, ''காலையிலேயே வரச் சொல்லிவிட்டேனே, சரியாகச் சாப்பிட்டீர்களோ, என்னவோ? கொஞ்சம் பலகாரம் சாப்பிடுங்களேன்'' என்று உபசரித்தாள்.

பொதுவாக பூபாலன் உணவை மறுக்கிறவன் அல்ல. ஆனால், வேலைக்கான பொழுது குறைவாக இருப்பதால், சட்டுபுட்டென வேலையை விரைவில் முடித்துக்கொண்டு, சீக்கிரமாக அலுவலகத்துக்குச் சென்றாக வேண்டிய நிலையை நீதாவிடம் விளக்கிச் சொன்னான் அவன்.

**லே**சாக முறுவலித்தவாறே படிகளில் ஏறினாள் சைதன்யா. அழகான மாடிப்படி




''இவரை ஏன் கைது செய்து கொண்டு வந்தீர்கள்..?''
''தாங்கள் போருக்குப் போவது நிச்சயம் என்று புரளி கிளப்பிக்கொண்டிருந்தார் மன்னா..!''
- ஏ.நாகராஜன், சென்னை-75.

வளைவு முடிந்து, மாடி வராந்தா தொடங்கியது. வலதுபுறமாக இரண்டாவது அறை. திறந்து கொண்டு உள்ளே சென்றால் அறையின் நேர்த்தி கண்ணைப் பறித்தது. இருபுறச் சுவர்களில் பெரிய பெரிய ஜன்னல்களும் பொருத்தமான அழகிய திரைகளும், பூஜாடிகளும், மற்ற சுவர்களை அடைத்து வார்ட்ரோப் அமைப்பும். பெரிய அறை மிக அழகாக இருந்தது. மிக சுத்தமாகவும்.

ஆனால், சுத்தத்துக்கு என்ன குறை? அதைச் செய்யவே எத்தனை வேலையாட்கள் இருப்பார்களோ?

ஒருகணம் புகைந்தபோதும் உடனேயே சைதன்யா தன்னைத் திருத்திக்கொண்டாள். இப்போது இதைப் பற்றி எண்ணிப் பார்ப்பது முட்டாள்தனம். அதுவும், இந்த முறையில் யோசிப்பது படு முட்டாள்தனம்.

நேற்றும் நாளையும் இல்லை என்றுவிடுத்து, இன்றைக்காக மட்டும் வாழ்வதே அவளைப் பொறுத்த வரை நல்லது. வந்த வேலையை மட்டும் முடித்துக்கொண்டு, இங்கிருந்து வேகமாக வெளியேறுவது அவளது மன அமைதிக்கு மிகமிக நல்லது.

இப்படி எண்ணி அவளது டிசைன் ஃபைலுக்காகச் சுற்றிலும் பார்வையால் துழாவியவளுக்கு, ஏதோ பொருத்தமற்று உறுத்தியது. நின்று, அதை ஆராய மனமற்று ஒதுக்கிவிட்டு, ஃபைலை அவசரமாகத் தேடினாள்.

படுத்துக்கொண்டே பார்த்ததாக நீதா சொன்னாளே... அவளது வார்த்தைகளும், ஜன்னல் பக்கமாக அறையின் ஒருபுறத்தில் கிடந்த பெரிய கட்டிலும் எழுப்பிய சித்திரங்களைக் கஷ்டப்பட்டு ஒதுக்கியவாறே, ஃபைலைத் தேடினாள் சைதன்யா. பார்வையில் படும்படியாக வெளியே எங்கும் இல்லை அது.

நீதா சொன்னது போலத் தலையணைக்கு அடியில் தேடுவதற்காக, ஒரு தலையணையைக் குனிந்து அவள் தூக்கியபோது, ''நான் அவ்வளவு சொன்ன பிறகும், எங்கே வந்து, என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்ற ஆண் குரலில், தூக்கிவாரிப் போடத் திரும்பிப் பார்த்தாள் சைதன்யா.

அவன்தான்... ஒரு புறத்துச் சுவரில் இருந்த வார்ட்ரோப் அமைப்பின் நடுவே இருந்த குளியலறைக் கதவின் வழியே ஈரம் சொட்ட வந்து நின்றவன், மானபரனேதான்.

என்ன எப்படி என்று ஒன்றும் யோசிக்க முடியாமல் மூளை மரத்துவிட, கையிலிருந்த தலையணையை ஒரு கேடயம் போல இறுகப் பற்றியபடி, அவனை வெறித்து நோக்கினாள் அவள்.



(தொடரும்)



sms

''என்னது... எல்.கே.ஜி. அட்மிஷனுக்கு டொனேஷன் ஒரு கோடி கேக்கறாங்களா... ஸ்கூல் பேரு?''
''நயன்தாரா மெட்ரிகுலேஷன் ஸ்கூல்!''

- க.அன்பரசன், வேலூர்.



சற்று நேரம்...
அது சில வினாடிகளாகவும்
இருக்கலாம்... சில நிமிஷங்களாகவும்
இருக்கலாம். ஒரு பழைய
திரைப்படத்தில் வருகிறமாதிரி,
சைதன்யாவுக்கு உலகம் அசைவற்றுப்
போயிற்று. இனி காண முடியாதே என்று
ஏங்கி, காணவே கூடாது என்று ஒதுங்கி
இருந்தவளுக்கு, அதெல்லாம் ஏன்,
எப்படி என்ற நினைவே இப்போது வரவில்லை.

# கண்ட நாள் முதலாய்...

'மனு'வும் 'சது'வுமாக அவர்கள் நேசமாகப் பழகிய காலத்தில்கூட, வெற்று மார்பில் ஈரத் துணிகளோடு இந்தத் தோற்றம், அவள் கனவில் கூட கண்டிராத ஒன்று. கற்பனையில்கூட கண்ணியம் காத்தவள்.

ஆனால், சற்றும் எதிர்பாராத இந்தத் தோற்றத்தில், மின்னல் தாக்கியது போலச் செயலிழந்து போனாள் அவள்.

''என்னம்மா, பார்க்கப் பார்க்கத் தெவிட்டவில்லையா?'' என்ற மானபரனின் ஏளனக் குரல்தான், அவளைத் தட்டி எழுப்பியது எனலாம். சுய உணர்வுக்கும் கொண்டு வந்தது.

மூன்று ஆண்டுகளாகப் பயின்றதும் இருக்கிறதில்லையா?

சட்டென சுதாரித்து, ''நா...ன்... வந்து... இங்கே என் ஃபைலைத் தேடி வந்தேன்'' என்று, இயன்ற விளக்கம் சொன்னாள்.

''ஓகோ! அதைத்தான் இன்னமும் என் தலையணையில் தேடிக் கொண்டிருக்கிறாய் போல'' என்று அவன் இளக்காரமாகக் கேட்ட பிறகுதான், கையில் தலையணை இருப்பதே சைதன்யாவுக்கு நினைவு வந்தது. தீச் சுட்டவள் போல அதிலிருந்து கையை அவள் விலக்க, தலையணை கீழே விழுந்தது. என்ன இது என்ற சலிப்புடன் தலையணையைத் தூக்கிக் கட்டிலில் வைத்துவிட்டுத் திரும்பினால், மானபரன் அருகில் வந்திருந்தான்.

அவளது கரத்தை இறுகப் பற்றி, ''கதவைத் திறக்கிற சத்தம் கேட்கிறதே என்று பார்க்க வந்தால்... இந்தக் கட்டில் நம்முடையதாக இருந்திருக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தாய் போல?'' என்றான் குத்தலாக.

அவன் கை தொட்டதும், தீச் சுட்டது போலத்தான் இருந்தது அவளுக்கு. மூச்சு வாங்க, ''மனு, ப்ளீஸ்'' என்று விடுவித்துக்கொள்ள சைதன்யா முயன்றபோது, அவனே விட்டு விலகிவிட, அங்கிருந்து வெளியேற ஓடியவள், அறை வாயிலில் சட்டென நின்றாள்.

இப்படி மூச்சு வாங்கிக்கொண்டு கீழே செல்ல முடியாது. வேக மூச்சுகளை எடுத்து, மூச்சுப் பிரச்னையை அவள் சமனம் செய்ததைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, ''முகச் சிவப்பை என்ன செய்வதாக உத்தேசம்?'' என்றான் அவன், மீண்டும் ஏளனமாகவே.

ஓர் ஆத்திரப் பார்வையை அவனிடம் செலுத்திவிட்டு, கன்னங்களைத் தேய்த்து விட்டவாறே வேகமாகப் படியிறங்கிச் சென்றாள்.

''என்ன, ஏதோ பேயைப் பார்த்த மாதிரி விழுந்தடித்து ஓடி வருகிறாயே? மெய்யாகவே, அங்கே ஏதேனும் பேய் இருந்ததா?'' என்று விழிகள் பளபளக்க நீதா கேட்ட விதம், சைதன்யாவின் வயிற்றில் ஏதோ செய்தது.

''தாயே... நல்ல சாப்பாடு சாப்பிட்டு ரொம்ப நாள் ஆச்சு...''

''நேத்துகூட நான் போட்டேனே..?''

''நான் நல்ல சாப்பாட்டை சொன்னேன் தாயே!''

- உஷா சாரதி, சென்னை-5.



SMS

இவளுக்கு ஏதேனும் தெரியுமா... அல்லது சும்மா சந்தேகமா? அன்று 'க்யூரியோ' கண்ணாடியில் பார்த்தது வேண்டுமென்றேதானோ?

குழப்பம், கலக்கம் எதையும் வெளிக்காட்டாமல், "அந்த அறையில் நான் தேடிப் போனது என் ஃபைலை. அது அங்கே இல்லை, மேடம்" என்றாள் சைதன்யா, முடிந்தவரை நிதானமாகவே.

பார்வையைச் சைதன்யாவின் முகத்திலேயே பதித்து, "நன்றாகத் தேடினாயா? அல்லது அதற்குள் ஏதேனும் பேய், பிசாசு விரட்டிவிட்டதா?" என்று விசாரணை செய்தாள் மற்றவள்.

"வேண்டுமானால் இன்னொரு தரம் போய்ப் பார்க்கிறாயா?"

அந்த அறைக்குள் திரும்பவும் செல்வதா? "தேவை இல்லை, மிசஸ் நீதா. நீங்கள் சொன்ன இடமெல்லாம் பார்த்துவிட்டேன். என் ஃபைல் அங்கே இருக்க வாய்ப்பு இல்லை" என்று முடிக்க முயன்றாள் சைதன்யா.

"அதெப்படி உனக்கு அவ்வளவு நிச்சயம்?" என்றாள் மற்றவள் விடாமல்.

"மேஜை மேல் பெல்ட், வாலட், பேனா என்று கிடந்தவை, ஆண்கள் பயன்படுத்துகிறவை. அது உங்கள் அறையே இல்லை என்றுதான் எனக்குத் தோன்றியது" என்று நீதாவை நேராகப் பார்த்துச் சொன்னாள் சைதன்யா.

> "டைரக்டர் சார், உங்க படத்தைப் பார்த்தேன்... புரியலையே?"
> "இந்த மாதிரி படத்தை ஒரு தடவை பார்த்தா புரியாது... பார்க்கப் பார்க்கத் தான் புரியும்!"
> - சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.
>
> 
>
> SMS

பார்வை விலக, "ஐயையோ" என்று மீண்டும் கையை உதறினாள் நீதா. "நீ அறை மாற்றிப் போய்விட்டாய் போலிருக்கிறதே. அதோ, அந்த அறைக்குள்தானே தேடினாய்?" – மாடிப்படி நோக்கித் திரும்பிக் கையை நீட்டிக் காட்டினாள்.

மாடிப்படிக்கு மறுபுறம் உள்ள அறை. அதாவது, இடது பக்கம் உள்ளது.

"நீங்கள் வலது பக்கம் என்றீர்களே..."

"இல்லையே" என்று கண்ணை விரித்தாள் நீதா. "இடது பக்கம் என்று தெளிவாகச் சொன்னேனே. தப்பாகப் போய் விட்டாயா? அச்சச்சோ... பாவம்!" என்று வார்த்தையால் பரிதாபப்பட்டுவிட்டு, "அங்கே என்ன நடந்தது?" என்று ஆவலாக விசாரித்தாள்.

நீதாவின் கண்களில் மறுபடியும் அந்தப் பளபளப்பைக் காணவும், சைதன்யாவுக்கு மீண்டும் வயிற்றில் பிசைந்தது. இவள் என்னைச் சீண்டிப் பார்க்கிறாளா? ஏதாவது சந்தேகமா? அல்லது, கணவன் மீது அதிகமான உரிமை உணர்வா என்று மறுபடியும் மனம் கலங்கியது.

எதுவானாலும், அதற்குத் தீனி போடுவது ஆபத்து. இந்த மூன்று ஆண்டுகளில், மனைவியின் குணம் மானபரனுக்கும் தெரிந்துதான்



இருக்கும். அவனுக்கும் கவனம் இருக்கும். அவன் தானாக வாயை விடுகிறவனும் அல்ல.

"என்ன நடக்கும்?'' என்று கையை விரித்தாள் சைதன்யா. ''நீங்கள் சொன்ன இடங்களில் தேடினேன். அப்போதே ஆண்களின் பொருட்கள் கண்ணில் பட்டன. பர்ஸ் வேறு இருக்கவும், பயந்து ஓடி வந்துவிட்டேன்'' என்றாள் தெளிவாக.

''ஓ! பயமா? அதுதான் முகம் கன்றித் தெரிந்ததா?'' என்றாள் நீதா சலித்த குரலில்... "சரி சரி... நீயும் சாப்பிடு சைதன்யா. நான் போய் ஃபைலை எடுத்து வருகிறேன்'' என்று எழுந்து போனாள்.

நிமிர்ந்து பாராவிட்டாலும், அவள் வலதுபுறமே செல்வது பார்வை வட்டத்துள் விழ, சைதன்யாவின் நெஞ்சு படபடத்தது.

மானபரனிடம் கேட்பாளா? அவன் ஏதாவது சொல்லிவிட்டால்... ஆனால், சொல்வதற்கு என்ன இருக்கிறது? அவன் பேசியதைச் சொல்ல முடியாது. அவளது வார்த்தைகளில் ஒன்றுமே இல்லையே...

சட்டெனத் திரும்பி, "பூபால், நீதா வலது பக்கம் என்றாளா? இடதுபுறம் என்றேதான் கூறினாளா?" என்றுஅவசரமாகக் கேட்டாள்.

வாயில் இருந்ததை விழுங்கிவிட்டு, சற்று யோசித்துப் பார்த்தான் அவன். பிறகு, ''நான் சரியாகக் கவனிக்கவில்லையே சைது... காலையில் அவசரமாகக் கிளம்பி வந்ததில் சாப்பிடாமல் வந்தேனா... பக்க மேஜையில் பலகார வாசனை வரவும், எனக்கு வேறு எதுவுமே கவனம் இல்லை. பரோட்டாவும் பன்னீர் குருமாவும் பிரமாதம். நெய் வடிய கேசரி வேறு! நீயும் சாப்பிடு... சொன்னார்கள்தானே? எனக்கு ஆச்சரியம் என்னவென்றால், இதையெல்லாம் சாப்பிட்டும், மேடம் எப்படித்தான் இவ்வளவு ஒல்லியாக இருக்கிறாளோ, என்பதுதான்!'' என்றான். சற்றுத் திகைத்து, அவனது தட்டைப் பார்த்தாள் சைதன்யா. நெய்யால் கழுவியதைப் போல இருந்தது.

**நீ**தா திரும்பி வந்து பார்த்த போது, சற்று முன் எடுத்த அளவுகளின்படி, சில உடைகளைப் படமாக வடிவமைத்துக் கொண்டிருந்தாள் சைதன்யா.

ஃபைலுடன் வந்தவள், "சாப்பிடவில்லை? சாப்பிடு...'' என்று உபசாரம் செய்தாள். "உடை டிசைன் பார்ப்பதை, நீ சாப்பிட்டபிறகே வைத்துக் கொள்ளலாம்'' என்றாள் பெருந்தன்மையாக.

''இல்லை மேடம்... வேலையையே பார்க்கலாம். நான் வீட்டில் சாப்பிட்டுவிட்டுத்தான் வந்தேன்'' என்றாள் சைதன்யா தீர்மானமாக.

சற்று நேரம் உடைகளின் அமைப்புகள், என்ன மாதிரி துணி என்பனவற்றை ஆராய்ந்தனர். கடைசியாக, உயர் வகையான சுத்தப் பட்டு, வெல்வெட் என முடிவு செய்தனர். பட்டுக்கு லைனிங்



கொடுப்பது, இட்டாலியன் கிரேப் என்றும் முடிவு செய்யப்பட்டது.

கடைசியாகக் கிளம்பும்போது, வழக்கமாகி விட்ட விதமாக, இனிப்பு பாக்கெட்களை நீதா பெரிய வீட்டுப் பரிசாக நீட்ட, சைதன்யா வாங்க மறுத்தாள்.

''வேண்டாம், நீதா மேடம்... இதையெல்லாம் சாப்பிட, எங்கள் வீட்டில் ஆள் இல்லை'' என்றாள்.

முகம் மாற, "ஆள் இல்லையா? நீ இல்லை... சாப்பிடுவதுதானே?'' என்றாள் மற்றவள்.

''இவ்வளவும் சாப்பிட்டால் தொப்பை போடும். இடுப்பு காணாமல் பொய்யோ எனும் இடையாளாகும்! தேவைதானா?'' என்று வேடிக்கைப் பேச்சிலேயே முடிக்க முயன்றாள் சைதன்யா.

ஆனால் மற்ற இருவரும் எதிர்பாரா வண்ணம், "அப்படி எவனுக்காகடி அழகை இப்படிப் பாதுகாக்கிறாய்? என்னவோ, தொழில்தான் எல்லாம் என்று கதை கட்டினாயே'' என்று ஆத்திரத்துடன் கிறீச்சிட்டாள் நீதா.

இருவருக்குமே திகைப்புதான் என்றாலும், பூபாலன் மிரண்டுபோனான். நீதா இப்படிக் கத்தக்கூடும் என்று எதிர்பாராவிட்டாலும், ஓரளவு ஊகித்திருந்த சைதன்யா, அமைதியாகவே பேசிச் சமாளித்தாள்.

"இப்போதும் அதுதான் உண்மை, நீதா மேடம். நாங்கள் உடை அமைப்பாளர்கள். எங்களைத் தேடி வருகிறவர்கள் தேடுவதும் அழகை அதிகப்படுத்திக் காட்டும்படியான உடைகளையே. நாங்களே நன்றாயிராவிட்டால், வாடிக்கை எப்படி வரும்? நீங்கள் திரும்பிப் பார்ப்பீர்களா... சொல்லுங்கள்? அதற்காகத்தான் இப்படி ஆசைப்பட்டதை உண்ண முடியாமல் பட்டினியெல்லாம் கிடப்பது'' என்று அவள் வருத்தம் போலக் காட்டவும், நீதாவின் முகம் சற்றுத் தெளிந்தது.

"அடடா! விருப்பம் போல சாப்பிட்டு வாழ முடியவில்லை என்றால், ரொம்பக் கஷ்டம்தான் இல்லையா? பிழைப்புக்காக என்னவெல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது? பா...வம்!'' என்று பரிதாபப்பட்டதோடு, இனிப்புகளைத் திணிக்காமலே அவர்களை வழியனுப்பி வைத்தாள்.

திரும்பிச் செல்கையில் பூபாலன் எரிச்சலுடன் குறைப்பட்டான். "உனக்கு வேண்டாம் என்றால், வருகிற வழியில் சத்தமில்லாமல் என்னிடம் தர வேண்டியதுதானே? இப்போது ஒருவருக்கும் இல்லாது போயிற்று'' என்று புலம்பினான்.

''நீ மட்டும் குண்டாகலாமா? தொப்பையை நீட்டிக்கொண்டு போய் ஷெர்வானியை விற்க முடியுமா? வெறும் ஒரு குர்த்தாவை சொல்லு!''

அதற்கு பதில்



> **SMS**
>
> "அந்த நடிகைக்கு ரொம்ப வயசாயிடுச்சுன்னு எப்படிச் சொல்றே?"
>
> "தலையில வச்சிருக்க 'விக்'கூட நரைக்க ஆரம்பிச்சிடுச்சே!'
>
> – க.கலைவாணன், பாப்பிரெட்டிபட்டி.

சொல்லாமல், "அப்படி ஒன்றும் நீ பட்டினி கிடக்கிறவள் இல்லையே. ஏன் அப்படிப் பொய் சொன்னாய்?" என்று கேட்டான் அவன்.

ஒரு சிறு அமைதியின் பின் சைதன்யா பதிலிறுத்தாள். "நீதாவிடம் நாம் சற்று எச்சரிக்கையோடு இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது, பூபால். அவளிடம் ஒரு வக்ரம் இருக்கிறதோ என்ற ஐயம் எனக்கு. நாம் நாலு பேருமே, ஓரளவு உடம்பைப் பேணுகிறவர்கள். அதைக் கெடுக்க எண்ணுகிறாள் என்று தோன்றுகிறது. மிசஸ் நீதா நமக்குச் சாப்பிடக் கொடுத்ததை எல்லாம் யோசித்துப் பார். நெய்யும் சர்க்கரையும் முந்திரியும் பிஸ்தாவும். அங்கே உண்ணச் சொல்லுவது மட்டும் இல்லாமல், கிலோ கணக்கில் கையில் வேறு. முகத்தில் அடித்தாற்போல மறுக்கவும் முடியாது. பெரிய வாடிக்கை வேறு. இப்போது பசியும் பட்டினியுமாகக் கஷ்டப்படுவது போலப் பேசியதுமே, அவளுக்குத் திருப்தியாகிவிட்டது பார்த்தாயா?"

சற்று யோசித்துவிட்டுத் தலையாட்டினான் அவன்.

"அதோடு இன்னொன்றைக் கவனித்தாயா? அவளுக்கு ஏதேனும் தேவை என்றால், 'நீங்கள்' போடுவது, அப்படியில்லை என்றால் ஒருமையில் பேசுகிறாள் என்பதை?"

"நீ சொல்லும்வரை எனக்குத் தோன்றவே இல்லை" என்று திகைத்தான் பூபாலன்.

"அதற்கு மண்டைக்குள் கொஞ்சம் இது வேண்டும், சின்...னக் குட்டிப்பையா!" என்று அவள் கிண்டலடிக்க, "இந்த சோதாப் பேச்சை இவ்வளவு நேரமாகக் காணோமே என்று பார்த்தேன்!" என்றான் பூபாலன்.

வழக்கமான கேலியும் கிண்டலுமாகச் சற்று நேரம் பேசியபோதும், 'திரும்பிப்பாரி'ல் ஆட்டோவில் இருந்து இறங்கி உள்ளே செல்லுகையில், "காலையில் நான் வேறு நினைத்தேன், சைது. ஆனால், இப்போதானால், இந்த வாடிக்கை வேலையாக நீ எங்கே போனாலும், உன் துணையாகக் கூடவேதான் இருக்கப் போகிறேன்" என்றான்.

சட்டென நெஞ்சு கனத்தது அவளுக்கு.

உடன்பிறந்தவர்கள் என்று யாருமே இல்லையே என்று சில சமயங்களில் சைதன்யா நினைப்பது உண்டு. ஆனால், இதோ ஒரு சகோதரன் இருக்கிறானே!

மனோகரியின் நினைவு வர, 'இவனது வாழ்க்கையேனும் நல்லவிதமாக அமைய வேண்டும் கடவுளே!' என்று வேண்டிக் கொண்டாள் அவள்.

கூடவே, மானபரனின் ஞாபகமும் வந்தது. ஆனால், அவன் தொடர்பாகக் கடவுளிடம் என்னவென்று வேண்டுவது? அவனது தவறான கருத்தை நீக்குவதுகூட சரியில்லையே.

(தொடரும்)


FORM-IV RULE-8

**KUNGUMAM**

| | |
|---|---|
| 1. Place of Publication | : 229, Kutchery Road, Mylapore, Chennai - 600 004. |
| 2. Periodicity of the Publication | : Weekly |
| 3. Printer's Name | : S. Selvam |
| (Whether citizen of India (if Foreigner state the country of origin) | : Indian |
| Address | : Plot No. 170 & No. 10, First Main Road, Nehru Nagar, Perungudi, Chennai - 600 096. |
| 4. Publisher's Name | : S. Selvam |
| (Whether citizen of India (if Foreigner state the country of origin) | : Indian |
| Address | : 229, Kutchery Road, Mylapore, Chennai - 600 004. |
| 5. Editor's Name | : Parasakthi |
| (Whether citizen of India (if Foreigner state the country of origin) | : Indian |
| Address | : 229, Kutchery Road, Mylapore, Chennai - 600 004. |
| 6. Name & Address of Individuals who own the newspaper & Partners or share holders holding more than one Percent of the total capital. | : Kungumam Publications (P) Ltd., 229, Kutchery Road, Mylapore, Chennai -4. |

I, S. Selvam hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Chennai
01.03.2009

Sd. S.Selvam
Signature of Publisher

● ரமணிசந்திரன் மனம் மயக்கும் மலர் தொடர்



வழக்கம் போல இரவின் தனிமையில் சைதன்யா யோசிக்கலானாள். படுத்ததும் மனக்கண் முன் வரும் மானபரனின் முகத்தை 'போயேன்... போயேன்...' என்று விரட்டிவிட்டு, அன்றைய நடப்புகள் அனைத்தையும் அலசி ஆராயும் அன்றாடப் பழக்கம் அன்று நடக்கவில்லை.

முன் கதையை ஒதுக்கினால் அல்லவா பின் கதையை யோசிப்பது! மீண்டும் மீண்டும் அவன் தோற்றமே; அல்லது அவன் தொடர்பான ஏதாவது! அவனை அப்படிப் பார்த்ததே மனதைக் குலைப்பதற்குப் போதுமே! ஆனால் அதற்கும் மேலாக, அவனது அறையில் என்னவோ மனதைக் குடைந்தது!

ஃபைலுக்காக உள்ளே செல்லும்போதே ஏதோ தோன்றி

னாற் போல! என்ன அது?

ஓ! அது ஒரு திருமணமான வனின் அறையாகவே தோன்ற வில்லை! ஒரு மனைவியின் பிரசன்னமாக அங்கே எதுவும் இல்லை! அப்படியானால்..?

மிக முயன்று மனவோட்டத்துக்குத் தடை போட்டாள் சைதன்யா. இதுபோல யோசிப்பதே தப்பு அல்லவா? அவளாக, மனதாரப் 'போ' என்று சொன்னபிறகு, அவனை நினைப்பதே தவறு! அவனது மண வாழ்வு சரியில்லை என்பது போல யோசிப்பது பெரிய பிசகு!

நீறு பூத்த நெருப்பாக இருக்கும் அடி மனது ஆசை, இப்போது அவளது பார்வைக்குத் தப்பு வண்ணம் பூசியதோ என்று எண்ணுகையில் ரொம்பவே கூசியது. அவளுக்குக் கொஞ்சமேனும் மூளை இருந்தால், அந்த வீட்டுப் பக்கமே திரும்பாமல் இருப்பதுதான் எல்லோருக்கும் நல்லது! முக்கியமாக அவளுக்கு! ஆனால், இதே ஆலோசனை இன்னொருவர் வாயிலிருந்து வந்தபோது, அவளால் ஒப்புக்கொள்ள முடியவில்லை!

**ம**றுநாள் தந்தையை அவரது அலுவலுக்கு அனுப்பி விட்டு, மீதமிருந்த வேலைகளை முடித்துக் கொண்டு வழக்கம் போல, சைதன்யா வேலைக்குக் கிளம்பினால், சற்று தூரம் செல்லுமுன், ஒரு கார் அருகே வந்து நின்று கதவு திறந்தது! ''ஏறு'' என்றான் மானபரன்.

சிவுக்கெனக் கோபம் வந்தது அவளுக்கு.

''மானம் மரியாதையோடு வாழுகிற இடம். வழியில் வந்து நிற்கும் காரில் ஏறினால், அக்கம்பக்கம் உள்ளவர்கள் என்ன நினைப்பார்கள்?'' என்று சீறினாள் சைதன்யா.

எதற்கு ஆத்திரப்படுகிறோம்? அமைதியாகவே மறுக்கலாம் என்று நினைத்தபோதும், நெஞ்சு படபடப்பதை அவளால் கட்டுப்படுத்த முடியவில்லை.

''இப்படி நின்று விவாதம் பண்ணினால், இன்னும் அதிகமாகத் தான் வம்புப் பேச்சு வளரும். அதோடு, இப்போது நீ உடன் வராவிட்டால், நாளை உன் தந்தை இருக்கும்போதே வீட்டுக்கு வந்து அழைத்துப் போவேன். அவருக்கு என்னைத் தெரியும்தானே?'' என்றான் ஏளனமாக.

''பயந்து ஓடுவதா? எனக்கென்ன பயம்?'' என்று மறுக்கும்போதே, முந்திய நாள் அவனது அறைக்குள் சென்றது பற்றி மட்டுமேனும் இவனிடம் விளக்கி விடலாமே... அனாவசியமாக அந்தப் பழி வேறு ஏன் சுமக்க வேண்டும் என்று தோன்ற, சட்டென காரில் ஏறி அமர்ந்தாள்.

கூடவே இன்னொன்றும் தோன்ற, ''ஏசி கார்... என் மூச்சுக் காற்று உள்ளே பரவுமே, பரவாயில்லையா?'' என்று குத்தலாகக் கேட்டாள்.

அவளை முறைத்


SMS

''டாக்டர் இதுக்கு முன்னால ஆட்டோஓட்டிக்கிட்டிருந்தாரா?''

''ஏன் கேக்கறீங்க?''

''ஃபீஸ் வாங்கும்போது, 'மேலபோட்டுக் குடுங்க'ன்னு கேக்கறாரே!''

– பீ.என்.நரசிம்மமூர்த்தி, சென்னை–33.

துவிட்டுக் காரை எடுத்தான் மானபரன். ஓட்டிய வாறே, "என்ன செய்வது? அழுக்கையும் தொட்டுத்தானே சுத்தம் செய்ய வேண்டியிருக்கிறது?'' என்றான்.

அழுக்கா? அவளா? வலியை மறைத்துப் பேசினாள் சைதன்யா. "அதாவது, நான் வந்ததால் உங்கள் வீடு அழுக்காகிவிட்டது என்கிறீர்களாக்கும்! ஆனால், நான்...''

"வேண்டாம்!'' என்று குறுக்கிட்டான் மானபரன். "இந்த சில்லறை வாக்குவாதம் வேண்டாம். அதிலே உன் சொல் திறமையைப் பார்த்து வியக்க, நான் இப்போது தயாராக இல்லை! சொல்லு... என் வீட்டுக்கு ஏன் வந்தாய்? அதுவும் படுக்கையறை வரை! மூன்று ஆண்டுகள் முயன்றும், நீ விரும்பியது போலப் பணக்கார கிறுக்கன் எவனும் கிடைக்கவே இல்லையா? ஒரு முறை ஏமாந்தவன்தானே, மறுபடி அவனையே பிடிக்கலாம் என்று எண்ணி வந்தாயா? உன் புதிய திட்டம் ஒரு நாளும் பலிக்காது. தெரிந்துகொள்!'' என்று வெறுப்புடன் பொரிந்து கொட்டினான்.

"சொல்லி முடித்துவிட்டீர்களா?'' அவன் பேச்சை இடையில் தடுக்க முயன்று, முடியாமல் போய்விடவே, அவன் பேசி முடிக்கும்வரை பொறுத்திருந்துவிட்டு, எரிச்சலுடன் கேட்டாள் சைதன்யா. "எனக்கே தெரியாத இந்தத் திட்டங்களை எல்லாம், என் மனதுக்குள் புகுந்து எப்படித்தான் கண்டுபிடித்தீர்களோ, எனக்குத் தெரியாது! ஆனால், உங்கள் கண்டுபிடிப்பு எதுவும் சரியில்லை! ஏனென்றால், அது உங்கள் வீடு என்றே, வரும்போது எனக்குத் தெரியாது!'' என்றாள் அவளும், அவனது குரலிலேயே!




அவள் மேலே பேசு முன், ஏளனமாகச் சிரித்தான் மானபரன்... "ஒன்று தெரியுமா, ஒரு காலத்தில் நேற்று சூரியன் மேற்கே உதித்தது என்று நீ சொல்லியிருந்தாலும், என்னிடம் நீ பொய் சொல்ல மாட்டாய் என்று அதை அப்படியே நம்பியிருப்பேன்! ஆனால், மூன்று ஆண்டுகளுக்கு முன்பே, அந்த சகாப்தம் முடிந்து போய்விட்டது! கிழக்குக் கடற்கரைச் சாலையில் உள்ள தனி வீடு! யார் வீடு என்று தெரியாமலா அவ்வளவு தூரம் வந்திருப்பாய்? சொல்லுகிற கதையைக் கொஞ்சம் நம்பும்படிச் சொல்!'' என்றான் இளக்காரமாக.

"நீங்கள் நம்பினாலும், நம்பாவிட்டாலும் உண்மை அதுதான்! அது உங்கள் வீடு என்று எனக்குத் தெரியாது. உங்கள் மனைவி முகவரி கொடுத்ததும் விசாரித்தோம். வீடு, 'நீதா எக்ஸ்போர்ட்ஸ்' என்ற நிறுவனத்தின் பெயரில் இருந்தது! உங்கள் மனைவியும் பெயரை 'நீதா பரன்' என்று மட்டும்தான் சொன்னாள். இதற்கு மேல் சந்தேகிக்க என்ன இருக்கிறது? ஆனால், உங்கள் பெயரில் பாதியை மட்டுமே உங்கள் மனைவி சொன்னாள் என்று எனக்கு எப்படித் தெரியும்?

அப்போதும், நான் தனியாக வர வில்லை...''

"ஆனால் என் அறைக்குத் தனியாகத்தானே வந்தாய்? ஒருவேளை, அங்கே துணையோடு வந்தால் நன்றாயிராது என்று எண்ணினாய் போல!''

பேச்சை மீறிய சீற்றத்துடன் அவனை முறைத்தாள் அவள்.

அந்தப் பார்வையை அவன் உணராதிருக்க வழியில்லை. ஆனால், சாலையிலேயே பார்வையைப் பதித்து, "என்ன பதிலையே காணோம்? என் அறைக்குள் நீ காலடி எடுத்து வைத்ததே எவ்வளவு பெரிய பிசகு என்று தெரியவில்லை?'' என்றான்.

"அது மட்டுமா பிசகு?'' என்று கேட்டாள் சைதன்யா. "நாலு ஆண்டுகளுக்கு முன்னே உங்களை முதல் முதலாகச் சந்தித்ததே மிகப் பெரிய பிசகுதான். பிறகு பார்த்தது, பழகியது... எல்லாம்! அந்தப் பிழையில் எல்லாம் எனக்கும் பங்கு உண்டுதான்! ஆனால், உங்கள் அறைக்குள் வந்தேனே, அதில் என் தவறு அணுவளவு கூடக் கிடையாது! முழுப் பொறுப்பும் உங்கள் ஆசை மனைவி திருமதி நீதாபரனது மட்டுமேதான்!'' என்று முடித்தாள்.

உடல் விறைப்புற்று நிமிர்ந்த போதும் நம்பாத தோரணையில், "நீதாவா? என்ன கதை இது?'' என்று கேட்டான் அவன்.

"கதையுமில்லை, மண்ணாங்கட்டியும் இல்லை! என் ஃபைல் என்றேனே, அதாவது நினைவிருக்கிறதா. எங்கள் டிரஸ் டிசைன் ஃபைல் அது. எங்கள் நிறுவனத்தில் சில உடைகள் தைக்க வேண்டும் என்று உங்கள் நீதா கேட்டதால், மாதிரிப் படங்கள் அடங்கிய ஃபைலைக் கொடுத்திருந்தேன். இரவில் அதைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுத் தலையணையின் கீழ் வைத்ததாக உங்கள் மனைவி சொன்னாள்...''

"அதைத் தேட அவள் அறைக்கல்லவா போக வேண்டும்?''

"நிச்சயமாக! ஆனால், உங்கள் மனைவியின் அறை எது என்று எனக்கு எப்படித் தெரியும்? வலது பக்கத்து அறைக்குள் ஃபைல் இருக்கிறது என்று உங்கள் மனைவி சொன்னதும், சரிதான் என்று வந்துவிட்டேன்! பிறகு நடந்ததுதான் உங்களுக்கே தெரியுமே'' என்றாள் குரலில் கசப்பும் வெறுப்புமாக.

ஒரு வழியாக மானபரன் மௌனமாகக் காரை ஓட்டலானான். ஓரக்கண்ணில் பட்ட, சற்றே சுளித்திருந்த புருவம் யோசனையைக் காட்டியது. அவள் சொன்னதை நம்பினானா? அல்லது, அதில் ஏதாவது ஓட்டை இருக்கிறதா என்று தேடிக் கொண்டிருக்கிறானா?

அப்படித் தேடினால் அதற்காக அவனைக் குற்றம் சொல்ல முடியாது என்று அவனை மனதுக்குள் நியாயப்படுத்தினாலும், அவனது தவறான குற்றச்சாட்டுகளை



**sms**

"என்ன இது... தொண்டர்கள் எல்லாரும் கத்தி, அரிவாள், கோடாரின்னு 'கூர்மையான' ஆயுதங்களோட வந்திருக்காங்க..?"

"தலைவர் எல்லாரையும் 'ஷார்ப்'பா பத்து மணிக்கு வரச் சொன்னாராம்!"

*- பீ.என்.நரசிம்மமூர்த்தி, சென்னை-33.*

அவளால் தாங்கவும் முடியவில்லை!

எனவே, தானே முந்திக்கொண்டு, அவன் வெளியே செல்லு முன் காலையில் ஒன்பது மணிக்கே, அங்கே வந்து நின்ற விவரத்தையும் தெரிவித்தாள்.



SMS

"அந்த ஜட்ஜ்பகிரங்கமா பணம் வாங்குவார்னு எப்படிச் சொல்றே..?"
"அங்கபாரு... 'கனம் கோர்ட்டார் அவர்களே'ன்னு சொல்றதுக்குப்பதிலா, 'பணம் கோர்ட்டார் அவர்களே'ன்னு சொல்றாங்க..!"
*-ஏ.டி.தமிழ்மணி, தனிகைவிடுதி.*

''சரியாக ஒன்பது மணிக்கு உங்கள் வீட்டில் இருக்க வேண்டும் என்று நீதா மேடம் வலியுறுத்திச் சொன்னாள்...''

சுளிப்பு இன்னமும் கூடியது போலத் தோன்றியது அவளுக்கு.

''அவர்களுக்கு வேறு வேலை இருப்பதால், அதற்கு முன் இதை முடித்துவிடலாம் என்று கூப்பிட்டதாகக் காரணம் சொல்லவே, நானும் பூபாலும் காலையிலேயே கிளம்பி வந்தோம். பூபால் காலையில் சாப்பிடக்கூட இல்லை! ஏன் நிறுத்துகிறீர்கள்? இறங்கிக் கொள்ளவா? பக்கத்திலும் வந்தாயிற்று. இனி, நான் நடந்தே போய்க் கொள்வேன்'' என்று கேட்டு கார் கதவைத் திறக்கப் போனாள் சைதன்யா.

''சற்று பொறு!'' என்றுவிட்டு, காரை நன்கு ஓரம் ஒதுக்கி நிறுத்தி விட்டு அவள் புறம் திரும்பினான் மானபரன்.

''எனக்குச் சில விவரங்கள் தெரிய வேண்டும். அன்று சொன்னது போல, இந்தத் 'திரும்பிப்பார்' நிறுவனத்தில் நீங்கள் நாலுபேர் பங்குதாரர்கள். சம பங்கு. சரிதானா?'' என்று கேட்டான்.

''ஆமாம். ஆனால் ஏன்?''

''அதுதான் என் கேள்வியும். நாலு பேர் பங்குதாரர்கள் எனும்போது, நீயும் பூபாலனும் மட்டுமே வீட்டுக்கு வருகிறீர்களே, ஏன்?'' என்று கேட்டான் அவன்.

''ஏனெனில், உங்கள் நீதாவின் விருப்பம் அது என்பதால். ஏதோ பார்ட்டியில், நான் தைத்துக் கொடுத்த ஓர் உடையைப் பார்த்து விட்டு, தனிப்பட்ட என்னையே அழைத்து, தனக்குச் சில உடைகள் அமைப்பதை என்னிடம் ஒப்படைத்தாள்...''

''அதாவது, நீதாதான் உங்கள் நிறுவனத்தை... குறிப்பாக உன்னைத் தேடி வந்தாள்?''

''ஆமாம். அழைப்பு, செக் எல்லாமே என் பெயரில்தான்...''

''அதற்குள் பணப்பட்டுவாடாவா? இன்னும் ஒன்றும் தைத்துக் கொடுக்கவில்லை!''

''அது...'' என்று தொடங்கிப் பண விவரம் சொன்னாள் சைதன்யா.

''ஓ...'' என்று கேட்டுக் கொண்டவன், ''எப்படியும் நிறுவனக் கணக்குதானே? நீங்கள் இருவர் மட்டுமாக வருவது ஏன் என்று சொல்லவில்லையே!''

அதாவது, நீ ஏன் வருகிறாய் என்று கேட்கிறான். அவளைப் பார்த்தால், அப்படி வலிக்கிறது போல! வலியா? பிடிக்கவில்லையா?

அமைதி காட்டியே பேசினாள் அவள். ''ஒருவர் மூலமாக வருகிற வாடிக்கையை அவர்களே தான்

தொடர்ந்து கவனிக்க வேண்டும் என்பது எங்கள் விதிகளுள் ஒன்று. அதனால்...''

"அதற்கு பூபாலன் என்ன கொசுறு? பாவம் அப்பாவி மனிதன். அவனையும் நாசமாக்கி விடாதே!'' என்றான் மானபரன்.

அவன் பேச்சு புரிய, சுருக்கென வலித்தது அவளுக்கு. அவளது ஒரு வார்த்தையில் இவன் என்ன தேவதாசாகவா ஆகிவிட்டான்? உடனே கல்யாணம் செய்துகொண்டு, அந்த மாதிரி வீடும் இந்த மாதிரி காருமாக வாழ்கிறவன், அவளை என்ன சொல்வது?

''நாங்கள் நாலு பேருமே நல்ல நண்பர்கள். உங்கள் வீடு மாதிரி தனியிடங்களுக்குப் பெண்கள் தனியே செல்வது நல்லதில்லை என்று எல்லோருமாக முடிவு பண்ணி, எனக்குத் துணையாக பூபால் வருகிறான்! இதில், அவன் நாசமாவது எங்கே வருகிறது?'' என்று கேட்டவள் தொடர்ந்து, "கிழக்குக் கடற்கரைச் சாலையில் பெரிய வீடும், டொயோட்டா காரும் நாசமாவதின் அறிகுறி என்று எனக்குத் தெரியாது!'' என்று திருப்பியும் கொடுத்தாள்.

ஆனால், உடனே மானபரன் கல்லாக இறுகிய விதத்தில், அவளே திகைத்துப் போனாள்.

**அ**வனைப் பற்றி அவளுக்குத் தெரியும். கோபமோ, வருத்தமோ, ரொம்பவும் மனம் பாதிக்கப்படுகிற போதுதான் இப்படி இருப்பான். இப்போது என்ன?

அவனது இறுக்கம் தாங்க முடியாமல், "உங்களுக்கு என்ன பிரச்னை, மனு?'' என்று மெல்லிய குரலில் வினவினாள்.

ஒரு சில வினாடிகள் மானபரன் எதுவுமே பேசவில்லை. ஆனால், ஒரு பெரிய மூச்சின் பின் அவள் புறம் திரும்பியபோது, அவன் முகம் சாதாரணமாகவே இருந்தது.

அதோடு அவன், ''என்னை விடு. உன் பிரச்னையை முதலில் கவனிக்கலாம்!'' எனவும், சைதன்யா திடுக்கிட்டுப் போனாள்.

அவளது அடிமனத்துப் பிரச்னை பற்றி மானபரனுக்கு என்ன தெரியும்? தெரியக் கூடாதே! திகைப்பை மறைத்து அவசரமாகச் சமாளித்து, "என் பிரச்னையா? எனக்கு என்ன பிரச்னை? ஒன்றுமே இல்லையே!'' என்றாள் அலட்சியம் போலக் காட்டி.

"பந்தா எல்லாம் பிரமாதமாகத்தான் இருக்கிறது. ஆனால், உன் தலையில் கொஞ்சமேனும் மூளை இருந்திருந்தால், அந்தப் பக்கம் வரவே மாட்டாயே!'' என்றான் மானபரன் ஏளனமாக. உடனேயே மாறி, "உன் நன்மைக்காக எச்சரிக்கிறேன், சைதன்யா. இனி அங்கே வராதிருக்க முயற்சி செய்! இப்போது இறங்கிக் கொள்'' என்றவன், அவள் இறங்கிய மறு வினாடியே காரைக் கிளப்பிச் சென்றான்.

(தொடரும்)

**sms**

"ஹீரோ வில்லனை மட்டும் பழிவாங்கினா போதாதா... படம் பாக்குற நம்மளையும் ஏன் பழிவாங்கறாரு?"
"ஹீரோ குடும்பத்தை வில்லன் தீர்த்துக் கட்டினப்ப, நாம பார்த்துக்கிட்டு சும்மா தானே உக்காந்திருந்தோம்..அதான் !"
- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.

# கண்ட நாள் முதலாய்...

மனம் மயக்கும் மலர் தொடர்

**மா**னபரனின் கார் திருப்பத்தில் மறையும் வரை, அதையே பார்த்த வாறு சைதன்யா நின்று கொண்டிருந்தாள். என்னவோ குப்பை பையைத் தொட்டியில் போட்டுவிட்டுத் திரும்பிப் பாராமல் போகிறமாதிரி, இவள் இறங்கியதும் விழுந்தடித்துக் கொண்டு சென்று விட்டானே!



● ரமணிசந்திரன்

ஒரு காலத்தில் அவன் 'போய் வருகிறேன்' சொல்லவே எவ்வளவு நேரம் இழுத்தடிப்பான் என்பது நினைவு வர, மனதில் வலித்தது! ஆனால், இன்னொருத்தியுடைய கணவன், வேறு எப்படி நடக்க முடியும்? இதுதான் சரி என்று என்னதான் சொல்லிக்கொண்டாலும், மனதுக்குக் கஷ்டமாகவே இருந்தது!

'வராதே' என்று அவன் சொன்ன விஷயமும் அப்படித்தான். இப்போது என்ன செய்வது? கையைத் திருப்பி மணி பார்த்தாள். காரில் வந்ததால், வழக்கத்துக்கு முன்னதாகவே வந்து சேர்ந்திருந்தாள். முன்னதாகப் போய் வேலையைத் தொடங்கவோ, அவளுக்கும் முன்னே வந்தவர்களிடம் பேசிக் கொண்டிருக்கவோ சைதன்யாவுக்குப் பிடிக்கவில்லை. எனவே, அந்த பஸ் நிறுத்தத்தில் போடப்பட்டிருந்த சிமென்ட் பெஞ்சின் ஓர் ஓரமாக உட்கார்ந்து யோசித்தாள்.

அவனது பிரச்னை பற்றி அவள் கேட்டிருக்கக்கூடாது! அவனது 'வராதே'க்கு அடிப்படை அதுதான். அவன் வீட்டுக்கு அவள் போக வர இருந்தால், பிரச்னை அவனுக்கு மட்டும் அல்ல... அவளுக்கும்தான்! ஆனால், சில சமயங்களில் நீதா சட்டெனக் கட்டுப்பாடு இழப்பதைப் பார்க்கும்போது, அவனது பிரச்னை பெரிதாக இருக்கக் கூடும் என்றும் தோன்றியது. எப்போது வேண்டுமானாலும் சைதன்யா கையை உதறி விட்டுப் போய்விடலாம். தனியே உட்கார்ந்து அழுவதே ஆனாலும்! அவனால் உதற முடியாதல்லவா?

'திருமண பந்தத்தில் கட்டுப்பட்டிருப்பவன், பாவம்' என்ற எண்ணம் ஓடும்போதே சைதன்யாவுக்குச் சுரீரென்றது. அவள் நினைக்கிற விதமே சரியில்லையே! மனுவின் நிலைமையைப் பாவம் என்பானேன்? அவனது திருமணம் சந்தோஷமானதாகவும் இருக்கலாமே! அவனுடைய பெற்றோரின் மண நாளை நீதா கொண்டாடுவதே, அந்த சந்தோஷத்துக்கு நிரூபணம்! அப்படி இருக்காது என்று எண்ணி, அதில் சைதன்யா ஆறுதல் அடைந்தால், அதுதான் இன்றைக்குப் பெரும் பிரச்னை.

அதை ஊகித்துத்தான் 'வராதே' என்றானா? சேச்சே... இருக்காது! அவள் ஒன்றும் இப்படி முகத்திலேயே மனதை எழுதிக்கொண்டு திரிகிறவள் இல்லை! ஏதாவது பிரச்னை எழுந்துவிடக்கூடாதே என்று அவனது முன்னெச்சரிக்கை நடவடிக்கை!

மனு இலகுவாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டான் 'வராதே' என்று... ஆனால், இதை யாரிடம் எப்படிச் சொல்லிக் கழன்று கொள்ள முடியும்? அன்று தலைவலி என்றபோது, 'மாத்திரையைப் போட்டுக்கொண்டு போ' எனவில்லையா? சொந்த

**sms**



''என்னடி இது, லாண்டரிக்கு அஞ்சு துணிதானே போட்டோம்... ஆறு உருப்படிக்கு பில் போட்டிருக்கான்?''
''கேட்டா, அதுல மூளைச்சலவையும் அடங்கி இருக்குன்னு நக்கலா பதில் சொல்றான்!''
- பீ.என்.நரசிம்மமூர்த்தி, சென்னை-33.

விருப்பு,வெறுப்புகளைப் பாராட்டக் கூடாது என்று எழுதிக் கையெழுத்தே போட்டுவிட்டு, மறுப்பது சரியும் அல்ல!



**SMS**

**''தலைவர் இதுக்கு முன்னாடி சைக்கிள் கடை வச்சிருந்தார்னு எப்படிச் சொல்றே?''**

**''கட்சி கணக்கு வழக்குல நிறைய ஓட்டை இருக்குன்னு ஆடிட்டர் சொன்னதுக்கு, 'பங்சர் ஒட்டினா சரியாகிடுமா'ன்னு கேக்கறாரு!''**

**- எஸ்.ராமன், சென்னை-17.**

அதோடு, இதயத்தின் ஏதோ மூலையில் ஒளிந்துகொண்ட ஒரு சின்னக்குரல்... அவளாகத் தேடிப் போய் பார்க்கவில்லை. தானாக வந்த சந்திப்பு. இந்த வேலை செய்து முடித்ததும், அந்தச் சிறுத்தைப் புலி உடையைச் செய்தவர்களை விட்டுவிட்ட மாதிரி, நீதா அவளையும் விலக்கிவிடப் போகிறாள். அதுவரை... மனுவைக் கண்ணால் கண்டு... அவனது குரலைக் காதால் கேட்டு... அந்தக் கடவுளே கொடுத்த வரம் மாதிரியாகக் கிடைத்த இந்தச் சின்ன சுகத்தை அனுபவிக்கலாமே என்று சொல்லிக்கொண்டே வேறு இருந்தது!

அப்புறம்தான் இருக்கிறதே... வறண்ட பாலையாக நீண்ட நெடு வாழ்க்கை! இப்போது தானாகக் கிடைத்த சிறு பாலைவனச் சோலையை வேண்டாம் என்று ஏன் விலக்க வேண்டும்?

ஆனால், மனு விலகச் சொன்னானே! அவனுக்குத் தொல்லை என்றால், அவள் ஒதுங்கிக் கொள்வதுதானே நல்லது? ஆசையை அடக்கி யோசித்தால், அவளுக்கும் அதுதான் நல்லது! இத்தனை காலம் அப்படி விலகி இருந்ததால்தானே, ஓரளவேனும் நிம்மதியாக இருந்தாள். அதனால், முயற்சி செய்துதான் ஆகவேண்டும். அப்புறம் கடவுள்விட்ட வழி!

முடிவு என்று செய்துவிட்டதால் மனம் சற்று லேசாக, அலுவலகத்துக்குக் கிளம்பினாள் சைதன்யா. சில வினாடிகளுக்குள்ளாக அருகில் சேர்ந்து நடக்கத் தொடங்கிய ஒரு ஜோடி கால்களைக் கண்டதும் திகைத்து நிமிர்ந்து பார்த்தாள்.

“சாட்சாத் நானேதான். பஸ்ஸிலிருந்து இறங்கி வந்து பார்த்தால், அம்மையார் கல்லால் வடித்த சிலை மாதிரி அசைவே இல்லாமல் அமர்ந்து இருந்தீர்கள். இது ஏதோ, பஸ் நிறுத்தத்தில் புது மாதிரித் தவம் போலிருக்கிறது. எழுப்பப் போய், ‘கல்லாய் போ, கழுதையாகப் போ’ என்று சபித்துவிட்டால்? அதற்குப் பயந்து, அப்படியே ஓர் ஓரமாக உட்கார்ந்திருந்தேன்! சும்மா சொல்லக்கூடாது... அப்படியே கற்சிலை மாதிரி அசையாமல் இருந்தாயே! எந்த சாமிக்கு இந்த தவம் சைது?'' என்று விசாரித்தான் பூபாலன்!

என்ன பதில் சொல்வாள் அவள்?

அவசரமாக யோசித்து, “மனோகரியை வரச் சொன்னாயா, பூபால்? சேலையின் அலங்கார வேலைக்காக இன்று அவளிடம் கொடுக்க வேண்டும்'' என்று அவள் பேச்சை மாற்ற, சந்தோஷமாக மனோகரியின் புகழ் பாடத் தொடங்கினான் பூபாலன்!

மானபரன் சொன்னது அடிமனதிலேயே இருக்க, அன்று நால்வருமாகப் பேசுகையில் சைதன்யா அந்தப் பேச்சை எடுத்தாள்.

"அது பெரிய வாடிக்கை! நாம் எல்லோருமே நீதா மேடத்தைத் தெரிந்து வைத்திருப்பது நல்லதில்லையா? அடுத்து, நீங்கள் இருவரும் போய் வாருங்களேன்!'' என்று இலியாசைப் பார்த்துச் சொன்னாள் அவள்.

பூபாலன் பேசாமல் யோசனையாகப் பார்த்திருக்க, "நம் நால்வருக்குள் நடிப்பு தேவை இல்லை என்பதால், நான் சொல்வதைத் தப்பாக எடுத்துக்கொள்ள மாட்டாய்தானே சைது? நம் நிறுவன விதிகள், கொள்கைகள் எல்லாம் நாம் எல்லோரும் சேர்ந்து உருவாக்கியவைதான். யாருக்கும் மறந்திருக்காது. உனக்கும்தான். அவற்றைத் திரும்பவும் எடுத்துச் சொல்லி நேரத்தை வீணாக்குவதைவிட, உருப்படியாகச் செய்ய எத்தனையோ வேலைகள் இருக்கின்றன. அதை விட்டு, மூளையை எங்கோ அடகு வைத்துவிட்டு வந்த மாதிரி இது என்ன அசட்டுப்போச்சு? வேண்டாம்ப்பா, என்ன?'' என்று பரிமளா படபடக்கவும், சைதன்யாவின் தலை தானாகக் குனிந்தது.

"அடகு வைத்தால் திருப்பிக் கொள்ளலாம். தொலைத்துவிட்டால்தான் கஷ்டம்! பெரிய நஷ்டம்!'' என்று பூபாலன் கையை அகல விரிக்க, "ரொம்ப அவசியமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய விவரம்!'' என்று இலியாஸ் சற்று இளக்காரமாகக் கிண்டலடித்தான்.

இதன் பின்னணியில், "சாரிக்கா!'' என்றாள் சைதன்யா மெல்லிய குரலில்.

"ஏய், சாரி என்னப்பா? லாப நஷ்டம் எல்லோருக்கும் பொதுதானே? உன் மூலம் வந்த வாடிக்கை. விடாமல் பிடித்துப் பெரிதாகக் கொண்டு வா! இலியாசின் டிசைனைப் பார்த்துவிட்டு, இங்கே அடையாரில் ஒரு பெரிய ரெடிமேட் கடையிலிருந்து கூப்பிட்டிருக்கிறார்கள். ஆண்களுக்கான பகுதி. நம் பெயர் போட்டே, அவர்கள் கடையில் வைக்கப் பேச்சு நடக்க இருக்கிறது. அது பற்றிப் பேச அடுத்த வாரம் பூபால், இலியாசோடு போக நேரும். அப்போது நீ தனியாகக் கூடச் செல்ல வேண்டியிருக்கும், சைது! அதற்குள் வழியெல்லாம் நன்கு கவனப்படுத்திக்கொள். அப்புறம், இப்போது இருக்கும் ஆர்டர்களுக்குத் துணி வாங்குவதற்கு நாம் இருவருமாகப் போக வேண்டும்...''

கையில் வைத்திருந்த குறிப்புகளைப் பார்த்துப் பரிமளா சொல்ல, தொழில் பேச்சிலும் வேலையிலுமாக நேரம் சென்றது.

முயற்சி செய்யவில்லை என்று சைதன்யாவை யாராலும் குற்றம் சாட்ட முடியாது.

**sms**

**''அவர் ரொம்ப அப்பாவியா இருப்பார் போலிருக்கு...''**

**''எப்படிச் சொல்றே?''**

**''இங்க இருக்கற 'மே ஐ ஹெல்ப் யூ' போர்டைப் பார்த்துட்டு, 'மார்ச் மாசம் ஹெல்ப் பண்றவங்க எங்க இருப்பாங்க'ன்னு கேக்கறாரே!''**

**- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.**





sms

‘‘**பொ**ண்ணு பார்க்கப் போனது ரொம்ப கார சாரமான இடம்...’’

‘‘ஏன்... திட்டினாங்களா..?’’

‘‘இல்ல... மிளகா பஜ்ஜியும் இஞ்சி சட்னியும் வச்சாங்க!’’

- ஏ.நாகராஜன், சென்னை-75.

ஆசையை அடக்கவே முயன்றாள்! ஆனால், அவர்களது நிறுவனத்து விதிகள் அப்படி. நாலு பேர் சேர்ந்து செய்யும்போது, அவளுக்காக மட்டும் அதை மாற்ற முடியாது! அப்படிக் கேட்பதே தவறுதான்! அதுவும், ஒவ்வொருவிதமாக வளரும் இந்த நேரத்தில் கேட்டிருக்கவே கூடாது. ஆனாலும், மானபரன் சொன்னானே என்று கேட்டுப் பார்த்து, அதற்கு ஒரு குட்டும் வாங்கிக் கொண்டாயிற்று... இது போதும்!

கடவுள் விட்டுள்ள வழி... அவளுக்கு ஒரு சிறு பாலைவனச் சோலை! மூன்று ஆண்டு வறட்சிக்குப் பின் கண்ணில் பட்ட பசுமை! அது நிஜமோ, நிரந்தரமோ அல்ல என்று சைதன்யா அறிந்தே இருந்தாள். கிட்டத்தட்ட கானல்நீர் மாதிரிதான்! கனவில் கண்ட தனம்தான்! ஆனாலும், கனவென்றாலும் காணும்போது சந்தோஷம்தானே?

**இ**ரண்டு நாட்கள் அமைதியாகக் கழிந்தபின், சைதன்யாவை மீண்டும் வரச் சொன்னாள் நீதா. ரோஜா நிற உறையில், ஒரு பத்தாயிரத்துக்கான செக்குடன் வந்த சுருக்கமான குறிப்பு!

“ஒரு நேரமாக எல்லாவற்றையும் பேசி முடித்தால் என்ன? மீண்டும் மீண்டும் வரச்சொன்னால், ஆட்டோ செலவு எவ்வளவு? அது கூட சமாளித்துவிடலாம். போக வர நேர விரயம் எவ்வளவு? ஒன்றையும் யோசிக்கக் காணோமே!’’ என்று பரிமளாவே எரிச்சல்பட்டாள்.

ஆனால், வந்த குறிப்பு ரூபாய் பத்தாயிரத்தோடு அல்லவா வந்திருக்கிறது! வளர்ந்து வரும் நிலையில், அவர்களுக்கு மிகவும் அவசியமான பணம்! சில தையல் இயந்திரங்களை வாங்கிப் போட, சற்றுப் பெரிய இடம் எடுக்க, இன்னும் சிலபேரை வேலைக்கு அமர்த்த... எல்லாவற்றுக்கும் தேவைப்படும் பணம்!

“அதோடு வளர்ந்துவிட்ட பிறகும்கூட, வாடிக்கையை அலட்சியம் செய்தால் வளர்ச்சி குறைந்துவிடும். அதனால் வாடிக்கையாளர் என்றுமே தெய்வம்தான். அவர் சொல் வேதம்தான்’’ என்றான் இலியாஸ்!

அவன் சொன்னதை எல்லோரும் ஒப்புக்கொள்ள, ஒப்புக்கொண்டதைச் சோதனை செய்து பார்ப்பது போல, நீதாவிடம் இருந்து ஒரு போன் கால் வந்தது! அவளுக்குச் சில மருந்துகள் தேவையாம். அவளது பெரிய மாளிகை இருக்கும் புறநகர் பகுதிகளில் கிடைக்காதாம். சைதன்யா வரும்போது, வழியில் உள்ள ஒரு குறிப்பிட்ட பெரிய கடையில் இருந்து வாங்கிவரச் சொல்லி உதவி கேட்டாள் அவள்.

“கடைக்கு போனில் சொல்லி விட்டேன். எடுத்து வைத்திருப்பார்கள். பணம் கொடுக்கத் தேவையில்லை. வாங்கி வந்து விடுங்களேன்... ப்ளீஸ்!’’ என்றாள் அவள்.

திரையில் நீதா எண்ணைப்

பார்த்ததுமே ஸ்பீக்கரை வைத்து விட்டதால், எல்லோருமே கேட்டனர். அந்த 'ப்ளீஸ்' வெறும் வெற்று வார்த்தை என்பது உள்பட! ஒப்புக் கொள்ளுமாறு இலியாஸ் சைகை செய்ய, சைதன்யாவும் அப்படியே செய்தாள்.

“இவ்வளவு உயர்நிலையில் இருந்துகொண்டு, அந்தப் பெண் கஞ்சா கடத்த உன்னைப் பயன்படுத்துவாள் என்று சொல்ல முடியாது. ஆனாலும், மருந்துகளைக் கட்டி வைத்திருந்தால், பிரித்துப் பார்த்துவிட்டே எடுத்துப்போ சைது'' என்று எச்சரித்தான் இலியாஸ்.

**யா**ருக்குமே இந்த வேலை பிடிக்கவில்லைதான். ஆனால், ஒரு தோழமை உணர்வோடு கேட்டால் யாரும் செய்யக்கூடியதே என்பதால், மறுப்பதும் சரியாகப் படவில்லை. மருந்துக்கடையிலும் சைதன்யா, பூபாலின் முன்னிலையிலேயே எடுத்துப் பையில் வைத்துக் கொடுத்ததால், நிம்மதியோடு வாங்கிச் சென்று கொடுத்தனர்.

“குட்!'' என்று அவற்றை வாங்கிக் கொண்டதோடு, ''இது எனக்காகச் செய்தது. எனவே, இன்றைய போக்குவரத்துச் செலவை வாங்கிக் கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக் கொடுத்ததோடு, அன்றைக்கு நீதா வேறு சில வேலைகள் கொடுத்தாள்.

ஒன்று அவளுடைய மாமியாருக்காக வாங்கி வைத்திருந்த பட்டுச்சேலைக்கு அவள் செய்யச் சொன்ன அலங்கார வேலைகள். விலையை அவள் எப்போதுமே பொருட்படுத்தியது இல்லை. ஆனால், நடுத்தர வயதுப் பெண்மணிக்கு ஏற்ற வகையில் அவள் செய்யச் சொன்ன குந்தன் வேலைப்பாட்டு அமைப்பு சைதன்யாவுக்கு வியப்பூட்டியது!

அதையே எண்ணினாற்போல, 'நல்லவள்தான் பார்த்தாயா' என்பது போல பார்த்துவிட்டு, முன்னே வைக்கப்பட்ட பாதாம்பாலைச் சொட்டுவிடாமல் குடித்து முடித்தான் பூபாலன்.

முறுவலோடு நீதா சொன்ன டிசைன் வரைந்து காட்டி, அவளது ஒப்புதலைப் பெற்றாள் சைதன்யா.

இனி என்ன என்று கேட்டபோது, ''என் கணவருக்கும் சிலது தைக்க வேண்டும். அளவு எடுக்கிறீர்களா சைதன்யா?'' என்று கேட்டாள் நீதா. ''மாடியில் அவர் அறையில்தான் இருக்கிறார். அறைதான் உங்களுக்குத் தெரியுமே. போய் அளவு எடுத்துக் கொண்டு வந்துவிடுங்கள்!''

கொஞ்சம் மூளை இருந்தாலும் அந்த வீட்டுப் பக்கம் அவள் வரமாட்டாள் என்றவன், 'வராதே' என்றும் சொன்னவன், ஏன் சொன்னான் என்று இப்போது புரிந்தது!

அந்த மானபரனின் அறைக்குள்ளே போய் அவனுக்கு சைதன்யா அளவு எடுப்பதா? செய்வதறியாமல் திகைத்து விழித்தாள் அவள்.

(தொடரும்)

**sms**

''உங்களை சாப்பாட்டுல உப்பு, புளி, காரம், நெய் எல்லாத்தையும் குறைக்கச் சொன்னேனே... பலன் எதாவது தெரியுதா?''

''ஓ... மளிகைக் கடை பில் மாசம் இருநூறு ரூபா கம்மியாகி இருக்கு டாக்டர்!''

- என்.பர்வதவர்த்தினி, சென்னை-75.



# கண்டநாள் முதலாய்...

நீதாவிடம் ஏதோ பொருந்தாத்தன்மை இருப்பதாக அவ்வப்போது சைதன்யாவுக்குத் தோன்றுவது உண்டு. இப்போது அது, 'உள்ளங்கை நெல்லிக்கனி' என்பார்களே, அதுபோல தெளிவாகத் தெரிந்தது. இல்லாவிட்டால் அவளுடைய கணவன் அறைக்குப் போய், உடைக்காக அவனை அளவெடுத்து வருமாறு இன்னோர் இளம் பெண்ணை அனுப்புவாளா? அதுவும் தனியாக!

அவள் சற்றுத் திகைத்து நோக்கவும், நீதா விரட்டினாள். "போம்மா... போய்ச் சீக்கிரமாக அளவைக் குறித்துக்கொண்டு வா. மிஸ்டர் பூபால், என்னோடு சில உடைகள் பற்றிப் பேசிக் கொண்டிருக்கட்டும்..."

"உங்கள் உடைகளைப் பெரிதும் வரைந்து தைத்தது நான். நானே விளக்கம் சொல்வதுதான் இலகுவாக இருக்கும். பூபால் போய் அளவு எடுக்கட்டும்" என்றாள் சைதன்யா.

**ரமணிசந்திரன்**

> ''எனக்கு உடம்பு முடியலைன்னதும் முதல்ல மெடிக்கல் ஷாப்தான் போனேன் டாக்டர்...''
>
> ''அங்க ஏதாவது ஹாஸ்யத்தனமா ஐடியா கொடுத்திருப்பாங்களே..?''
>
> ''ஆமா! உங்களைப் போய் பார்க்கச் சொன்னாங்க!''
>
> - *சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.*




"ஏன்? அவர் அறைக்குள் செல்ல உனக்கு என்ன தயக்கம்? எனக்குப் புரியவில்லையே. பேயடித்த மாதிரிப் பின்னடிக்கிறாய். அன்றைக்கு அப்படி என்ன அங்கே நடந்தது?'' என்று கண்களில் கூர்மைப் பார்வையுடன் நீதா விசாரித்துக் கொண்டிருக்கும்போதே, மானபரனின் அறையிலிருந்து, அவனே வெளியே வந்தான்.

தோட்டத்துப் பக்கமாகச் செல்ல விரும்பினானோ, என்னவோ? ஆனால், ஹாலில் மூன்று பேர் இருப்பதையே கண்டுகொள்ளாமல் அவன் அந்தப் பக்கம் திரும்பியது, கொஞ்சம் ஒரு மாதிரிதான் இருந்தது.

ஆனால் நீதா அவனை விடவில்லை. ''பரன், இங்கே வாருங்கள்'' என்று உரக்க அழைத்தாள். "அத்தை–மாமா விழாவுக்காக உங்களுக்கும் ஒரு செட் தைக்க வேண்டும். என்ன மாதிரி தைக்கலாம் என்று பாருங்கள்'' என்று அவனது கையைப் பிடித்து இழுத்து வந்தாள்.

அவனது உணர்ச்சியற்ற பார்வையில் பூமிக்குள்ளே புதையலாம் போல இருந்தது சைதன்யாவுக்கு. 'வராதே' என்ற பின்னரும் வந்து நிற்கிறாயே. வெட்கம், மானம், ரோஷம் எதுவுமே இல்லையா என்று நினைக்கிறானா?

அவள் இறுகி நிற்கையில், கணவனைக் கைப்பிடியில் இழுத்து வந்தவாறே, ''கழுத்துப்பட்டியோடு நிறுத்தாமல், ஆங்கில 'வி' வடிவில் கழுத்திலும் மார்பிலும் கையிலும் 20 சென்டிமீட்டர் நீளத்துக்கு ஜரிகை வேலை செய்து குர்த்தா, விசிறி மடிப்பு வைத்த ஜரிகைக் கரை பட்டு வேஷ்டி ஒரு டிசைன் பார்த்தேன். அது போலச் செய்யச் சொல்லலாமா? நான் சேலை கட்டுவதால், பொருத்தமாகப் பட்டு வேஷ்டியும்" என்று கொஞ்சலாகக் கேட்டாள் அவள்.

ஐயோ, சாதாரண உடையில் கூடக் கம்பீரமாகத் தோன்றும் மனுவுக்கு அது வேஷம் போட்ட மாதிரி இராதா என்று சைதன்யா நினைத்தபோது, "வேண்டாம்" என்று மறுத்தான் அவன். "அது போல வேஷம் எல்லாம் எனக்கு வேண்டாம். புதிது ஒன்று இருப்பதால் எதுவும் வேண்டாம்'' என்றபடி, கையை விடுவித்துக்கொள்ள மெல்லவே முயன்றான்.

பிடித்த கையை இன்னமும் இறுகப் பற்றி, ''முதலில் அளவு எடுத்து வைத்துக் கொள்வோம். பிறகு வேண்டும் என்கிறபோது தைத்துக் கொள்ளலாம். அளவு எடு, சைதன்யா'' என்று ஏவினாள் நீதா.

மனுவுக்குப் புதிது தைப்பதை விடவும், அவனுக்கு அளவு எடுப்பதுதான் நீதாவுக்கு முக்கியம் போலும். அதுவும் இன்னொரு பெண் கையால்.

சேச்சே... இப்படியெல்லாம் வக்கிரமாக நினைக்கக்கூடாது என்று, தன்னையே அவள் திருத்துகையில், ''நான்தான் வேண்டாம் என்கிறேனே'' என்றான் அவன்.

''அதுதான் எதற்கு என்கிறேன். உங்கள் பெற்றோருக்கான விழா. அதில் புதிதுபோட மாட்டேன் என்றால், அவர்களை உனக்குப் பிடிக்காது என்று ஆகாதா? அல்லது என்னையா? அல்லது அளவெடுக்கப் போகிற இந்தப் பெண்ணையா? யாரைப் பிடிக்கவில்லை? சொல்லு...''

உயர்ந்துகொண்டே போன சுதி, இடையிலே ஏகவசனம். ஒரு மண வாழ்வில் இது சாதாரணமோ, என்னவோ? ஆனால், சைதன்யாவின் மனம் அமைதியிழந்து கலங்கியது.

மானபரனும் அதை உணர்ந்தானோ, ''என்னிடம் புதிது இருந்தால்... போகட்டும், ஒன்று தைக்கட்டும். பூவேலை எல்லாம் இல்லாமல், சாதாரணமாகவே இருக்கட்டும்'' என்று திரும்பினான்.

''ஆங், ஆங்... அளவு எடுக்கவில்லையே. சைதன்யா, அளவு எடு'' என்றாள் நீதா அவனை விடாமலே.

''தேவையில்லை...'' என்றவனின் பேச்சில் குறுக்கிட்டாள் மனைவி... ''ஏன்? ஒரு தையல்காரி தொட்டால் என்ன? உள்ளே விறுவிறு என்கிறதா? அல்லது அவள் மயங்கி விடுவாள் என்று பயமா? அதெல்லாம் மாட்டாள். டாக்டருக்கு நோயாளி மாதிரி, இந்தத் தையல்காரிக்கு நீங்கள் வெறும் மாடல் பொம்மைதான். துணிக்கடை பொம்மை. சும்மா அளவு எடு...''

அவள் பேசாதது போலப் பாவித்து, ''லூயி பிலிப்பியில் நாற்பத்திநாலு அளவு. இடுப்பளவு இரண்டு சென்டிமீட்டர் குறைவாக இருக்கட்டும் எனக்குச் சரியாக இருக்கும். துணியும் அது போலவேதான். ஷர்ட் மட்டும் போதும். க்ரீம் நிறபேண்ட்டுக்கு பொருத்தமாக ஏதாவது நிறத்தில் தையுங்கள்'' என்ற கணவன், சட்டென மனைவியின் பிடியை அழுத்தமாக விலக்கிவிட்டு, அங்கிருந்து வேகமாகச் சென்றுவிட்டான்.

**அ**வள் முன்னிலையிலேயே திடுமென நடந்த இந்த உரசல், சைதன்யாவை அதிர வைத்தது எனலாம். அதிலும், அவளை மையமாக்கி நடந்த பேச்சு. அதிலுமே, அவள் ஆட்சேபிக்க வழியில்லாமல்!

நீதாவின் தகராறு அவளுடைய கணவனுடன்தான். இதில் சைதன்யா என்ன சொல்லித் தலையிட முடியும்? ஆனால், பழைய காதலி முன்னிலையில் மனைவி இப்படிப் பேசியது, மனுவுக்கு எப்படி இருக்கும் என்று, அதை எண்ணியே தவித்து அவள் மனம்.

தவிப்பை வெளிக்காட்டிக் கொள்




''உன் மீது சுமத்தப்பட்ட குற்றம் நிரூபிக்கப்படாததால் உன்னை விடுதலை செய்கிறேன்...''
''என்னோட இந்த வெற்றியை எதிர்க்கட்சி வக்கீலுக்கும், என் கேஸை விசாரிச்ச போலீசுக்கும் சமர்ப்பிக்கிறேன் எசமான்!''
- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.

ளாமல் உணர்ச்சியற்ற முகபாவத்துடன் சைதன்யா நிற்க, ''அவருக்கு பயம்'' என்றாள் நீதா. ''பணத்துக்காக பெண்கள் அவர் மேலே, மேலே வந்து விழுகிறார்களா... அதான் பெண்கள் என்றாலே பயந்து நடுங்குகிறார்!''

உன்னைப் போல ஒரு மனைவி இப்படிப் பேசிக்கொண்டே இருந்தாலே, ஏதேதோ பயம் தானாக வரும் என்று சைதன்யா மனதுக்குள் நினைக்க, அப்போது தேவைப்பட்டதை பூபாலன் சொன்னான்.

"எங்கள் நிறுவனத்தைப் பொறுத்தவரையில், அந்த பயத்துக்கு இடமே கிடையாது மேடம். ஆணோ பெண்ணோ – அடுத்த இனம் எங்களுக்கு, நீங்களே சொன்ன மாதிரி வெறும் பொம்மைதான். எங்கள் கருத்தெல்லாம் நிறுவனத்தை முன்னேற்றுவதிலேயே இருக்கும்போது, வேறு எண்ணம் எப்படி வரும்?''

"பிறகு சைதன்யா ஏன் அளவெடுக்க வராமல் நின்றாள்?'' என்று பிடித்தாள் நீதா.

"உங்களுக்குத் தயக்கம் இருக்குமோ என்ற பயம்தான். சாருக்குத் தயக்கம் தான் என்று நீங்களே சொல்லவில்லையா?''

"விட்டுக் கொடுக்காமல் பேசுகிறீர்கள். உங்கள் சைதன்யாவை இனி நான் ஒன்றும் சொல்வதில்லைப்பா!'' என்று வேடிக்கை போலப் பேசி முடித்தாள் நீதா.

உங்கள் சைதன்யா.

"நாங்கள் நாலு பேருமே அப்படித்தான் மிசஸ் நீதா. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கவே மாட்டோம்'' என்று தெளிவுபடுத்திய பிறகுதான் சைதன்யாவுக்கு நிம்மதியாயிற்று.

**அ**டுத்து கிட்டத்தட்ட தைத்து முடித்திருந்த துணிகளை எடுத்துக்கொண்டு ஃபிட்டிங் பார்ப்பதற்குச் செல்ல வேண்டிய சமயத்தில், பூபாலன் இலியாசோடு அடையாறு போய்விட சைதன்யா தனியாகவே நீதா வீட்டுக்குச் சொல்ல நேர்ந்தது.

சைதன்யாவுக்கு அன்று வேறுவிதமான மகிழ்ச்சி. இப்படி உணரக்கூடாது என்று தன்னைத் தானே அவள் எவ்வளவோ கட்டுப்படுத்திக்கொள்ள முயன்றபோதும், அவளையும் மீறி, மனதில் ஒரு துள்ளல் ஏற்படத்தான் செய்தது. காரணம், மானபரன் அணியப்போகும் சட்டை. முழுக்க அவளது சொந்தத் தயாரிப்பு!

இலியாசுக்கு ரெடிமேட் கடையோடான வேலை நிறைய இருந்ததால், மானபரனின் ஷர்ட் வேலையை சைதன்யாவே செய்யும்படி நேர்ந்தது. அவன் கேட்டதுபோன்ற துணி உடனே கிடைத்து, வெட்டித் தைத்தும் ஆயிற்று. முத்துச் சிப்பியின் உள்பரப்பு போல, பட்டன்கள் கிடைத்து, கடைசி வேலையாக இரு கை ஓரங்

''தலைவர் நகம் கடிக்கறது அவ்வளவு பெரிய குற்றமா?''
''மகளிர் அணித் தலைவி நகத்தை இல்ல கடிக்கறார்..!''
- அம்பை தேவா, திருநெல்வேலி.



களிலும் சட்டைப் பையின் ஓரத்திலும் அவர்களுடைய மோனோகிராமை தன் கையாலேயே தைத்திருந்தாள்.

பார்த்துவிட்டு இலியாசே, “பிரமாதம்'' என்றான்.

அவ்வப்போது அந்தச் சட்டையைத் தொட்டுத் தடவி அழகு பார்ப்பதும், பார்க்கும்போது இன்னமும் மகிழ்வதுமாக இருந்தாள் அவள். சற்றே காவி கலந்த இளம்பாக்கு நிறத்தில், அந்தச் சட்டை அவனுக்கு எவ்வளவு நன்றாக இருக்கும்! கூடாதுதான்... இப்படியெல்லாம் நினைப்பதும் மகிழ்வதும் தவறுதான்.

ஆனால், மற்ற உரிமைகள் எதுவும் இல்லாதபோதும், அவளது தொழில் மூலமேனும் மானபரனுக்காக அந்த ஒரு வேலை செய்ய முடிந்தது அவளை குதூகலப்படுத்தியது. ஆட்டோவை விட்டு இறங்கும்போதும் அந்தச் சட்டையை ஒரு தரம் தொட்டு மகிழ்ந்துவிட்டே இறங்கினாள்.

ஆனால், அதுவரைதான் சந்தோஷம்.

**அ**ன்று சைதன்யாவை வெகுநேரம் காக்க வைத்த பின்னரே நீதா மாடியிலிருந்து இறங்கி வந்தாள். இறங்கி வந்த பிறகும், சோர்வுடன் சோபாவில் விழுந்து கிடந்தாளே தவிர, அணிந்து அளவு பார்க்கவென்று மற்றவள் கொண்டுவந்திருந்த துணிகளை தொட்டும் பார்க்கவில்லை.

சற்றுநேரம் பொறுத்துப் பார்த்துவிட்டு, “மிசஸ் நீதா'' என்று சைதன்யா அழைத்தாள்.

''இந்தத் துணிகளை ஃபிட்டிங் பார்த்துத் தந்து விட்டீர்கள் என்றால் நான் போய் கடைசித் தையல்களை முடித்துவிடுவேன். ஃபிட்டிங் பார்க்கலாமா?'' என்றாள் மெதுவாக.

“ம்ம்ம்ம்...'' என்று மெல்லக் கண்ணைத் திறந்து பார்த்தாள் நீதா.

அவளது பெரிய கண்களில் மிதமிஞ்சிய சோர்வைக் காணவும், “உங்களுக்கு உடம்புக்கு முடியவில்லை என்றால், இன்னொரு நாள் வைத்துக் கொள்ளலாம்'' என்றாள் இதமாக.

அந்த இதம் நீதாவுக்குத் தேவையில்லை போலும்.

''எனக்கென்ன உடம்பு? ஒன்றும் இல்லையே. எனக்கு உன்னைப் போலச் சதை வைக்காத உடல் வாகு. அதனால் சோர்வாகத் தெரிகிறது'' என்று மெல்ல இயம்பியவாறு சற்று நிமிர்ந்து அமர்ந்தாள்.

டீபாய் மீது அடுக்கி வைக்கப்பட்டிருந்த துணிகள் மீது, அவளது பார்வை படிந்தது. அணிந்து பார்க்க துணிகள். எல்லாவற்றுக்கும் மேலே இருந்தது மானபரனின் பாக்கு வண்ண ஷர்ட். சற்றுநேரம் அந்த ஷர்ட்டையே வெறித்துவிட்டு, சைதன்யாவிடம் திரும்




''வாஸ்து நிபுணரை மன்னர் ஏன் சிறையில அடைக்கச் சொன்னார்?''

''அவர் சொன்ன வாஸ்துப்படி சுரங்கப்பாதை அமைச்சதுல, பாதை எதிரி நாட்டு சிறைச் சாலையில போய் முடிஞ்சுதாம்..!''

- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.

பியவளின் முகம் மாறியிருந்தது.

லேசாகக் குனிந்து ரகசியம் போல அவளிடம் சொன்னாள். "இந்த ஆண்களுக்கு நேரம் காலமே கிடையாது சைதன்யா. திருப்தியும் இராது. பெண்கள் பாடு, உயிர் போய்விடும். இதெல்லாம் திருமணம் ஆனால்தான் உங்களுக்குப் புரியும். ஊ...ம், என்ன செய்வது?'' என்று பெருமூச்சு விட்டாள்.

புரியாமல் போகுமா? சைதன்யாவுக்கு உடம்பெல்லாம் தீப்பிடித்து எரிவது போன்ற உணர்வு. ஆனால், அதை வெளிக்காட்டாமல் சமாளிக்கவேண்டிய கட்டாயம்.

"வேண்டுமானால் நாளை பார்த்துக் கொள்ளலாம், மேடம்'' என்று, குரலில் கம்மலை மறைப்பதற்காக கிசுகிசுப்பாகவே பேசினாள்.

தனக்கு ஒன்றும் இல்லை என்று காட்டுவதே முக்கியமாக, "இல்லை யில்லை... பார்த்து விடலாம். என்ன பெரிய வேலை?'' என்று மெல்ல எழுந்தாள் நீதா.

தடுமாறுகிறாளோ என்று தோன்றியபோதும், அவள் அருகில் செல்ல சைதன்யாவுக்குத் தயக்கமாக இருந்தது. மற்றவளை நெருங்க அவளுக்கே பிடிக்கவில்லை என்பதை சகித்தாலும், நீதா உதவியை ஏற்பாளா என்ற சந்தேகம், இன்னமும் அவளைப் பின்னடிக்க வைத்தது.

நீதா எழுந்து மெல்ல இரண்டெட்டு எடுத்து வைக்கும்போது, அன்று போலவே மானபரன் மாடியிலிருந்து இறங்கி வருவது விழிக்கோணத்தில் தெரிந்தது. என்னவோ உறுத்தியபோதும், தலையைத் திருப்பி அவனை நேரே பார்ப்பது சரியல்ல என்று சைதன்யா அசையாமலே நின்றாள்.

ஆனால் அன்று போல தன் போக்கில் போய்விடாமல் அவன் நின்று, ''என் ஷர்ட் தயாராகிவிட்டதா?'' என்று கேட்டான்.

அவன் நின்று பேசுவான் என்று சற்றும் எதிர்பாராததால், சைதன்யா சற்றுத் தடுமாறிப் போனாள். ''இதோ, இதோ இருக்கிறதே'' என்ற பதிலிலும் தடுமாற்றம் தெரிந்தது.

ஆனால், அவள் எடுத்துக் கொடுத்ததை, இரு விரல்களால் ஏனோதானோவென தூக்கிப் பார்த்துவிட்டு, "என்ன நிறம் இது? நன்றாகவே இல்லையே. எனக்குப் பிடிக்கவே இல்லை'' என்றதோடு வைத்துவிட்டுப் போய்விட்டான் அவன்.

முகத்தில் அறை விழுந்தது போல அதிர்ந்து நின்றாள் சைதன்யா.

பிடிக்காதது ஷர்ட்டையா? அல்லது...

(தொடரும்)




''சின்னதா ஒரு கார் வாங்கணும்னு ஷேர் புரோக்கர்கிட்ட ஐடியா கேட்டது தப்பாப் போச்சு!''

''என்?''

''முதல்ல பெரிசா ஒரு கார் வாங்குங்க... பிறகு அதை வித்துட்டு அந்தப் பணத்துல சின்னதா கார் வாங்கலாம்னு சொல்றாரு!''

- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.

# கண்டநாள் முதலாய்...

மனம் மயக்கும் மலர் தொடர் 12

**ரமணிசந்திரன்**

அவன் சொன்ன க்ரீம் வண்ண பேன்ட்டுக்கு பொருத்தமாக, அவ்வளவு அழகான, ஆண்மைக் குரிய கம்பீரமான வண்ணம்; அரு மையான தையல்.

எப்படிப் பிடிக்காமல் போகும்... அவள் தைத்ததாலேயா? ‘பிடிக்கா தது அவளையே’ என்று சொல்லா மல் சொன்னானா? அவள் தைத் ததால்தான், அந்த அருமையான ஷர்ட்டே மனுவுக்குப் பிடிக்காமல் போய்விட்டதோ?

தன்னை மீறி சைதன்யாவின் கண்கள் கரித்தன. அந்த நீதா பார்த் துக் கொண்டே இருக்கிறாளே... அவள் முன் கண்ணீர் வேறு வந்து விடுமா?

அவசரமாக மாடிப்படியின் வடிவமைப்பு, மர வேலைப்பாடு, இலை-பூ வேலைப்பாடு எத்தனை என்று எண்ணத் தொடங்கினாள் சைதன்யா. கண்ணீரை, மன வேத னையைக் கட்டுப்படுத்த அவள் கடைப்பிடித்து வந்த வழி. மனதை வேறு ஒன்றில் தீவிரமாகச் செலுத் தினால், இந்த வலி மறக்குமல் லவா?

‘‘அவருக்கு உன் மேல் கோபம்’’ என்றாள் நீதா.

புதிதாக அப்படி என்ன கோபம்? சைதன்யா கேள்வியாக நோக்க, கண்கள் மின்ன நீதா விளக்கம் கொடுத்தாள்.

‘‘நீ வந்தது தெரிந்ததும் கீழே வந் துவிட்டேன் இல்லையா? போகாதே என்று சொல்லியும் நான் கேட்க வில்லை என்று, அந்தக் கோபத்தை ஷர்ட்டை சாக்கிட்டு உன் மீது காட்டுகிறார்’’ என்று அவள் சொல்லிக் கொண்டிருக்கை யிலேயே, சைதன் யாவுக்குள் மின்னல் வெட்டியது.

இவள் பொய் சொல்லுகி றாள். முதலில்

பேசியதும் பொய். மனு படியிறங்கி வந்தபோது உறுத்தியது என்னவென்றும் இப்போது புரிந்தது... நீதா இடப்பக்க அறையிலிருந்தும், மனு வலப்பக்க அறையிலிருந்தும் வந்தார்கள். இவள் கூறியது உண்மையாக இருந்தால், இருவரும் ஒரே அறையிலிருந்துதான் வந்திருக்க வேண்டும். அப்படி இல்லையே!

முதலில்கூட அவனது அறையில் ஒரு பெண்ணின் அடையாளமே இல்லை என்று எண்ணினாளே. அப்படியானால்..? மேலே யோசிப்பதற்கு பயமாக இருந்தது.

‘மனுவும் அவனுடைய மனைவியும் மனமொத்து நன்றாக இருக்கட்டும்’ என்று எங்கோ இருந்து நினைப்பது இலகுவாக இருந்தது. ஆனால், உயிரும் உணர்வுமாக அவனை இன்னொருத்தியுடைய கணவனாகப் பார்க்கும்போது, தாங்க மாட்டாத உயிர் வேதனையை சைதன்யா உணர்ந்தாள். அதனாலேயே, நீதா குறிப்பாகக் கூறியதிலேயே, அவள் துடித்துப் போயிருந்தாள்.

அவள் சொன்னது பொய் என்று உணர்ந்த மாத்திரத்திலேயே, மனம் சுமையிறங்கி லேசான விதமும் அவளுக்குத் தப்

பாகவே தெரிந்தது.
தப்பு–சரி பற்றி மூளை கூ
இதயம் சொல்வதும் ஒ
தான் இருக்கவேண்டு
தில்லையே.

நீதா சாதாரணமாக
சொல்லக் கூடியவள் என்
போது தெரிந்திருக்கிறது
பேச்சை முழுமையாக ந
கூடாது.

“என்னபேச்சையேகா
சைதன்யா? கோபத்தி
ஷர்ட்டை மறுத்துவிடு
என்றகவலையா? நஷ்ட
பார்க்கிறாய் போல. அ
மாட்டார். எப்போதாவ
வது பண்ணுவார். அ
ஷர்ட் இங்கேயே இருக்
கணக்கில் சேர்த்துக்கொ
போது அந்த பிளவுசையு
ரில் ஒன்றையும் கொடு.
பார்க்கிறேன்...” என்று
கொண்டு அருகில் இருந்
குள் சென்றாள் நீதா.

நல்லவேளை... சி
போல எல்லாவற்றையு
வீசிவிட்டு, ‘நீயே அ
விடு’ என்று நீத
வில்லை. ஒரு
தன் மெலிந்த
யாருக்கும்
விருப்ப
போனாலே
னவோ?
ஏனிந்த மெ
சற்று அதி
பொறுத்து செ
வந்த நீதாவி



SMS

“டாக்டர்... நாலாவது வார்டுல அட்மிட் ஆன பேஷன்ட் சீரியஸா இருக்காரு!”

“சரி, நீங்கதான் ரெண்டு ஜோக் சொல்லி சிரிக்க வையுங்களேன் சிஸ்டர்!”

- சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.

தில் திருப்தியும் எரிச்சலும் கலந்து தெரிந்தது.

"எல்லாமே நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், எதற்கும் விழா அன்று நீங்கள் இங்கே வந்துவிடுங்கள் சைதன்யா. ஊசி, நூல் எல்லாவற்றுடனும். ஒருவேளை கொஞ்சம் பிடித்துத் தைக்க வேண்டியிருக்கலாம்...''




விழாவில் அழகாகத் தெரிய வேண்டும் என்று டயட்டில் இருக்கிறாளோ என்றுதோன்ற, தன்னை மீறி, "இன்னும் எதற்கு?'' என்று கேட்டுவிட்டாள் சைதன்யா.

நீதாவின் கண்களில் சீற்றம் தெரியத் தொடங்கும்போதே அவசரமாக, "இப்போது மாடல் மாதிரி மிக அழகான அளவில் இருக்கிறீர்களே, இன்னும் மெலிந்துவிடக் கூடாதே என்ற அக்கறையில் சொன்னேன். தப்பானால்...'' என்று இழுத்தாள்.

சீற்றம் மறைந்தபோதும், "தப்புதான்'' என்றாள் நீதா எரிச்சலுடனேயே. "பணம் கொடுக்கிறவள் சொல்வதைச் செய்வதுதான் உன் வேலை. அபிப்ராயம் சொல்வது அல்ல. என் உடம்பு பற்றி, என்னை விடவா உனக்குத் தெரியும்? நீ என்ன டாக்டரா?''

நீதாவின் சுதி ஏறிக்கொண்டே போகவும், பேச்சை முடிவுக்குக் கொண்டு வரும் நோக்கத்தோடு, "நான் விழாவுக்கு வருகிறேன் மிசஸ் நீதா. மதியத்துக்கு மேல், உங்களுக்கு விழா வேலைகள் சரியாக இருக்குமல்லவா? அதனால் காலையிலேயே வந்து உங்களுக்கு வேண்டியதைச் செய்துவிட்டுப் போகிறேன்'' என்று தணிந்து போனாள் சைதன்யா.

விலுக்கென்று நிமிர்ந்து, சைதன்யாவை வெறித்தாள் நீதா.

"போவதா? அருமையாகத் தைத்திருக்கிறாய். பார்ட்டியில் நான் அதை அணிந்து சுற்றுவதைப் பார்க்க வேண்டாமா? அப்புறம், அந்த ஷர்ட் அணியப்பட்டிருப்பதை. அதனால் நீயும் விழாவுக்கு வா'' என்று அழைத்தாள்.

அவள் தைத்த ஷர்ட்டை மானபரன் அணிந்திருப்பதைப் பார்க்க அவளுக்கு ஆசைதான், மனுவே பிடிக்கவில்லை என்ற பிறகும். ஆனால், விழாவுக்கு வருவது, வம்பை விலைக்கு வாங்குவது போலத்தான்...

"இல்லை. இரவில் திரும்பிச் செல்வது பிரச்னையாகிவிடும்...'' என்றவளை இடையிட்டு, "திரும்பிச் செல்ல நான் கார் ஏற்பாடு செய்கிறேன். தனியே வரப் பிடிக்கவில்லை என்றால், உன் இணை பிரியாத... பூபாலனையும் கூடச் சேர்த்தே அழைக்கிறேன். போதுமா? எப்படியும் கட்டாயம் வருகிறாய்'' என்றாள் நீதா பிடி

வாதமாக.

“பூபாலுக்கு வேறு வேலை இருப்பதால், அவன் வருவது சந்தேகம்...”

“திருப்பி அனுப்புவதுதான் என் பொறுப்பு என்கிறேனே... அல்லது, என் காரோட்டியோடு தனியாகப் போகப் பயமா? இருப்பதில் குடுகுடு கிழவனாக, நல்லவனாக இருப்பவனைப் பார்த்து அனுப்புகிறேன். போதுமா!''

அப்போதும் சைதன்யா தயங்கவும், “அல்லது, இதோடு தைத்தது போதும் என்று கணக்கு முடித்து விடுவேன்'' என்றாள் நீதா முகமும் குரலும் குரோதமாக மாற.

சைதன்யா திகைத்து நோக்கவும், “அந்த அளவுக்கு விட மாட்டாய் என்று நினைக்கிறேன். என்ன சொல்கிறாய்?'' என்று புருவம் உயர்த்திக் கேட்டாள் மற்றவள்.

இப்போதும் சைதன்யாவுக்குத் திகைப்புதான். தன் எண்ணம் ஈடேற, நீதா எந்த அளவுக்கும் போவாள் போலும். மற்றபடி, ‘திரும்பிப்பா’ரின் உடைகள் மிகவும் பிடித்திருந்த போதும், கணக்கு முடிப்பேன் என்று மிரட்டுவாளா என்ன? பரவாயில்லை. செய்து முடிக்கிற ரகம். ஆனால், இதைக் கணவரோடு நல்லபடி வாழ்வதில் காட்டலாமே!

அதை விட்டு, அடுத்தவர் முன்னிலையில், ஏக வசனத்தில் என்ன கத்தல்? அதுவும் மானபரனைப் போலத் தன்மானம் அதிகம் உள்ள ஒருவனை! சைதன்யாவின் அந்த ஒரு பேச்சு பொறுக்காமல் பிரிந்து போனவன், அவளாக அவன் வீட்டுக்கு இங்கே வரும் வரை, அவளைத் திரும்பிக்கூடப் பார்த்ததில்லை. அப்படிப்பட்டவனைப் போய் என்ன மாதிரி நடத்துகிறாள்?

ஆனாலும், அவளிடம் தன்மானம் பார்த்து விலகிப் போனவன், இப்போது ஏன் இந்தக் கூட்டை விட்டு வெளியேறவில்லை? பேசுகிறவள் மனைவி என்பதாலா?

ஆனால், அவன் அறை... நீதாவின் பொய்... அப்படியானால்... மறுபடி மறுபடி அவனிடமே சென்று மூளை குழம்பியது சைதன்யாவுக்கு.

“என்ன, பதிலே சொல்லாமல் கண்ணைக் கொட்ட விழித்துக் கொண்டு அப்படியே நிற்கிறாய்? அப்படி ஒன்றும் உன் நிறுவனத்தை விட்டுவிட மாட்டேன் என்று நினைத்தாயா? கனவு காணாதே. என்னை உனக்குத் தெரியாது. விலக்குவதோடு நசுக்கியும் விடுவேன்'' என்று தலையைச் சிலுப்பித் திரும்பியவள் தடுமாறி விழப் போனாள்.

அவளை அவசரமாகப் பிடித்து, சோபாவில் உட்

**SMS**

“எதுக்கு ரெண்டு வேலைக்காரி வச்சிருக்கே..?''

“ஒருத்தி வீட்டு வேலை செய்ய; இன்னொருத்தி அக்கம்பக்கத்து நியூஸ் சொல்றதுக்கு!''

- எஸ்.கோபாலன், சென்னை-61.

கார வைத்தாள் சைதன்யா. மெலிவுதான். ஆனால் இவ்வளவு தடுமாற்றம் ஏன்? உடம்பு சரியில்லையா? கதகதப்பாக இருந்தாலும் சூடு தெரியவில்லையே என்று எண்ணிய படி, ''உங்களுக்கு உடம்புக்கு ஏதேனும்...'' என்று பரிவுடன் சைதன்யா கேட்டாள். ஆத்திரத்துடன் குறுக்கிட்டாள் நீதா.




''நீ டாக்டரில்லை என்று இப்போதுதானே சொன்னேன்... திரும்பவும் உடம்பு பற்றிப் பேசுகிறாய்? ஆரோக்கியமாக இருக்கிற திமிரா? ஒரு விபத்தில் மாட்டினால், அப்புறம் இந்தத் திமிரெல்லாம் அடியோடு காணாமல் போகும்... இன்னும்...''

''மேடம், விழா என்றைக்கு என்று சொன்னால், என் தையல் வேலைகளை ஒதுக்கி வரத் திட்டமிட வசதியாக இருக்கும்'' என்றாள் சைதன்யா அவசரமாக.

பேச்சு நின்றுவிட, ஏதோ புரியாத மொழி போல அவளை வெறித்துப் பார்த்தாள் நீதா. சற்று நேரம் நிலவிய அமைதியின் பின், ''அப்படியானால் வருகிறாய் என்று சொல்லு. நல்லது. எங்கே ஒரு நல்ல நிறுவனத்தை விட வேண்டியிருக்குமோ என்று எரிச்சல்பட்டுக் கொண்டிருந்தேன்'' என்றாள் நீதா.

இவள் சும்மா மிரட்டவில்லை. ஆனால், இந்த ஆயுதத்தை இவள் அடிக்கடி பயன்படுத்தக்கூடாதே!

''இது இந்தத் 'திரும்பிப் பார்' நிறுவனத் தொடர்பால் கிடைத்த அழைப்பு. அதனால் மற்ற பங்குதாரர்களிடமும் வருவது பற்றிக் கலந்து ஆலோசிக்க வேண்டும். ஆனால், என் முயற்சியில் குறை இராது'' என்றாள் சைதன்யா.

''நல்லது. ஆனால் உங்கள் எல்லோரையுமே என் வழிக்குத் திருப்பும் ஆயுதம் என்னிடம் இருக்கிறது!'' என்று கூறி டீபாயின் மீது கிடந்த கைப்பையை எடுத்தாள் நீதா. அதிலிருந்து செக்புக்கை எடுத்து, இன்னோர் இருபது ஆயிரத்துக்கு செக் எழுதி, சைதன்யாவிடம் கொடுத்தாள்.

படித்துப்பார்த்துவிட்டு,என்ன கர்வம் என்று எண்ணியபோதும், ''ஆனால் இந்த அளவுக்கு நாங்கள் இன்னும் தைத்துத் தரவில்லையே. வேலை முடிய முடிய வாங்கிக் கொள்கிறேன்'' என்று செக்கை நீதாவிடமே கொடுத்தாள் சைதன்யா. ''முடிந்த அளவு நான் வருவேன், மிசஸ் நீதா. வாக்கைக் காப்பாற்ற, எனக்கு வேறு தூண்டுகோல் தேவையில்லை... அப்புறம், இப்போது முடித்துக் கொண்டு வந்த அனைத்திலும் கடைசித் தையல் போட்டுவிடுகிறேன். அடுத்து ஒரு பார்ட்டி உடை வேண்டும் என்றீர்களே... அனார்

கலி மாடலில் தைப்போமா? உங்களுக்குத் தொப்பையே இல்லாததால், நன்றாகவே இருக்கும். அல்லது நீளப்பாவாடையும் டிசைன் டாப்பும்... எல்லாவற்றிலும் அலங்கார வேலைப்பாடும்... எப்படிச் செய்யலாம்?'' என்று கேட்டாள்.

''ம்ம்ம்...'' என்று மீண்டும் அவளைப் பார்வையால் ஆராய்ந்தாள் மற்றவள்.

''இரண்டையுமே தைக்கலாம். ஆனால், விழாவுக்கு வரவில்லை என்றால் தைப்பதை நீயேதான் அணிந்துகொள்ள வேண்டியிருக்கும். இது கடைசி எச்சரிக்கை'' என்றாள் முடிவாக.

அதோடு போய்விடலாம். ஆனால் எரிச்சலை கணவன் மீது காட்டுவாளோ என்று தோன்றவே, சிரித்த முகமாக, ''நீங்கள்தான் அணிவீர்கள் என்று எனக்கு நிச்சயம், மேடம். அப்புறம், பொருத்தமான கைப்பையோடு, செருப்பில் ஒட்ட டிசைனும் இரண்டு நாட்களில் தயாராகிவிடும். அடுத்த முறை அவற்றையும் சேர்த்துக் கொண்டு வருகிறேன். அத்தனையோடு உங்கள் அழகும் சேர, எல்லோரையும் அசர வைக்கப் போகிறீர்கள்!'' என்று நீதாவுக்கு உச்சி குளிர வைத்துவிட்டுத்தான் சைதன்யா கிளம்பினாள்.




**இ**தில் சமாதானமாகி கணவனுடன் நல்லபடியாகப் பேசிப் பழகுவாளா? பழக வேண்டும்.

அடிக்கடி இதே நினைவு வர, முயன்று ஒதுக்கி, சிரமப்பட்டுத் தூக்கத்தை வரவழைத்து, காலையில் சற்றுத் தாமதமாக எழுந்து, அவசரமாக வேலைக்குக் கிளம்பிப் போனால், செல்லும்போதே செல் பாடியது.

மானபரன் தான்.

''என்ன?'' என்றாள் தயக்கத்துடன்.

"நீ சொன்னது போல உன் வீட்டுப் பக்கம் வந்து, உனக்கு இருக்கும் பெயரைக் கெடுக்க எனக்கு விருப்பம் இல்லை. உன் பஸ் பின்னால்தான் வருகிறேன். உன் 'திரும்பிப்பா'ரின் பின்புறம் இருக்கும் பூங்காவுக்கு வா. உன்னுடன் பேச வேண்டும்'' என்றவன், அவள் பதில் சொல்லும் முன்பாகவே செல்லை அணைத்து விட்டான்.

அழைத்தால் வந்துவிடுவாள் என்று அவ்வளவு நிச்சயமா என்று ஆத்திரப்பட்டபோதும், என்ன இது... என்று கலங்கித் தயங்கியபோதும், சைதன்யாவால் போகாதிருக்க முடியவில்லை.

(தொடரும்)

**ரமணிசந்திரன்**



# கண்ட நாள் முதலாய்...

## மனம் மயக்கும் மலர் தொடர்

பூங்காவுக்குள் சைதன்யா செல்லும்போது, மானபரன் ஏற்கனவே அங்கே காத்திருந்தான். வருவாள் என்று அவ்வளவு நிச்சயமா என்று மறுபடியும் ஆத்திரம் வந்தது அவளுக்கு; அவன் நினைத்தவாறே வந்துவிட்டோமே என்று தன்னிடமும்தான்.

பூங்காவுக்குள் புகுந்ததுமே கூட வந்து சேர்ந்து கொண்டவன், ''சற்று உட்புறமாகச் சென்றுவிடலாம். சாலையில் செல்லும் உன் நிறுவனத்து மனிதர்கள் கண்ணில் படுவது, உனக்கு நல்லதல்ல'' என்று அழைத்துச் சென்றான்.

அவளுக்கு நல்லதில்லையாமா? யாரும் பார்த்தால், அவனுக்கு மட்டும் நல்லதாமா? கோபத்தை மறைக்காமல், ''பாருங்கள் மனு, எனக்கு நல்லது என்ன என்று எனக்குத் தெரியும். இப்படிப் பூங்காவில் சந்திப்பது, பிறர் அறியாமல் பேசுவது எல்லாம் நல்லதில் சேர்த்தியில்லை என்றும் தெரியும்.

அதனால், சொல்ல வேண்டிய தைச் சீக்கிரம் சொல்லி முடியுங்கள். நான் போக வேண்டும்'' என்றாள் வேகமாக.

ஒரு தரம் அவளை ஆழப் பார்த்துவிட்டு, "நல்லது தெரிந்த அழகுதான், என் வீட்டுக்கு இப்படி ஓடிஓடி வந்து கொண்டிருக்கிறாயா? அதோடு, இது என்ன பைத்தியக்காரத்தனம், சைது? விழாவுக்கும் வருவதாகச் சொல்லியிருக்கிறாய்? நல்லது தெரிந்தவள் செய்கிற வேலையா இது? அதுவும் நான் வராதே என்று சொன்ன பிறகும்... வடிகட்டின முட்டாள்தனம்'' என்றான் மானபரன்.






அவன் கூறியது சரிதான். மறுக்க முடியாதது என்பதோடு, அவளுமே அறிந்ததும்தான்.

''எனக்கும் தெரியும், மனு. ஆனால், நாலு பேர் சேர்ந்து தொழில் நடத்தும்போது, நான் தனியாக முடிவெடுக்க முடியாது'' என்றாள் சைதன்யா உணர்ச்சியற்ற குரலில்.

"மெஜாரிட்டி கிணற்றில் விழு என்றால், விழுந்து விடுவாயா?''

''அவர்கள் யாரும் அப்படிச் சொல்லக் கூடியவர்கள் அல்ல!''

''பின்னே... நான் சொல்லக் கூடியவன் என்கிறாயா?'' என்று வேகமாகத்திருப்பியவன், உடனே தணிந்து, "சாரி'' என்றான்.

உடனேயே, ''மற்ற மூவரில் யாருமேயா புரிந்துகொள்ள மாட்டார்கள்?'' என்று கேட்டான்.

"சொந்த விருப்பு வெறுப்புகளைத் தொழிலுக்குள் கொண்டு வரக் கூடாது என்று விதிமுறையே எழுதி வைத்திருக்கிறோம். அதோடு, என்... என் சொந்த விஷயம் பற்றி அங்கே யாருக்கும் தெரியாது. சொன்னதில்லை'' என்றாள் சைதன்யா.

"சொல்லிப் பெருமைப்பட என்ன இருக்கிறது?''

காயப்பட்டவனின் தாக்குதல். பொறுத்துத்தான் ஆக வேண்டும்?

''நீங்கள் சொல்ல வந்தது இதுதான் என்றால், நான் கிளம்புகிறேன்...''

''அதாவது, என் சொல்லுக்கு மதிப்பில்லை என்று சொல்லாமல் சொல்கிறாய். அப்படித்தானே, சைது... இதெல்லாம் அப்படியேதான் இருக்கின்றன. ஆனால், அதன் அடிப்படையான நேசம் பொய்யாகிப் போயிற்றே. அல்லது... அப்படி ஒன்று இருந்ததே இல்லை என்கிறாயா? ஊகூம். என்னால் நம்ப முடியாது, சைது. இருந்தது. நிச்சயமாக இருந்தது. ஆனால், என்னை விட, உனக்குப் பணம் பெரிதாகிப் போயிற்று. அப்படித்தானே?''



''பணம் இல்லாமல் யாரால் வாழ முடியும்?'' என்றாள் அவள் பொதுப்படையாக. ''வேறு ஒன்றும் இல்லை என்றால், நான் கிளம்புகிறேன்'' என்று திரும்பினாள்.

''ஒரு நிமிஷம்'' என்று அவளை நிறுத்தினான் அவன். ''ஒரு விவரம் சொல்லிவிட்டுப் போ. எதை யெதையோ எண்ணிப் போட்டு வாழும் வாழ்க்கை பிடிக்கவில்லை என்று என்னைப் பிரிந்து போகச் சொன்னாய். ஆனால் இப்போதும் அதேநிலையிலேயே இருக்கிறாயே, ஏன்? அப்படி எவனும் கிடைக்கவில்லை என்று சொல்ல வேண்டாம். உன் அழகுக்கு, முயன்றால் முடியாதது இல்லை'' என்று விசாரித்தான்.

''இன்னொருவர் தயவில் பணக்காரி ஆவதைவிட, என் முயற்சியில் உயருவது மேல் என்று நினைத்தேன். யாரையும் அனுசரித்துப் போக வேண்டிய அவசியம் இருக்காதில்லையா?'' என்று சாதாரணம் போலக்காரணம் சொல்லி அவள் சமாளித்தது, அவன் உரக்கச் சிரிக்கவும் நின்றது.

''என்ன?'' என்றாள் கேள்வியாகப் புருவம் சுழித்து.

''ஒரு மனிதனை அனுசரித்து வாழப் பிடிக்காதவள், இப்போது பங்குதாரர்கள் மூன்று பேரை அல்லவா அனுசரித்து வாழ்ந்து கொண்டிருக்கிறாய். இது எந்தவிதத்தில் உயர்வு என்று புரியவில்லையே'' என்று ஓர் ஏளனத் தோள் குலுக்கலுடன் கேட்டான் மானபரன்.

''அ... அது தொழிலில். தொழிலில் மற்றவரை அனுசரிக்காமல், யாரால் என்ன சாதிக்க முடியும்? வீட்டில், சொந்த வாழ்வில், நமக்கு நாமே ராணியாக இருக்கலாம் அல்லவா? அதைத்தான் சொன்னேன்'' என்று மறுபடியும் சமாளித்துப் பேசினாள் சைதன்யா.

''சொந்த வாழ்வில் ராணியா? நீயா? ஓர் இடத்துக்குப் போக முடியாது என்று உன்னால் சொல்ல முடியவில்லை. இங்கும் அங்குமாக, ஆட்டோவிலும் பஸ்சிலுமாக, லொங்கு லொங்கென்று அலைய வேண்டியிருக்கிறது. இதுதான், யாரையும் அனுசரிக்கத் தேவையிராத சுதந்திர வாழ்வா? இதற்காகவா... விசித்திரம்தான். எப்படியோ? உன் வாழ்வு. உன் முடிவு. விருப்பம் போல இரு. ஆனால், சும்மா வருவது ஒன்றுமில்லை என்பது நினைவிருக்கட்டும். தொழிலில் வெற்றி கூட அப்படித்தான்'' என்றுரைத்த



மானபரன் சில வினாடி தாமதித்தும் சைதன்யா பேசாமலே இருக்கவும், "என்ன சொன்னாலும் ஏற்கப் போவதில்லை. அதுதானே? இதற்கு மேல் நான் என்ன சொல்லட்டும்? எப்போதும் கவனத்தோடேனும் இரு'' என்று எச்சரித்துவிட்டு, அதற்கு மேல் நில்லாமல், பூங்காவின் மறுவாயிலை நோக்கி விரைந்து சென்றுவிட்டான்.

இவனது எச்சரிக்கை எதைப் பற்றி? அல்லது யாரைப் பற்றி? யாரிடம் கவனமாக இருக்க வேண்டும்? அவனுடைய மனைவியிடமா? அவளைப் பற்றி வெளிப்படையாகச் சொல்ல முடியாமல், இப்படிப் பூடகமாக எச்சரிக்கிறானா?

யோசனையோடே நடந்து, மெல்ல அலுவல் இடத்தை அடைந்தபோது, வாசலிலேயே நின்று வரவேற்றான் பூபால். "என்னம்மா, மகாராணி. அப்போதே பஸ்ஸிலிருந்து இறங்கினாய். ஆடி அசைந்து, இப்போதுதான் வந்து சேர்கிறாய்? அசந்த நேரம் பார்த்து, வாயைப் பொத்தி, எவனும் கடத்திக்கொண்டு போய் விட்டானோ என்று கலங்கிப் போய், இங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருக்கிறேன். வேறு எங்கேயும் போய்விட்டு வருகிறாயா, சைது?'' என்று கேட்டான் அவன்.

''நம் இடத்துக்குப் பின்புறம் ஒரு பார்க் இருக்கிறதில்லையா? அதில் கொஞ்ச நேரம்... உட்கார்ந்திருந்துவிட்டு...'' – தன்னையறியாமல் உண்மை சொல்லத் தொடங்கிவிட்டு சமயத்தில் சமாளித்தாள் சைதன்யா.

"என்னது? இந்த நேரம் போய்ப் பூங்காவில் உட்கார்ந்திருந்தாயா? வேலைதொடங்குகிற நேரம், சைதன்யா. எல்லோருக்கும் முந்தி வந்து பணியைத் தொடங்குகிறவள். ஊஹூம். உனக்கு என்னவோ ஆகிவிட்டது...''




அக்கறையில் சொல்வதுதான். ஆனால், இவன் சும்மா இருந்தால் தேவலையே என்று இருந்தது அவளுக்கு.

அதற்கேற்றாற்போல, ''பூபால், அங்கே என்னப்பா சத்தம்?'' என்று இலியாசின் குரல் கேட்டது.

அவசரமாகப் பூபாலிடம் வாயைப்பொத்திக் காட்டிவிட்டு, "ஒன்றுமில்லை. வாசலில் நின்று என்னை வரவேற்கிறானாம்'' என்றாள் சைதன்யா உரக்க.

"ஓஹோ! கொஞ்சம் தாமதமாகிவிட்டது என்பதற்காகக் கிண்டலா? சரி, சரி, உள்ளே வாருங்கள். இந்த அடையாறு ஷாப்பில்...''

என்று தொழில் தொடர்பாகப் பரிமளா பேசத் தொடங்க, சிறு கெஞ்சல் கலந்த பார்வை ஒன்றை பூபாலனிடம் செலுத்திவிட்டு, "இதோ" என்று உள்ளே விரைந்தாள் சைதன்யா.

சைதன்யாவின் தாமதம் பற்றி வேறு எதுவும் பேசவில்லைதான். ஆனாலும், பூபாலனின் ஆராய்ச்சிப் பார்வை அடிக்கடி தன் பக்கம் திரும்புவதை அவள் அறிந்தே இருந்தாள். நல்லவேளையாக அன்று தொழில் பற்றிப் பேச வேண்டிய விஷயங்களும் நிறைய இருந்து, வாடிக்கையாளர்களும் நிறைய பேர் வந்து போனதால், அவன் எதுவும் கேட்க வாய்ப்பில்லாமலே போயிற்று.

நீதா கொடுத்த அடுத்த'ஆர்டர்'களையும், அவளது அழைப்பையும் பற்றி, சைதன்யா எல்லோருக்கும் சொன்னாள்.

சைதன்யா சொல்லச் சொல்ல, அமைதியாகக் கேட்டுவிட்டு, "அவர்கள் சொல்வது சரிதானே, சைது? நீ பாடுபட்டு அமைத்துக் கொடுத்திருக்கும் உடை. அதை விழாவில் அணிந்து நிற்பதைக் காண அழைப்புக் கொடுத்தது, சந்தோஷமான விஷயம். நிறைய பேருக்கு இப்படி ஒரு எண்ணமே வராது. அதோடு, பெரிய வாடிக்கை. அந்த வட்டத்தில் இன்னும் நிறைய பேர் வருவார்கள். அதனால் நம் தொழிலும் பெருகக் கூடும். அதனால், கட்டாயம் போய் வா" என்றாள் பரிமளா.






நீதாவின் உடைகளைத் தைப்பதில் சைதன்யா தீவிரமாக ஈடுபட்டாள். எல்லாமே அழகாக வந்தன. திருப்தி நிறையவே இருந்த போதும், மனு – நீதாவின் வாழ்வு பற்றிய குழப்பத்தினால் முழு மகிழ்ச்சி அடைய முடியாது போயிற்று.

தைத்தவற்றைக் கொடுப்பதற்கும், கடைசி அளவு பார்ப்பதற்கும் என்று அந்த ஒரு வாரத்தில் தொடர்ந்து இரு முறை சைதன்யா தனியாகவே நீதாவிடம் செல்ல வேண்டியதாயிற்று.

இதற்கு நடுவில் ஒரு தரம் நீதாவே அந்தப் பக்கம் வந்து போயிருக்கிறாள் என்று அறிந்த போது, சைதன்யாவுக்குக் கஷ்டமாக இருந்தது. தோழமை வட்டத்தோடு, சினிமா போனாளாம்.

இடையில்,'திரும்பிப்பா'ருக்கு வந்து, தைத்ததையேனும் வாங்கிச் சென்றிருக்கலாமே. அணிந்து பார்க்கக்கூட, இப்போது வசதி செய்திருக்கிறார்கள். அதன்றி, வேண்டும் என்றே அலைக்கழிக்

கிறாள் என்று எண்ணாதிருக்க முடியவில்லை.

சைதன்யாவை ஓரக்கண்ணால் கூர்ந்து பார்த்தபடியே நீதா சொன்னது ஏன் என்று புரியாமல் போகிற அளவு சைதன்யா முட்டாளல்ல. சீண்டுகிறாள்.

அவள் பிசினஸ் கொடுக்கிற பணக்காரி, சைதன்யா அவளுக்குக் கீழானவள், அவளுக்காக அலைய வேண்டியவள் என்று காட்டுகிறாளாம். ஆனால், சைதன்யாவின் அருமையான தையல்கலையினால் உருவான ஆடைகளுக்கான விலைதான் அவள் கொடுக்கும் பணம்; பிச்சை அல்ல. சைதன்யா எந்த விதத்திலும் நீதாவுக்குக் குறைந்தவள் அல்ல என்று அவளிடம் யார் எடுத்துச் சொல்வது?

ஏன், நீதாவுக்குப் பணத்தைக் கொட்டும் அவள் வீட்டு சொந்தத் தொழிலிலும்கூட, கடவுளாகக் கருதப்படும் வாடிக்கையாளர்கள் இருக்கத்தானே செய்வார்கள்? அவர்களிடம் இந்த முசுட்டுத்தனத்தை இவள் காட்ட முடியுமா?

உள்ளே குமுறியபோதும், நிறுவனத்தின் பொற்காலக் கனவு, சொந்தசுகம் இரண்டையும் கருதி, சைதன்யா தன்னை அடக்கிக் கொண்டாள். அதிலும் சொந்தக் காரணத்தை நினைக்கும்போது, நீதாவிடம் உள்ளூரக் கோபப்படக்கூட தனக்கு உரிமையில்லை என்கிற நியாய புத்தி வேறு அவளை அடக்கி வைத்தது.

'திரும்பிப்பா'ரின் மற்ற தயாரிப்புகளையும் பார்த்துப் பிடித்துப் போன அடையாறு ஷாப் உரிமையாளர்கள், தொழில் தொடர்பைப் பெரிய அளவில் விரிவாக்க விரும்ப, அந்தப் பேச்சுவார்த்தையின் காரணமாகத் தொடர்ந்து பூபாலன் அங்கே செல்ல வேண்டியிருந்தது. பரிமளா நிறுவனத்தில் அமர்ந்திருக்க, சைதன்யா தனியாகவே நீதா நிவாசத்துக்கு சென்று வரலானாள்.




விழா அன்றும் அப்படித்தான். விழாவுக்காக என்று, நீதா வாங்கி வரச் சொன்ன வேறு சில பார்சல்களை எடுத்து வரச் சென்றபோது, பார்சலை ஆட்டோவில் தூக்கி வைத்தவனின் இளக்காரப் பார்வையில், அன்று முதல் தடவையாக சைதன்யா துணுக்குற்றாள்.

பிறகு நேர்ந்த அதிர்ச்சிகள், பலமான பலப்பல.

**(தொடரும்)**

# கண்டநாள் முதலாய்...



முதல்முறை மருந்து வாங்கிச் சென்றபோது, ஒரு சிறு காகி தப்பையினுள் போடுகிற அளவு, நீதாவின் மருந்துகள் கொஞ்சமா கவே இருந்தன. வரவர மருந்துகள் அதிகமானதோடு, பார்சலாகக் கட்டியும் வைக்கப்பட்டிருக்கலா யின. ஆனால் பரிமளா ஒரு தரம் சொன்னது போல, நீதா கஞ்சா கடத் தலில் ஈடுபட்டிருக்க மாட்டாள் என்று நம்பி அவற்றைப் பிரித்துப் பாரா மலே சைதன்யா வாங்கிப் போய்க் கொண்டிருந்தாள். ஆனால் அன்று விழாவுக்கு வாங்கிப் போனவை, பெரிய பெரிய பார்சல்கள்.

பழகியவரான ஆட்டோக்காரர் கூட, ''பலான சரக்கா இருக்குமோ? அந்தாள் அப்படி முழிக்கிறானே!'' என்று குடிப்பது போல சைகை செய்து விசாரித்தார்.

**ரமணிசந்திரன்**

**மனம் மயக்கும் மலர் தொடர்**

‘‘அவர்களுடைய மாமனார்–மாமியாருக்குத் திருமண நாள் விழா. இதில், அதுபோல எதையும் வைக்க மாட்டார்கள்’’ என்று சைதன்யா நம்பித்தான் சொன்னாள்.

வீட்டை அடைந்ததுமே கொண்டுபோன பொருட்களை இறக்கி வைக்க ஆட்கள் வந்தார்கள். கைப்பையை மட்டும் தூக்கிக்கொண்டு வீட்டினுள் செல்கையில், சைதன்யாவுக்கு உடல் சிலிர்த்தது. மனுவின் வீட்டில் பல மணி நேரங்கள் இருக்கப் போகிறாள்! என்ன சொல்லக் கூடும்?

அன்று பூங்காவில் எச்சரித்தபின், அவளைக் கண்டுகொள்ளாமல் அடியோடு ஒதுக்குவான் என்று எண்ணியதற்கு மாறாக, பெரும்பாலும் அருகில் வந்து ஓரிரு வார்த்தைகளேனும் பேசிவிட்டே போனான்.

பெரிதாக ஒன்றும் இராது. பொதுவாக ஏதேனும்... ‘பூபாலன் வரவில்லையா?’, ‘நிறுவனம் நன்றாக நடக்கிறதா’ என்பது போல. ஆனால், நீதாவும் கூட இருக்கும் போதுதான் அவன் பேசுவது. முதலில் கூர்ந்து கவனித்த நீதாவே, பிற்பாடு அலட்சியப்படுத்தும் அளவுக்குப் பொதுப்படையான பேச்சு.

மனைவியிடம் போட்டுக் கொடுத்துவிடுவாளோ என்று தான் விரட்டினானோ என்றோர் ஐயம் வந்தது. அதனாலேயே, அவ்வப்போது அருகில் வந்து கவனிக்கிறானோ என்ற யோசனையும்.

ஆனால், அவள் புறணி பேசுகிறவள் அல்ல என்று அவனுக்குத் தெரியாதா? அல்லது இப்போதெல்லாம், அவளிடம் கெட்டதை மட்டும்தான் நினைக்கத்தோன்றுகிறதோ?

**நீ**தாவுக்கு ஒரு தரம் பிளவுஸ் போட்டு, சேலை அணிவித்துப் பார்த்தவளுக்கு மனம் சற்றுசோர்ந்தது. முன்பு அளவு எடுத்த பின், இந்த ஒரு வாரத்தில் இன்னமும் அவள் மெலிந்தே இருந்தாள். பிளவுஸை சரிப்படுத்தித் தைத்தபோது, உள்ளூர மனம் கலங்கியது. இப்படி ஒப்பனைகளிலேயே எவ்வளவு காலம் கடத்த முடியும்? பல் பெரிதாக, உடலில் எலும்பு எடுத்துத் தெரியும்போது, எந்த ஒப்பனையாலும் மறைக்க முடியாதே!

மானபரனும் இதைக் கவனியாதது, சைதன்யாவுக்கு வருத்தமாகத்தான் இருந்தது. ஒருவேளை, சொன்னாலும் அவள் கேட்கமாட்டாளோ?

தைத்து முடித்ததும் மீண்டும்



‘‘உங்களோட பிளட் டெஸ்ட் ரிசல்ட் வந்துடுச்சு...’’
‘‘எவ்ளோ மார்க் வாங்கியிருக்கேன் டாக்டர்..?’’
*- லெ.நா.சிவகுமார், சென்னை-33.*

**sMs**

அணிந்து பார்க்க நீதா வந்தாள்.

''உங்கள் மாமியார் வந்தாயிற்றா, மிசஸ் நீதா? அவர்களுக்குச் சேலை பிடித்ததா?'' என்று சும்மா பேச்சுக் கொடுத்தாள் சைதன்யா.

''என்னது... அதற்குள்ளா?'' என்றாள் நீதா. ''ஆறு மணிக்கு விழா. அதற்குமுன் இங்கே காலடி எடுத்துவைத்தால், வைத்த காலை வெட்டிவிட மாட்டேன்?'' என்று வெகு இயல்பாக வந்த பதிலில், சைதன்யா ஆடிப் போனாள்.

சொந்த மாமியார்–மாமனார். அவர்களுக்காக விழா கொண்டாடுகிறவள். வெட்டுவாளா? சற்று முரட்டுத்தனமான வேடிக்கையோ என்று பார்த்தால், அதற்கான அறிகுறியே நீதாவின் முகத்தில் இல்லை!

கடவுளே... அவர்கள் மனுவுடைய பெற்றோர் ஆயிற்றே! உடல், முகக் கட்டுப்பாடு, பயிற்சி எல்லாம் மறந்துபோய்விட, விழித்துக்கொண்டு நின்றாள் சைதன்யா. அவளது முகத்தைப் பார்த்துக் குலுங்கிச் சிரித்தாள் நீதா.

''என்ன சைதன்யா, என்னவோ உன் மாமியார் மாமனாரைச் சொன்ன மாதிரி, முகம் எப்படியோ போய்விட்டது?'' என்று சீண்டினாள்.

சட்டென விழிப்பு வர, ''வயதானவர்களை இப்படிச் சொன்னீர்களே என்று அதிர்ச்சியாக இருந்தது. அதுவும், அவர்களுக்காக ஒரு விழாவையும் ஏற்பாடு செய்துவிட்டு...'' என்றாள், முயன்று, சாதாரணமாகவே.

குரலில் சிறு கெஞ்சல்கூட தொனித்ததோ என்ற சந்தேகம் அவளுக்கு. மனதில் இருந்தது தான். அவர்களிடம் நன்றாக இரேன் என்பது போல.

ஆனால், ''அவர்களுக்காக விழாவா? இல்லையே...'' என்று உதட்டைப்பிதுக்கினாள் நீதா. ''சும்மா, பக்கத்தில் சீக்கிரமாக ஒரு விழா எனக்குத் தேவைப்பட்டது. தேடினால், இதுதான் கிடைத்தது. அவ்வளவுதான். ஏன்? மகா உத்தம மருமகள் என்று மனதில் எனக்குக் கிரீடம் சூட்டிவிட்டாயா?'' என்று மறுபடியும் சிரித்தாள் நீதா.

இப்போது முகத்தில் மாறுதல் தோன்றாமல் காத்தபோதும், சைதன்யாவின் மனம் தீவிரமாக வேலை செய்தது. பக்கத்தில் ஒரு விழா தேவையாமா? விழா உடைகளுக்காகத்தான், 'திரும்பிப் பாரை' – அதிலும் சைதன்யாவை நீதா அணுகியது. அப்படியானால்

**''கூட்டணி முறிஞ்சிட்டதா அறிவிப்பு வந்திருக்கு...''**
**''யாருக்கும் யாருக்கும்..?''**
**''ஏட்டய்யாவுக்கு கபாலிக்கும்!''**
**- இ.தங்கமணி, நாமக்கல்.**

**SMS**



சைதன்யாவை இங்கே வரவழைப்பதற்காகவா, நீதா இந்த விழாவைக் கொண்டாடுகிறாள்? ஏன்? பழைய கதையைத் தோண்டி ஏதாவது அறிந்திருந்தாலும், மூன்று ஆண்டுகளுக்கும் மேலாக இருவருக்கும் எந்தத் தொடர்பும் இல்லைஎன்பதும் தெரிந்துதானே இருக்கும்? அப்புறம் எதற்கு?

அப்போதுமே, பெரிதாக நினைத்துகொள்ளும்படியாக இருவரும் ஒட்டிக் கொண்டு அலைந்தது கிடையாது. அவள் படிப்பில் தீவிரமாக இருந்தாள். அவன் தொழிலில் அப்போதுதான் ஈடுபட்டு, அதிலே முனைந்திருந்தான். பிரிவு ஏற்பட்ட பிறகோ, யார், எங்கே இருக்கிறார்கள் என்று அறிந்துகொள்ளக்கூட முயன்றது கிடையாது.

ஒதுங்கிப் போய்விட்ட ஒருத்தியை, எந்தவிதக் காரணமும் இல்லாமல், இவ்வளவு செலவு செய்து தன் வீட்டுக்குள் வரவழைப்பாளா? வீதியிலே போகிற ஆபத்தை வீட்டுக்குள்ளே கொண்டு வந்து, தன்னைத்தானே வருத்திக்கொள்வதற்கு நீதா ஒன்றும் முட்டாள் அல்ல! எனவே, இந்தக் காரணம் தவறு.

கணவன் – மனைவிக்குள் ஒன்றும் சரியில்லை என்பது சைதன்யா கண்டறிந்த உண்மை. அதைச் சீர்படுத்துவதற்கான வழியைத் தேடும்போது, கணவனுடைய பெற்றோரின் திருமண நாள் அருகில் இருக்கவே, அதைச் சிறப்பாகக் கொண்டாடி, கணவனைக் கவர முயற்சிக்கிறாள் இந்தப் பெண், பாவம்! அவனுடைய பெற்றோரைக் கொஞ்சமும் பிடிக்காவிட்டாலும்கூட.

விஷயம் இவ்வளவுதான். இதற்குப் போய் அசட்டுத்தனமாக என்னென்ன வண்ணம் பூசிவிட்டாள். அந்த முதல் பார்வையிலிருந்து, மனுவின் மீது வைத்துவிட்ட மறையாத நேசம், அவ்வப்போது அவளது மூளையைக் குழப்பித்தான் விட்டுவிடுகிறது. என்னவோ, அவளைப் போலவே, எல்லோருக்கும் அதுதான் முக்கியம் என்பதுபோல ஒரு கற்பனை... கற்பனையேதான்!

**அ**ன்று நீதா மிகவும் அழகாக இருந்தாள். முக ஒப்பனை, கூந்தல் ஒப்பனை, ஜிலுஜிலுவென்றிருந்த உடை எல்லாமாகச் சேர்ந்து ரதியாகத் தோன்றினாள். தன்னைப் போட்டியாக நீதா கருதிவிடக் கூடாது என்பதில் கவனமாக

**''தலைவருக்கு மப்பு ஜாஸ்தியாகிடுச்சுன்னு நினைக்கறேன்...''**
**''ஏன்... என்ன சொல்றார்?''**
**''வாக்கு வங்கி, வாக்கு வங்கின்னு சொல்றாங்களே... அதைக் கொள்ளையடிக்க முடியாதான்னு கேக்கறார்!''**
*- பிரியதர்ஷன், சேலம்.*

SMS



இருந்த சைதன்யா, அவளது உடையை மிகவும் யோசித்துத் தேர்ந்தெடுத்திருந்தாள். அதே சமயம் ரொம்பக் குறைவாகவும் தோன்றிவிடாததாக!

'பட்டுக் கருநீலப் புடவை, பதித்த நல்வைரம்' என்ற பாரதியாரின் வரிகளை மனதில் கொண்டு, கருநீலப்பட்டில் அங்கங்கே மின்னும்படி கல் ஒட்டிய சுடி செட். ஓரளவு எளிமையாக, அதே சமயம் அவளுக்கு அழகாக இருந்தது.

ஆறு மணி நெருங்கும்போதே, விருந்தினர்கள் வரத் தொடங்கிவிட்டனர். குறித்த நேரத்தில் சரியாக வந்து சேர்ந்த பெற்றோர் அருகிலேயே மானபரன் அதிகம் இருந்தான்.

ஓரிரு முறை அவனது கண்கள் அவளிருக்கும் இடத்துக்கும் வந்து திரும்புவதை சைதன்யா கண்டாள். எல்லோரையும் பார்ப்பது போலத்தான், அவளை அணுகும் போது உணர்ச்சி காட்டாத பார்வைதான். ஆனால், பார்த்தான்.

இந்தப் பார்வை கூட நிரந்தரம் அல்லதான். இந்த பாலைவனச் சோலையைப் பின்னிறுத்திவிட்டு, அவள் விலகிச் சென்றுதான் ஆக வேண்டும். ஆனாலும் அரிதாகக் கிடைத்த அந்த நிமிஷங்கள், அவளுக்குப் பொன்னாகத் தோன்றின.

விருந்தினர்கள் வரவர, நீதா அவர்களை வரவேற்று பேசிச் சிரித்தாளே தவிர, அவர்களில் யாரையும், தனியே அமர்ந்திருந்த சைதன்யாவுக்கு அறிமுகப்படுத்தி வைக்கும் எண்ணம் வரவே இல்லை. ஆக, பரிமளாவின் எதிர்பார்ப்புக்கு ஜீரோ மதிப்பெண்தான்.

''நம்ம கட்சியோட மகளிர் அணிக்கு முழு அதிகாரம் கொடுத்தது தப்பாப் போச்சா... ஏன்?''

''அவங்க தனியா வேறொரு கட்சி கூட பேசி கூட்டணி அமைச்சிட்டாங்கன்னா பாருங்களேன்..!''

-தேவதாசன், சொக்கம்பட்டி.



SMS

சைதன்யாவுக்கு அதில் வருத்தம் இல்லை. கம்பீரமாகப் பெற்றோர் அருகில் நின்று, அவர்களுடனும், வந்திருந்த சில மூத்த உறவினருடனும் பேசிக் கொண்டிருந்த மானபரனைப் பல்வேறு நிலைகளில் மனதால் படம்பிடித்து, உள்ளத்தையே ஆல்பமாக்கி, ஒட்டி வைத்துக் கொண்டிருந்தவளுக்கு, அதுதான் சுகமாக இருந்தது.

ஒரே ஒரு சிறு வருத்தம் உண்டென்றால், அது அவள் தைத்துக் கொடுத்த ஷர்ட்டை மானபரன் அணியாததுதான். பிடிக்கவில்லை என்று அவனே சொன்ன பிறகு, அதை அணிந்துகொண்டு நிற்பான் என்று அவளுமே எதிர்பார்க்கவில்லை. சும்மா ஒரு சின்ன ஆசைதான்!

எனவே, அப்படியில்லை என்

பது ஒரு பெரிய உறுத்தலாக இருக்கவுமில்லை. ஆனால் பெரிய அடி எதிர்பாராமல் விழுந்தது.

விழாவுக்காக நீதா ஒரு மாஜிக் ஷோ ஏற்பாடு செய்திருந்தாள். அது தொடங்கப் போவதாக ஆள் வந்து அழைத்தபோது, முதலில் சைதன்யாவுக்கு போகவே மனமில்லை. ஆனால் கூப்பிட்டு அனுப்பிய பிறகு போகாதிருப்பதும் நன்றாயிராது. தோட்டத்தின் ஒருபுறமாக ஒரு கட்டிடம் இருந்தது. அங்கே சென்றால், இளையவர்கள் அல்லது இளமையாகக் காட்டிக் கொள்ள முயன்றவர்களாக ஒரு கூட்டம் இருந்தது. ஒருபுறமாக ஏதோ நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.




உள்ளே சென்றதும், ''வா... வா... சைதன்யா'' என்று வரவேற்று, ''எங்கே போய் ஒளிந்துகொண்டிருந்தாய்? மாஜிக் பார்க்க உட்கார். ஏ சாமுவேல், இந்தம்மாவுக்கு உட்கார நாற்காலி எடுத்துப்போடு'' என்று ஒரு பணியாளை நீதா விரட்டினாள்.

''நாற்காலிதானே? எனக்கு நானே எடுத்துக் கொள்வேனே. எதற்காக ஒரு...'' என்ற சைதன்யாவின் குரல் தேய்ந்து நின்றது.

அந்த சாமுவேல் அணிந்திருந்தது... அது, அந்த ஷர்ட்டாக இருக்கக்கூடுமா? இல்லையே... அது முழுக்கைச் சட்டை. இது பாதிக்கைதானே... இல்லை. பாதிக்கையாகக் குறைத்துக் குதறப்பட்டிருந்தது. அதோ பாக்கெட்டின் ஓரமாக, அவளே தைத்த மோனோகிராம்.

அருகிலிருந்து நீதாவின் குரல் விவரம் சொன்னது. ''பரனுக்கு ஷர்ட்டின் நிறமே பிடிக்கவில்லையா? தீவைத்து எரித்திருப்பார். வீணாக்குவானேன் என்று இவனுக்குக் கொடுத்தாயிற்று. தோட்டக்காரனுக்கு உதவியாள். முதலாளிக்குத் தைத்ததை புதிதாகக் கொடுத்தால், கொழுப்பு ஏறிவிடும் என்றுதான், இப்படி வெட்டிக் கொடுத்தேன்!''

கடவுளே... எவ்வளவு ஆசையாகத் தைத்தது. இப்படிச் செய்துவிட்டு, அப்படிப் பார்த்தானா? உணர்ச்சியற்ற பார்வைக்கு விளக்கமாக என்னென்னவோ நினைத்தாளே! கைகளில் முகம் புதைத்து ஒரு மூச்சு அழுதால் நன்றாக இருக்கும். பக்கத்திலேயே நீதா நிற்கையில் எப்படி முடியும்? அழாதிருப்பதுதான், எப்படி சாத்தியம்?

(தொடரும்)

ரமணிசந்திரன்

மனம் மயக்கும் மலர் தொடர்



லேசான புன்னகையோடு நீதா ஆவலாகப் பார்த்துக்கொண்டு நின்ற விதத்தில், அவளது வக்ரபுத்தி தெளிவாகத் தெரிந்தது. நாவில் நீர் சொட்டாத குறைதான். தான் கண்ணீர் விட்டால், அவளுக்கு இன்னமும் எக்களிப்பாக இருக்கும் என்று உணர்ந்த சைதன்யா, தன் முழு சக்தியையும் கொண்டு முயன்று, முகபாவத்தைக் கட்டுப்படுத்தினாள்.

ஆனாலும், முதல் அதிர்ச்சியை நீதா கவனித்திருப்பாளே... ''ஷர்ட்டை முழுதாவே கொடுத்திருக்கலாம். எங்கள் நிறுவனத் தயாரிப்பா... அது சிதைந்திருப்பதைப் பார்த்தது கொஞ்சம் அதிர்ச்சியாகிவிட்டது'' என்று சமாளித்தாள்.

நீதா எதிர்பார்த்த உவகை வேறு. அது கிடைக்காததாலோ என்னவோ, அவளது முகம் சட்டெனக் கடுத்தது. ''அதுதான், அப்படியே கொடுத்தால், அவனுக்குக் கொழுப்பேறிவிடும் என்று அப்போதே சொன்னேனே. சரி சரி... உட்கார்ந்து ஷோ பார். உனக்குக் குடிப்பதற்கு ஏதாவது அனுப்புகிறேன்''



என்று எரிச்சல் குரலில் கூறிய வாறே யாரையோ பார்த்துக் கை காட்டிவிட்டுப் போனாள்.

நீதாவின் ஏமாற்றமும் பெரிது தான் என்பதை, அவளது சொத் தென்ற நடை காட்டியது. அப்ப டியானால், சைதன்யாவை அழ வைத்துப் பார்ப்பதில் அவளுக்கு அவ்வளவு ஆசையா?

**நா**ற்காலியில் சற்று முன் னோக்கிக் குனிந்து அமர்ந்து, வேகமாக எடுத்த பெரிய பெரிய மூச்சுகளால், சைதன்யா சீக்கிரமே தன்னை சமன்படுத்திக்கொண் டாள். ஆனால் அவள் குடிப்பதற் காகக் கொண்டு வந்து தரப்பட்ட பானத்தைப் பார்த்ததும் மீண்டும் அதிர்ந்தாள். இதுபோன்றவிழாக் களில் என்ன இருக்காது என்று ஆட்டோ ஓட்டுனரிடம் அவள் அவ்வளவு நிச்சயமாகச் சொன் னாளோ, அதுவே அவளுக்குத் தரப்பட்டது.

'வேண்டாம்' என்று தட்டில் வைத்து விடுவதற்காக கிண்ணத் தட்டுடன் அலைந்தவனைத் தேடிச் சுற்றுமுற்றும் பார்த்தபோ துதான், மற்றும் பலர் இதுபோலக் கிண்ணங்களை ஏந்தியவாறு சேர்ந் தும், தனித்தும் அருந்திக் கொண் டிருப்பது கண்ணில் பட்டது.

அவர்கள் யாரும் மேஜிக் ஷோவை கண்டுகொள்வதாகவே இல்லை. ஆனாலும், இதுவே பழக்கம்போல, மேஜிக் நிபுணர் தன் போக்கில் ஷோவை நடத்திக் கொண்டே இருந்தார்.

திடுமென அவள் அருகே யாரோ அமர்ந்தார்கள். ''கையி லேயே வைத்திருந்து, பூச்சி பொட்டு விழுந்து வைக்குமுன் குடித்து விடுவதுதானே? ஆனா லும், வேகமான முன்னேற்றம். தொழிலில் முன்னேறுவதற்காக இதெல்லாம் கூடப் பழகியிருக் கிறாயே...'' என்று குத்தலாகக் கூறியவன் வேறு யாருமல்ல... மானபரனேதான்!

அதிர்ச்சி அவனதுபேச்சினால் மட்டும் நேரவில்லை. அவனது கையிலும் இருந்த கிண்ணத்தினா லும்தான். பூவுடன் சேர்ந்த நாராக லாம். ஆனால், பன்றியுடன் சேரும் கன்றாக இறங்கலாமா? இதை எப் போது பழகியிருப்பான்?

அவனது ஓரளவு குறைந்திருந்த மதுக்கிண்ணத்தை வெறித்துப் பார்த்துவிட்டு, ''பாட் காலிங் த கெட்டில் பிளாக் என்று ஓர் ஆங்கிலப் பழமொழி உண்டு தெரி யுமா?'' என்றாள் அவள்.

''அது எதற்... ஓஹோஹோ...



**SMS**

''மன்னரின் பார்வையில் குறை பாடு உள்ளதென்று எப்படிச் சொல் கிறீர்..?''

''உமனா என்று சந்தேகப்படும் அளவிலிருந்த ஒரு பெண்ணைக் காட்டி, தமன்னாவைப் போல இருப் பதாகக் கூறுகிறாரே...''

*-வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.*

என் கையில் இருப்பதைப் பார்த்தா? நான் பணக்காரன், சைதன்யா. இப்படித்தான் என்று இலக்கணமே எனக்குக் கிடையாது. ஆனால் நீ அப்படி யில்லைம்மா... முன்னேற்றப் படியில் ஏறவேண்டுமானால், கூடச் சேர்ந்து கும்மாளம் அடிப் பதற்குத் தயாராக இருக்க வேண் டும். ஆனால், தயாராகத்தானே கையில் கிண்ணத்தோடு வந்து உட்கார்ந்திருக்கிறாய். நன்றாக நடத்து!'' என்று ஏளனமாக மொழிந்தான் மானபரன்.

கையில் பாதி குடித்த கிண் ணத்தை வைத்துக்கொண்டு அவ ளைக் குத்துகிறானா?

"நான் ஒன்றும் இதைக் குடிப்ப தற்காக வாங்கவில்லை...''

''ஓஹோ! மதுக்கிண்ணம் எப் படி இருக்கும் என்று அழகு பார்ப் பதற்காக எடுத்துக் கொண்டாய் போல?''

மறுபடியும் தேடித் திரும்பிய போது, நல்லவேளையாக பானத் தட்டை ஏந்தி ஒருவன் அந்தப் பக் கம் சென்று கொண்டிருந்தான்.

''இந்தாப்பா, இங்கே வா'' என்று அழைத்த குரலில், ''வேணு மாம்மா?'' என்று ஓடி வந்தான்.

"இல்லைப்பா. இதுவும் வேண் டாம். வாய் படாததுதான். கொண்டு போ'' என்று தட்டில் கிண்ணத்தை வைத்தாள்.

"இது உயர்ந்த சரக்குதான்மா'' என்றான் அவன் அவசரமாக.

"எனக்குப் பழக்கம் இல்லை... வேண்டாம்'' என்று அவள் முடி வாகச் சொன்ன விதத்தில் அவன் அங்கிருந்து அகன்றான்.

அப்போதும், "பழகிக் கொள் வதுதானே? தொழில் வளர்ச்சிக் காக. அதற்காகச் செய்யக்கூடாத துதான் எதுவுமில்லையே'' என்று பக்கத்திலிருந்த அவன் முணுமு ணுக்கவும், சைதன்யா ஆத்திரத்து டன் அவனைத் திரும்பிப் பார்த்து முறைத்தாள்.

லேசாகத் தோளைக் குலுக்கி, ''இது இத்துடன் நிற்காது சைதன்யா. நான் சொல்வதைக் கேள். உடனே கிளம்பிப் போய் விடு'' என்று மானபரன் சொல் லும்போதே, அவனது செல் ஒலித் தது. அதை எடுத்து அவன் பேசிய வேளையில், அவள் எழுந்து சற் றுத் தள்ளிப் போய் அமர்ந்தாள்.

அவளுக்கு மட்டும் இங்கே அமர்ந்திருப்பதில் ஆசையா? அவளது மகிழ்ச்சிதான், இந்தக் கட்டிடத்துக்குள் வந்ததுமே அழிந்து போயிற்றே. அதோடு, நீதா அழைத்து வந்திருப்பவள், அவளிடம் விடை பெறாமல் எப்



## SMS

''மீட்டிங்ல ஒரு தலைவர் மேல அழுகின தக்காளியும், இன்னொ ருத்தர் மேல அழுகின முட்டையும் வீசறாங்களே... ஏன்?''

''ஒருத்தர் சைவம்; இன்னொ ருத்தர் அசைவமாம்!''

- பத்மினி, சென்னை.




''ஆடு, மாடுகளைத் திருடிட்டிருந்த கபாலி, நேத்து ஏட்டு வீட்டுல திருடியிருக்கான்..!''

''ஆட்டைக் கடிச்சி... மாட்டைக் கடிச்சி... கடைசியில ஏட்டையே கடிச்சிட்டானா..?''

- *வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.*

*படிப் போக முடியும்?*

*மானபரனுக்கு அவ்வளவு அக்கறை இருந்தால், கூடவே துணிச்சலும் இருந்தால், மனைவியிடம் போய், 'சைதன்யாவை அனுப்பிவிடு' என்று சொல்ல வேண்டியதுதானே? அதைவிட்டு, மனைவி கண் மறைந்ததும் அவளிடம் வந்து, கையில் தார்க்குச்சி எடுக்காத குறையாக விரட்டிக் கொண்டு...*

செல் பேச்சை முடித்துக் கொண்டு மானபரன் திரும்புவது போலத் தெரியவும், அவசரமாகத் திரும்பி பக்கத்தில் இருந்த பெண்ணுடன் தீவிரமாகப் பேசத் தொடங்கினாள் சைதன்யா. சற்றுப் பொறுத்து ஓரக்கண்ணால் பார்த்தபோது, மானபரன் அங்கே இல்லை.

**மே**ஜிக் ஷோவை மூட்டை கட்டிவிட்டு, யாரோ ஏதோ இசையை ஓட விட்டார்கள். நாற்காலிகளை ஒதுக்கிப் போட்டு, ஆட்டமும் தொடங்கியது. செட் செட்டாக சேர்ந்து ஆடுகையில், அவளையும் யார் யாரோ ஆட அழைத்தார்கள்.

மரியாதையாகவே மறுத்து விட்டு, ஓரமாக அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தவளுக்கு, ஜோடிகளின் ஒட்டலைக் கண்டதும், எப்போது கிளம்புவது என்று மனம் தவிக்கத் தொடங்கிவிட்டது.

அவளுக்கு பெரிய வீட்டுக்கே போய், நீதாவைக் கேட்கலாம் என்றாலோ, மனுவின் பின்னாலேயே துரத்திக்கொண்டு செல்வது போலத் தோன்றிவிடுமோ என்று, அதற்கும் தயக்கமாக இருந்தது. சும்மாவே நீதா அவர்களைச் சந்தேகிப்பதாக ஒரு பிரமை, தலையைத் தூக்கித் தூக்கிக் காட்டிக்கொண்டே இருந்ததே... எப்படியும் நீதாவே வந்துவிட மாட்டாளா, என்ன?

**சை**தன்யாவின் சிந்தனை ஓட்டத்தைத் தோளின் மீது பலமாக விழுந்த கை, தடுத்து நிறுத்தியது. திகைத்துப் பார்த்தால், ''ஹனி, வா ஆடலாம். இதுபோல விழாக்களுக்கு வந்துவிட்டு, இப்படித் தனிமையில் வாடக் கூடாது!'' என்று அழைத்தான் ஒருவன்.

''இல்லை. எனக்கு ஆடத் தெரியாது'' என்று அவன் கையை அகற்றினாள் சைதன்யா.

அகற்றிய கையையே பற்றி, ''ஒன்றும் கடினமில்லை டார்லிங், சும்மா என்மேல் சாய்ந்து கொண்டு, என்போலவே அசைந்தாயானால், அவ்வளவுதான்!'' என்று அவளை எழுப்ப முயன்

றான் அவன். பிடிவாதமாக மறுத்தால், அப்படி ஒன்றும் கை மீறுவான் போலத் தோன்றாவிட்டாலும், சைதன்யாவின் நெஞ்சு படபடத்தது.

இந்த நீதா எப்போது வருவாள்? வாயிலை நோக்கி, ''இல்லை. நான் கிளம்பவேண்...'' என்று அவள் சொல்லிக்கொண்டு இருந்தபோது, ''மிஸ்டர், அவள் என் ஆள். என்னோடுதான் ஆடப் போகிறாள்'' என்றது மானபரனின் குரல்.

''ஓ, சாரி... தனியாக உட்கார்ந்திருக்கவும்... சாரி மேம்'' என்று விலகிப் போனான் மற்றவன்.

அவள் ஆறுதலாக மூச்சு விட்டாள். ''அவர்கள் நாகரிகம். ஆனால், இது போலக் கேளிக்கைகளில் தன்னந்தனியே இருந்தால் என்ன நடக்கும் என்று தெரிகிறதா? இனியேனும் கிளம்பிப் போவதுதானே?'' என்றான் மனு.

''எப்படிப் போவது?'' என்றாள் அவள் எரிச்சலுற்று.

''இதென்ன கேள்வி? எப்படி வந்தாயோ, அப்படித்தான் போக வேண்டும்!''

''ஆஹா... அது தெரியாமல்தான், இந்தக் கண்ணராவி ஆட்டத்தைப் பார்த்துக்கொண்டு இங்கேயே உட்கார்ந்திருக்கிறேனாக்கும்? நான் வந்த ஆட்டோ போய்விட்டது. என்னைத் திருப்பி அனுப்புவது தன் பொறுப்பு என்று உங்கள் மனைவி சொன்னதால், இப்போது அவர்கள் வருவதற்காகத்தான் காத்திருக்கிறேன்'' என்று சலித்த குரலில் பதிலிறுத்தாள் சைதன்யா.

''என்னது?'' என்று வியந்தான் மானபரன்... ''மகாராணிதான் அப்போதே ஓய்வெடுக்கப் போயாயிற்றே. இனி நாளை காலை... அவளுக்குக் காலை என்று தோன்றுகிற நேரம்தான் கீழே வருவாள்'' என்று அவன் போட்ட அணுகுண்டில், ''என்னது?'' என்று திகைப்பது இப்போது சைதன்யாவின் முறையாயிற்று.

இப்போது அவள் எப்படி வீட்டுக்குப் போவது? நகரத்துக்குள்ளேயே இரவாகிவிட்டால், நடமாட்டம் குறைந்த தெருக்களில் தனியே செல்ல முடிவதில்லை. இந்தக் கிழக்குக் கடற்கரைச் சாலையில் தன்னந்தனியே எப்படிப் போவாள்?

இப்போது அவளுக்கு உதவி செய்யக் கூடியவன் மானபரன் மட்டும்தான்... சைதன்யாவின் மனதைப் படித்தவன் போல, ''இந்த வீட்டுப் பணி




''என்ன சொல்றே... இந்த ஏரியாவுல திருட்டு குறைஞ்சதுக்கு டிரான்ஸ்பர் ஆன பழைய இன்ஸ்பெக்டர்தான் காரணமா?''

''ஆமா... அவர்தான் இங்க இருந்த திறமையான திருடங்களையெல்லாம் கூடவே கூட்டிட்டுப் போயிட்டாரே!''



**SMS**

''மன்னா... நல்ல செய்தி கொண்டு வந்திருக்கிறேன்!''

''அப்படியா... என்ன அது?''

''புலவருக்குத் தொண்டை கட்டிவிட்டது... வாயைத் திறந்தால் வெறும் காத்துதான் வருது!''

*-ராம்.ஆதிநாராயணன், தஞ்சாவூர்.*

யாட்கள் எல்லோரும், நீதாவுடைய தந்தை அவளுக்காக நியமித்தவர்கள். அங்கே வீட்டுக்கு உன்னைக் கூட்டிப் போவதுகூடச் சரிவராது. என் பெற்றோருடன் உன்னை அனுப்புவதோ, நானே கொண்டு விடுவதோ, அதுவும்...'' என்று அவன் சொல்லவரும்போதே, முன்பு ஆட அழைத்தவன் மறுபடியும் வந்து நின்றான்.

''பார்பா, நீ ஆடலைன்னா, பெண்ணை என்கிட்டே விடு...'' என்றான் லேசாகக் குழறியபடி.

''இல்லை, இதோ...'' என்று கை வளைவுக்குள் சைதன்யாவை இழுத்துக்கொண்டு, மானபரன் சுழலவும், சைதன்யா பிரமித்துப் போனாள்.

''இது பிரச்னை ஆகாதா?'' என்றாள் மூச்சு வாங்க.

''அநேகமாக ஆகாது. அடையாளம் காட்டுவதற்கான சிந்தை தெளிவோடு இங்கே எத்தனை பேர் இருக்கக் கூடும்? ஆனால், உன்னை அனுப்புவதைப் பார்க்க வேண்டும்...'' என்றவன், அவளோடு ஆடியவாறே ஹாலின் வாயிற்புறம் சென்று, அப்படியே வெளியே கூட்டிச் சென்றான்.

வீட்டுக்கும் கேளிக்கை ஹாலுக்கும் இடையில், புதர் போலத் தோன்றிய ஒரு குறு மரத்தடியில் அவளை நிற்க வைத்தவன், உடனே செல்லாமல் தயங்கினான். ஒரு கணம் அவளை இறுக அணைத்தவன், அது கனவோ என்னும் வகையில் மறுகணமே அவளை விட்டு விலகி, ''யாரும் உன்னைத் தேடி இங்கே வர வாய்ப்பில்லை. ஆனால் மறைவு என்று எண்ணி, எந்தப் புதருக்குள்ளும் போய்விட வேண்டாம். இதோ வருகிறேன்'' என்று சென்றான்.

**நெ**டுநேரமாகத் தோன்றிய, கலக்கம் மிகுந்த சில பல நிமிஷங்களின் பின், மானபரன் வந்து அவளை அழைத்துச் சென்றான். வெளியே செல்லத் தயாராக இருந்த ஒரு காரில் அவளை ஏற்றி விட்டு, மறுபுறம் சென்று, ''கூடக் கொஞ்ச நேரம் இருக்க விடாமல் விரட்டுகிறேன்... ஸாரி! அவள் வீட்டிலேயே இறக்கிவிட்டு விடுங்கள்'' என்று விலகி நின்றான்.

சிறு அமைதியின் பின், ''என் பெண் என்ன செய்தாள்?'' என்று கேட்டாள் காரில் இருந்தவள்.

மனம் கலங்க, மலங்க விழித்து, ''யார் உங்கள் பெண்?'' என்று கேட்டாள் சைதன்யா.

''நீதா'' என்றது அந்தப் பெண் மணியின் அமர்ந்த குரல்.

(தொடரும்)

**அ**ந்தப் பெரியவள் பேசியதே புரியாதது போல சற்றுநேரம் திகைத்துப் போனாள் சைதன்யா. நீதாவுடைய தாயாரிடமா, கூடக் கூட்டிச் செல்லும் படி, மானபரன் அவளை ஒப்படைத்தான்? இப்போது இவளிடம் என்ன சொல்வது? அவன் ஏற்கனவே என்ன சொன்னானோ?



''என்னம்மா, தொல்லை ரொம்பப் பெரியதா? அவள் அம்மாவிடமே எப்படிச் சொல்வது என்று யோசிக்கிறாயா?''

பெருமூச்சோடு, ''தொல்லைதான் என்று எப்படி நிச்சயம், உங்களுக்கு?'' என்று பதில் கேள்வி கேட்டாள் சைதன்யா.

''நிச்சயம்தான். நான், நீதாவுக்குத் தாயார் ஆயிற்றே. எனக்குத் தெரியாதா! மற்றபடி, மருமகன் இப்படி ஒரு வேலையை என்னிடம் ஒப்படைப்பாரா? அவருடைய பெற்றோரைத் தனியே உட்கார வைத்துவிட்டு வரச் சொன்னபோதே, எனக்குத் தெரிந்து போயிற்றே!''



திரும்பிப் பார்த்தபோது, எதிரே வந்த காரின் முன் விளக்கு ஒளியில், அருகில் இருந்தவளின் முகம் தெளிவாகத் தெரிந்தது. மகளின் சாயல் சிறிதுமில்லை. அதாவது தாயைப் போல மகளில்லை. குணத்திலும் வேறுபாடாகத்தான் இருக்குமா?

'ஆமாம், அப்படித்தான்' என்பது போல, ''என்ன சாந்தமான அழகாக இருக்கிறாய்'' என்று, அதே எதிர் விளக்கு வெளிச்சத்தில் சைதன்யாவைப் பார்த்து அதிசயப்பட்டாள் பெரியவள்... "இப்படி அழகான பெண்களை, என் பெண் பக்கத்திலேயே சேர்க்க மாட்டாளே. நீ எப்படி இங்கே வந்து சேர்ந்தாய்?''

மூத்த தலைமுறையின் பேச்சிலிருந்த முரண்பாட்டில் லேசாக முறுவலித்தபோதும், காரை ஓட்டிக்கொண்டிருந்த மாணிக்கத்தை எச்சரிக்கையோடு காட்டினாள் சைதன்யா.

அதற்கும் முறுவலித்தாள் தாயார். "மாணிக்கத்தை முழுதாக நம்பலாம்மா. நீதா விலாசத்து ஆட்கள் பயத்தில் அவள் சொன்னபடி ஆடுவார்கள். மாணிக்கமும் நீதா அப்பா நியமித்த ஆள்தான். ஆனால், சுயபுத்தியோடு தைரியமும் உண்டு. அதனால், நான் அங்கிருந்து வெளியேறியபோது கூடவே வந்துவிட்டான். இப்போது கூடப் பார்... சாப்பிடப் போனவன், நான் கூப்பிட்டேன் என்று விருந்து சாப்பாட்டை விடுத்து வந்துவிட்டான்'' என்றாள் பெருமையாக.

"ஐயோ, என்னால் அல்லவா இந்தக் கஷ்டம்'' என்று வருந்தினாள் சைதன்யா. "பசியோடு சாப்பிடப் போகும்போது கெடுத்துவிட்டேனே. ஆன்ட்டி, நீங்கள் தப்பாக நினைக்காவிட்டால்...'' என்றவளின் பேச்சில் அந்த மாணிக்கம் இடையிட்டு, ''அதெல்லாம் ஒன்றும் இல்லைம்மா. வீட்டுக்குப் போனால் பெரியம்மா ஏதாச்சும் தந்து விடுவாங்க, கவலைப்படாதீங்க'' என்றான்.

**சை**தன்யாவின் தந்தை வாயிலிலேயே காத்திருப்பதைப் பார்த்துவிட்டு, நீதாவுடைய தாயும் இறங்கிவிட, சைதன்யா இருவருக்கும் அறிமுகம் செய்து வைத்தாள்.

அவள் அஞ்சியது போலவே, "எத்தனை காலம் நான் பார்க்க முடியும், அம்மா? திருமணம் செய்து கொள்ளும்படி, இவளுக்குக் கொஞ்சம் புத்தி சொல்லுங்கள். உங்களைப் போலப் பெரியவர்கள் சொன்னால் கேட்டாலும் கேட்பாள். மூன்று ஆண்

**SMS**

''நான் திருடப்போன வீட்டுக்கு மாயாண்டியும் வந்துட்டான்...''

''அப்புறம்?''

''ஒருவழியா 'கூட்டு' வச்சு ஜெயிச்சிட்டோம்!''

- பா.து.பிரகாஷ், தஞ்சாவூர்.



டுகளுக்கு முன்னே சரி என்ற வள், பிறகு...'' என்று கதையைத் தொடங்கிவிட, அவசரமாகக் குறுக்கிட்டுத் தடுத்து, "அவர்கள் காரோட்டி இன்னும் சாப்பிட வில்லைப்பா. அதனால், சீக்கிரம் அனுப்ப வேண்டும்ப்பா...'' என்று வேறு திசையில் பேச்சைத் திருப் பினாள்.

"மூன்று வருஷங்களுக்கு முன் னேயா?'' என்று கேட்டு, சின்னவ ளைக் கேள்வியாகப் பார்த்தபோ தும், அதற்கு மேல் நில்லாமல் நீதாவுடைய தாய் கிளம்பிவிட, நிம்மதியாக மூச்சு விட்டாள் சைதன்யா.

இரவு விளக்கை அணைத்தால், தூங்க வேண்டும் என்ற எண்ணம் கூட வர மறுத்தது. மூன்று நெடிய ஆண்டுகள்... அப்போது அவ ளுக்கு இருபதே வயதுதான். திருமணம் பற்றித் தந்தை கேட்டதும், அப்படி அவசரப்பட்டுச் சட் டென சரியென்றி ருக்க வேண்டாம்.

மனம் நிறைய மானபரன் இருந் ததும், அவனும் காதல், கல்யாணம் என்றதும், அதே சமயம் சுந்தரேசன் அந்தப் பேச்சை எடுத்ததும், எல் லாமே சுப சூசக மாகத் தோன்றிவிட, தந்தை யிடம் தலையாட்டிவிட்டாள்.

ஆனால், சூசகம் அப்படிக் காலை வாரிவிடும் என்று அப்போது அவ ளுக்கு என்ன தெரியும்? நாலே நாளில், எல்லாம் தலைகீழாக மாறிப் போயிற்று.

இப்போதும் அவன் ஆனந் தமாக இருந்தால், தொழில் திருப்தியோடு வாழும் காலம் முழுவதையுமே, அவளால் எப்ப டியோ கடத்திவிட முடியும்தான். ஆனால் மனுவின் மகிழ்ச்சியே அல்லவா, இப்போது கேள்விக் குறியாக இருக்கிறது.

மகளைப் பற்றி, வீடு, வேலை யாட்கள் என்று நீதாவுடைய தாய் பேச்சுக்கிடையே வெளியிட்ட சிறு சிறு குறிப்புகளே, சைதன்யா வுக்கு குழப்பத்தோடு பெரும் கவலையையும் அளித்தி ருந்தன. ஒரு தாய், மகளை விட மருமகனை உயர்வாக நினைத்தால், அந்த மகள் எப்படிப்பட்டவளாக இருப்பாள்?

ஆனால், மானபர னின் அன்றைய பேச்சு, செயல்களும் கூட, அவ ளைக் கலங்கத்தான் அடித்தன. அந்த ஒரு வினாடி, சொர்க்கமா கவே இருந்தபோதும்! பாலைவனச்சோலை, பாதை தவறவைத்து விடக் கூடாதில் லையா?

ஆனால், இன்னமும் தன்னைப் பற்றிய நம்பிக்கை

**SMS**



''இன்ஸ் பெக்டர் ஐயா வுக்கு கபாலி மாமூல் தரலைன்னு எப்படிச் சொல்றே?''

''மளிகைச் சாமான் எல்லாம் வாங்கிட்டு, கபாலி கணக்குல எழு திக்கச் சொல்றாரே..!''

**- ராம்ஆதிநாராயணன், தஞ்சாவூர்.**

சைதன்யாவுக்கு நிறையவே இருந்தது. மானபரனிடமும் கூட. ஒரு வினாடி தடுமாறினாலும், உடனே சுதாரித்துக் கொண்டான்தானே? ஆனாலும், இந்தப் பரீட்சை, அடிக்கடி செய்து பார்ப்பது நல்லதல்ல. நெருப்பு சுடுமா என்று சும்மா சும்மா சோதிப்பதால் யாருக்கு நஷ்டம் ஏற்படும்?

மானபரனைப் பற்றி அவளுடைய சகாக்களிடம் வெளிப்படையாகச் சொல்ல முடியாது. ஆனால் நீதாவே நல்லபடியாக நடந்துகொள்ளவில்லை எனும்போது, அதையே காரணமாகச் சொல்லி முடித்துவிடலாம்!

இப்படி ஒரு முடிவை எடுத்த பிறகும்கூட, சைதன்யாவுக்கு தூக்கம் வர மறுத்தது. சற்று நேரம் முயன்று பார்த்துவிட்டு, விளக்கைப் போட்டுக் கொண்டு புதிதாகச் சில டிசைன்களை உருவாக்குவதில் முனைந்தாள். வடிவங்கள் உருவாக உருவாக, வேலையின் ஈடுபாட்டினால், சைதன்யாவின் மனமும் மெல்ல அமைதி அடையலாயிற்று.

மறுநாள் அலுவலைத் தொடங்குமுன், முன் தினம் பற்றிய விவரத்தை அறிய, எல்லோருமே ஆவலாக இருந்தனர். அவளும் சொன்னாள். விஷயத்தைச் சற்றே மாற்றி, அவளது இக்கட்டு புரிந்து, நீதாவுடைய தாயாரே அவளை வீட்டில் கொண்டுவந்து விட்டுவிட்டுப் போனதாக சைதன்யா சொல்லி முடித்தபோது, யார் முகத்திலும் ஈயாடவில்லை.

“நல்லவேளையாக அவளுடைய தாயாருக்காவது நல்ல புத்தி இருந்து, உன்னை வீட்டுக்குக் கூட்டி வந்தார்களே. மகளுக்காகப் பரிகாரம் செய்தார்கள் போல. இல்லாவிட்டால், அந்த இரவில் தன்னந்தனியாக அல்லவா, அங்கே நின்று தவித்திருப்பாய்'' என்று பரிவு காட்டினான் இலியாஸ்.

“உண்மைதான். கடவுள் காப்பாற்றினார். ஆனால் அந்த நீதா, அங்கே யாருக்குமே, ஒருவருக்குக் கூடவா உன்னை அறிமுகப்படுத்தவில்லை?'' என்று எரிச்சலாகிக் கேட்டாள் பரிமளா.

“ஊகூம். நீதாவின் ஷோல்டர்லெஸ் பிளவுசைப் பார்த்து ஓரிருவர் பாராட்டியபோதுகூட, அவள் வாயே திறக்கவில்லை. என்னவோ இன்று கோபமாயிருக்கிறாள், நம்மால் யாரும் பாதிக்கப்பட்டு விடக் கூடாது என்று நானும் வாயைத் திறக்கவே இல்லை.

**SMS**



‘‘கபாலி எதுக்கு புத்தகமெல்லாம் எடுத்துக்கிட்டு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போறான்..?''

‘‘அடையாள அணி‘வகுப்பு’க்கு வரச் சொன்னதை தப்பாப் புரிஞ்சுக்கிட்டான்...''

- பிரியதர்ஷன், சேலம்.

கோபம் வந்தால், யாரை என்ன சொல்வது என்பதே அவளுக்கு இல்லை'' என்று வாழைப்பழத்தில் ஊசி இறக்கினாள் சைதன்யா.

''ம்... போனதே வீணாகிவிட்டதே...''

''ஒரேயடியாக அப்படிச் சொல்ல முடியாதுக்கா'' என்றவள் தொடர்ந்தாள்... ''வீட்டுக்கு வந்தபோது மன அமைதி ரொம்பவே கெட்டிருந்தது. அதைச் சரிப்படுத்துவதற்காக வேலையில் இறங்கினேனா, இதோ பாருங்கள்'' என்று தன் டிராயிங் நோட்டைப் பிரித்துக் காட்டினாள்.

அந்த டிசைன்களும் அவற்றுக்காக அவள் எழுதி வைத்திருந்த வண்ணத் திட்டங்களும், மற்ற மூவருக்குமே பிடித்துப் போய்விட, 'ஆஹா... ஓஹோ...' என்று புகழ்ந்தனர்.

**சோ**ம்பியிருப்பதோ, தள்ளிப் போடும் பழக்கமோ அவர்களில் யாருக்கும் கிடையாது என்பதால், சைதன்யா வரைந்து வந்த உடையமைப்புகளை அப்போதே வெட்டி, ஒட்டு நூல் போட்டுத் தைத்துப் பார்க்கத் திட்டமிட்டனர்.

துணிகளை விரித்துப் போட்டு வெட்டி, உரிய விதமாகப் பொருத்திப் பார்ப்பதற்கு வசதியாக, ஒரு சிறு பகுதியை அடைத்து ஒதுக்கியிருந்தனர். அதில் நால்வருமாக அமர்ந்து வேலை செய்தனர்.

''இப்படி நீளம் கொஞ்சம் அதிகம் வைத்து, பழைய கால சட்டைக் கையில் உள்ளது மாதிரி, மல்லிமொக்குத் தையலைக் கொஞ்சம் தளரப் போட்டுவிட்டால், நடக்கும்போதே, அங்கங்கே லேசாகத் தூக்கி, உடையே துள்ளுவது போலத் தோன்றும் என்பது ஐடியா'' என்று சைதன்யா விளக்கும்போதே, ''ஹை! எல்லாரும் இங்கே ஒளிஞ்சிட்டு இருக்கீங்களா?'' என்ற கேள்வியோடு, மனோகரியுடைய மகன் சின்னக்கிருஷ்ணன் உள்ளே ஓடி வந்தான்.

''டேய் டேய், புதுத் துணிம்மா, ஷூ போட்டுக்கொண்டு, இதன் மேல் நடக்கக் கூடாது செல்லம்'' என்றாள் பரிமளா.

அதற்குள் எதிர்முனை ஓடிவிட்ட பிள்ளை அங்கே நின்று, ''நான் நடக்கலியே... ஓடித்தானே வந்தேன்?'' என்று கேட்க, முறுவலோடு அவன் கன்னத்தைத் தட்டி, ''அதில்லை சின்னுக்குட்டி, நடக்கிறதோ, ஓடுவதோ, இந்தத் துணி மேலே ஷூ போட்டுக்கொண்டு போகக் கூடாது'' என்றான் இலியாஸ்.

''ஓஹோ, அப்பிடியா?'' என்று



**SMS**

''மன்னர் ஏன் விடியற்காலையில் போர் வைக்கச் சொல்கிறார்..?''

''ஆதாயத்துடன் தான்! ஓடியது போலவும் இருக்கும்; உடற்பயிற்சி செய்ததுபோலவும் இருக்குமே..!''

**- ஏ.டி.தமிழ்மணி, தளிகைவிடுதி.**

விஷயத்தை ஜீரணித்த சிறுவன், குடுகுடுவென வெளியே ஓடிப் போனான்.

“ஏய் சின்னு, என்னடா மறுபடியும்'' என்ற குரல்கள் அடங்கு முன்னே, அடைப்பின் வாயில் பகுதியை அடைந்துவிட்ட சின்னு, அவசரமாக ஷூக்களைக் கழற்றிக் கையில் தூக்கிக் கொண்டான்.

பொத்திப் பொத்திப் பதவிசாக நடந்து மறுபடியும் பூபாலிடம் சென்றவன், ‘‘இப்படி வரலாமா, அங்கிள்?'' என்று வினவினான்.

விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்காக, இன்னொரு தரம் ஷூவால் துணிகளை மிதித்தபடியே வெளியே ஓடிய சிறுவனின் லாஜிக்கில் எல்லோருக்கும் அடக்க மாட்டாமல் சிரிப்பு வந்துவிட, பிள்ளையைத் தூக்கி அணைத்து, “இந்தச் செல்லக்குட்டியின் கெட்டிக்காரத்தனம் யாருக்கு வரும்?'' என்று கொஞ்சினான் பூபாலன்.

“ஆட்டோவை அனுப்பிவிட்டு வருமுன் அப்படி என்னடா ஓட்டம்? உடனே இங்கே வராவிட்டால் உதை விழும்” என்ற மனோகரியின் கடுமையில் முகம் வாட, தானே சின்னுவை இறக்கி விட்டான் அவன்.

“சின்னக் குழந்தையைப் போய் அதட்டுகிறாயே, மனோகரி! அவனைப் பார்த்தாலே, எங்களுக்கெல்லாம் ஒரு யூனிட் ஆக்ஸிஜன் உள்ளே போன மாதிரி இருக்கிறது. அவன் சும்மா விளையாடட்டும். நீ அந்த ‘ஆரே’ வேலைப்பாட்டை முடித்துவிட்டாயா?'' என்று தொழில்முறைப் பேச்சை பரிமளா தொடங்க, மகனையும், மகனோடு சேர்த்து பூபாலனையும் ஒரு தரம் முறைத்துப் பார்த்துவிட்டு, மனோகரி அவளைப் பின் தொடர்ந்தாள்.

வேலைகள் ஒரு புறம் வழக்கம்போல நடந்தாலும், எல்லோர் மனதிலும் நீதா பிரச்னை உறுத்திக்கொண்டே இருந்தது. நேரடி பாதிப்பினால், சைதன்யாவுக்கு அதிகமாக!

ஆனால் அன்றாட வழக்கம் போல, வரவு செலவுக் கணக்குகளைப் பரிமளா தெரிவித்தபோது, அவளை அவ்வளவு எளிதாக உதறிவிட முடியாது என்பது புரிந்தது. அந்த அளவுக்கு அவள் பணத்தாலேயே அடித்திருந்தாள். செய்து கொடுத்திருந்த வேலைகளுக்கு மிக அதிகமாக அவளது பணம், ‘திரும்பிப்பா’ரில் இருந்தது.

பிடிப்பை இன்னமும் உறுதி செய்வதாக, அன்றும் ஒரு ரோஜா நிற கவர் வந்தது.

(தொடரும்)



**SMS**

‘‘புது இன்ஸ்பெக்டர் கிட்ட நம்ம இன்ஸ்பெக்டர் எல்லா சார்ஜையும் ஒப்படைச்சுட்டார்..!''

‘‘என்னென்ன..?''

‘‘ரெண்டு பீரோ, நாலு மேஜை, பதினோரு நாற்காலி, ஒரு கபாலி..!''

**- இ.தங்கமணி, நாமக்கல்.**

# கண்டநாள் முதலாய்...

மனம் மயக்கும் மலர் தொடர்



மனோகரிக்குப் பணம் கொடுத்து அனுப்பிய பிறகு, தினம்தோறும் செய்வது போல, நிறுவனத்தின் வரவு செலவு பற்றி, மற்ற மூவருக்கும் பரிமளா எடுத்துச் சொன்னாள். அதைக் கேட்டதுமே சைதன்யாவுக்குச் சற்று மனம் சோர்ந்து விட்டது!

பொதுவாகப் பார்த்தால், 'திரும்பிப்பார்' முன்னேற்றப் பாதையில்தான் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. அதிலும், புதிதாகக் கிடைத்திருந்த அடையாறு ஷாப் ஒப்பந்தம், அவர்களைப் பல படிகள் உயரே தூக்கி விட்டிருந்தது!

ஆனால், அந்த உயர்வுக்காகச் செலவும் நிறைய ஆகியிருந்தது. இன்னும் செய்யவும் வேண்டியிருந்தது!

17

**ரமணிசந்திரன்**

கூடுதலாக நான்கு கமர்ஷியல் தையல் இயந்திரங்களுக்காக முன்பணம் கட்டப்பட்டிருந்தது. அந்த இயந்திரங்களைப் போட்டு வேலை செய்வதற்காக, இப்போதிருக்கும் இடத்தின் பின்புறமாக இருந்த இன்னும் கொஞ்சம் இடத்தைக் கேட்டிருந்தார்கள். அதாவது, முன்பணமும் வாடகையும் அதிகமாகும். வேலைக்கும் மேலும் சிலரைச் சேர்க்க வேண்டியிருந்தது.

ஏற்ற விகிதத்தில், இனி லாபமும் வரும்தான். ஆனால், 'சின்ன மீனைப் போட்டுப் பெரிய மீனை எடுப்பது போல', முதலீடாகப் பணத்தை முதலில் போட்டால்தானே, பிற்பாடு பெரிய லாபத்தையும் அள்ள முடியும்?

அந்த வகையில், நீதா கொடுத்த அதிகப்படி பணம் முழுவதுமே வெவ்வேறு வகைகளில் செலவு... செலவு என்று சொல்வதற்கில்லை, முதலீடு செய்யப்பட்டிருந்தது! இதில் எதை எடுத்து, அவளிடம் கொடுத்துவிட்டு விலகிக் கொள்வது?




என்ன ஆனாலும், இப்படித் தனியே அவளது வீடு வரை, இனிமேல் செல்லக் கூடாது. போனாலும், மானபரனுடன் தனிமை ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று சைதன்யா மனதுள் இறங்கி வருகையில்தான், நீதாவின் கடிதமும் வந்து சேர்ந்தது.

**மு**தலில் அந்த ரோஜா வண்ணக் கடித உறையைத் தொடுவதற்கே யாருக்கும் பிடிக்கவில்லை. ஆனால் பரிமளா மெல்ல முன்னே வந்து, ''ஸாரி சைது... ஆனால், பணக்கணக்கு பார்த்தாயல்லவா? எச்சரிக்கையோடு நடந்துகொண்டு, இன்னும் கொஞ்ச காலம் இவளை சகித்துத்தான் ஆக வேண்டும் என்று தோன்றுகிறது'' என்றபடி கடித உறையைப் பிரித்து, சைதன்யாவிடம் கொடுத்தாள்.

வழக்கமான செக் ஒன்று உள்ளே இருந்தது, எல்லோருக்குமே ஓரளவு ஆத்திரமூட்டியது. எப்படி வேண்டுமானாலும் நடந்துகொள்ளலாம்... நாய்க்கு எலும்புத் துண்டைப் போடுவதுபோல, ஒரு செக்கை வெட்டிவிட்டால் போதும் என்ற திமிரைக் காட்டுகிறாள்! அந்தப் பணம் தேவைப்படும் நிலையில் அவர்கள் இருந்தது சினத்தை அதிகப்படுத்தியதே தவிர, குறைக்கவில்லை.

வழக்கத்துக்கு மாறாக, இந்தக் கடிதத்தில் நீதா வருத்தம் தெரிவித்திருந்தாள். இதிலுமே, முன்

தினத்துக்காக அவள் மன்னிப்புக் கேட்டுவிடவில்லை. ஆனால், முந்தைய இரவுக்கான ஒரு விளக்கம் இருந்தது.

அவளுக்குத் திடுமென உடம்பு சரியில்லாமல் போய் விட்டதாம். அவளுக்கு ஒவ்வாத ஏதோ இருந்து, அதை அவள் உண்டு விட்டாளோ என்னவோவாம். மற்ற யாரும் அறியாமல், வலியைச் சகித்துக் கொண்டு அறைக்குள் சென்றதுதான், தெரியுமாம். அப்புறமாகக் காலையில்தான் கண்விழித்தாளாம். விழித்த பிறகுதான் சைதன்யா நினைவு வந்ததாம். வீட்டுக்குத் தகவல் தெரிவித்துவிட்டு, பங்களாவிலேயே தங்கி இருப்பாளோ என்று எண்ணித் தேடிப் பார்த்தால் காணோமாம். வேலையாட்களை விசாரித்தால், ஒரு கழுதைக்கும் ஒன்றும் தெரியவில்லையாம். சரி, சைதன்யாதான் முட்டாளில்லையே... ஏதாவது நம்பிக்கையான நிறுவனத்திலிருந்து, வாடகைக் கார் வரவழைத்துப் போயிருப்பாள் என்று ஒருவாறு ஊகித்துக் கொண்டாளாம்.

இந்த இடத்தில் நாலு பேரும், ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர். நீதாவுடைய தாயார் அனுசுயா, சைதன்யாவை அழைத்துவந்ததை மகளிடம் சொல்லவில்லை. ஆனால் ஏன்? மதிப்புக்குரிய மருமகனின் வேண்டுகோளுக்கு இணங்கியே, அந்தப் பெண்மணி மகளிடம் சொல்லவில்லை என்று சைதன்யா கருதினாள்.

ஆனால் வேலையாட்கள், தோழர், தோழிகள் என்று யார் யாரிடமோ விசாரித்த மகள், 'நீங்கள் கூட்டிப்போனீர்களா' என்று பெற்ற தாயிடம் ஏன் கேட்கவே இல்லை! அந்த அளவுக்கு அவர்களிடையே பாசம் பழக்கம் இல்லை என்றுதானே பொருள்?

சிலது நினைவு வர, ''வரும் வழியில் அவர்கள் சொன்னதை வைத்துப் பார்க்கும்போது, விழாவுக்கு வந்த தாயார், மகளிடம் உரியவாறு விடைபெற்றுக் கிளம்பியதாகவும் எனக்குத் தோன்றவில்லைப்பா. நேற்று அங்கே இருந்த நேரத்திலும், தாயிடம் நீதா ஒரு வார்த்தை பேசி நான் பார்க்கவில்லை. அவர்கள் இருந்த பக்கமே, அவள் வரவில்லை!'' என்றாள் சைதன்யா.

"ஆனால், அவர்களைப் பார்த்தால் நல்லவராகத் தெரிகிறது என்றாயில்லையா? அப்படிப்பட்ட

''தலைவரோட தொகுதியை சுற்றிப் பார்த்ததுல...''
''என்ன தெரிஞ்சது?''
''தலைவருக்கு நாலு சின்ன வீடு இருக்குன்னு தெரிஞ்சது!''
- எஸ்.முகம்ம யூசுப், திருநெல்வேலி.



SMS

தாயிடமே நல்லபடி நடக்காதவள் என்றால் யோசனையாகத்தான் இருக்கிறது! ஆனால், வாடிக்கையாளர்களின் சொந்த வாழ்க்கையெல்லாம் ஆராய்ந்து, நாம் தொழில் நடத்த முடியாது! சரி, அது ஒரு பக்கம் இருக்கட்டும். மேலே என்ன எழுதியிருக்கிறாள்?'' என்று கேட்டான் இலியாஸ்.

அந்த வாடகைக் காருக்கான செலவை இரு மடங்காக, அவளது கணக்கில் எழுதிவிட வேண்டுமாம். வலியில் சைதன்யாவை மறந்து போனதற்குத் தண்டனையாம்.

இவ்வளவுக்கும் பிறகே முக்கியமான விஷயம் வந்தது! முன்தினம் அவள் அணிந்திருந்த சேலை, பிளவுஸ் பற்றி அவளுடைய சிநேகிதப் பட்டாளம் கேட்டுக் கேட்டு, அவளது காதுகள் புண்ணாகி விட்டனவாம்!

அதுபற்றி முழு விவரமும் பேசுவதற்காக, அன்று மாலையில் வர முடியுமா என்று நீதா, அந்தக் கடிதத்தில் கேட்டிருந்தாள். ரொம்பவும் பதவிசாக! ஊடுபாவாக எப்போதும் இழையோடும் அதிகாரத் தொனி, அடியோடு காணாமல் போயிருந்தது!

கூடவே கரிசனமாகத் தனியே வரவேண்டாம் என்றும் பெரிதாக எச்சரித்திருந்தாள். இயன்ற வரை பூபாலனைக் கூட அழைத்து வருமாறும் கேட்டிருந்தாள். அவனால் அன்று வர முடியவில்லை என்றால், அவனது வசதியைப் பார்த்துக்கொண்டு, பிறகு ஒரு நாள் சந்தித்துக் கொள்ளலாம் என்றும் குறிப்பிட்டிருந்தாள்!

ஏனென்றால், அந்தவலியையெண்ணி அவளுக்கே பயமாயிருக்கிறதாம். மீண்டும் இதுபோல ஏதேனும் நேர்ந்தாலும், பூபாலன் அவளைப் பொறுப்போடு கூட்டிப் போய்விடுவானாம்!

கடிதத்தில் எழுதியிருப்பது போல, முன் தினத்துக்காக நீதா உண்மையிலேயே வருந்துகிறாள் என்று, அவர்களில் யாருமே நம்பவில்லை. அதே போல, அவளுடைய தோழமை வட்டாரத்துக்காக இவ்வளவு இழைந்து குழைந்து கூப்பிடுவதாகவும் எண்ணத் தயாரில்லை.

காரணம் என்று அவர்கள் நால்வருமாகக் கண்டுபிடித்தது, அவளுக்கு இவர்களது உடைகள் மேலும் மேலும் தேவைப்பட்டன என்பதே... இவர்களுக்கும் அவளது பணம் தேவைப்பட்டது! அதனால் முந்தைய தினத்தை மறந்து, இன்னொரு முயற்சி செய்து பார்ப்பது என்று எல்லோருமாக முடிவு செய்தார்கள்.

''ஒயின்ஷாப்ல திருடி மாட்டிக்கிட்டேன்..!''
''முட்டிக்கு முட்டி தட்டிட்டாங்களா..?''
''இல்ல... 'புட்டிக்கு புட்டி' தட்டிட்டாங்க!''
- எஸ்.ஏ.விஜயலக்ஷ்மி, தஞ்சாவூர்.



SMS

இதில் பெரிய பிரச்னையும் கிடையாது... நீதாவுக்குத் தன்னலமும் திமிரும் கொஞ்சம் அதிகம். மற்றவரைப் பற்றிய அக்கறை கிடையாது என்பது மெய்யே! ஆனால்,நிறையப்பேர் இப்போது அப்படித்தானே இருக்கிறார்கள்! அவர்களைச் சமாளித்துத்தானே வாழ்ந்து, வளர்ந்தாக வேண்டும்!

நிஜமான பிரச்னை என்ன என்றால், நீதாவின் வீடு, நகரத்தை விட்டுத் தொலைதூரத்தில் இருந்ததுதான்! போக்குவரத்து சிரமமாகவும், செலவு மிகுந்ததாகவும், நெடுநேரத்தை வீணாக்குவதாகவும் இருந்தது. கூடவே, இருளில் சைதன்யா தனிமையில் திரும்பி வருவது ஆபத்து என்பதும் கூட!

ஆனால் செலவைப் பாராமல், செல்லும் வாகனத்தை அங்கேயே நிறுத்தி வைத்துக் கொண்டால், திரும்பி வருவதற்கு யாரையும் தொங்க வேண்டாம்; பயப்படவும் வேண்டாம்! அது போல எச்சரிக்கையோடு இருந்து, நீதாவின் வாடிக்கையைத் தொடர வேண்டியதுதான் என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.




நிறுவனத்தை நினைக்கும்போது, சைதன்யாவும் அதே முடிவை ஆமோதிக்கத்தான் வேண்டியிருந்தது! ஆனால், அவளது தடை வேறு! வெளியில் சொல்ல முடியாதது!

இப்போது, மானபரன் என்ன நினைப்பான்? அவனுள் நெருப்பு இருப்பது தெரிந்தும் செல்வதை, அவளே குளிர்காய விரும்பி வந்ததாக எண்ணிவிட்டால் எவ்வளவு கேவலம்? தொண்டையில் முள் சிக்கியதுபோல உள்ளூரத் துன்புற்றபோதும், இதுபற்றி அவள் மற்ற யாரிடமும், எதுவும் சொல்வதாக இல்லை. ஏனெனில், இது அவளது தனிப்பட்ட துன்பம். மற்றவர் மீது திணிக்கக்கூடாதது!

ஆனால் ஒன்று, அவள் இனி துணையில்லாமல் நீதா விலாசத்துக்குப் போகப் போவதில்லை! பூபாலன் எப்போதும் கூட வருவான். வந்தாக வேண்டும். பூபாலனும் அவளும் வேறு மாதிரி இணை என்று குறிப்புக் கொடுத்து நீதா பேசத்தான் செய்வாள். அதுவும், மானபரன் முன்னிலையில் கட்டாயமாகப் பேசுவாள். ஆனாலும், அவனைப் பற்றிய தப்பான ஆசையோடு சைதன்யா அங்கே வரவில்லை என்று மனு புரிந்து கொண்டால், அதுவே போதுமே என்று எண்ணினாள் அவள்!

**'தி**ரும்பிப்பா'ரின் பங்குதாரர்கள் நால்வரும் சேர்ந்தும், சைதன்யா தனியாகவும் நீதா

வின் வாடிக்கை பற்றி பல்வேறு திட்டங்கள் போட்டுக் கொண்டு, சைதன்யாவும் பூபாலனும் நீதா விலாசத்துக்குச் சென்றால், அவள் உடைகளைப் பற்றிப் பேசவே இல்லை. நாகரிகம் நிமித்தமாக, அவளது உடல்நிலை பற்றி விசாரித்தபோது, முந்தின நாள் இரவில், திடீரென்று தனக்கு ஏற்பட்டுவிட்ட உடல் துன்பத்தைப் பற்றிச் சிறிது நேரம் விவரித்தாள். அப்புறம் அவளே பேச்சை மாற்றி, 'திரும்பிப்பா'ரில் தொழில் எப்படி நடக்கிறது என்று ஆர்வமாக விசாரித்தாள்.




இவர்கள் இருவரும் பொதுப்படையாகவே பதில் சொன்னபோதும், அவள் தலையசைத்து வேறு கூறினாள்.

''நிறுவனம் வைத்திருக்கும் இடம், நல்ல இடம். உங்கள் நாலு பேரின் திறமையும் உழைப்பும் ரொம்பப் பிரமாதம்! குறைவாக இருப்பது முதலீடு மட்டும்தான். லட்சக்கணக்கில் பணத்தைப் போட்டு, இன்னும் நிறையப் பேரை வேலைக்கு அமர்த்தி நடத்தினால், லாபம் கூரையைப் பொத்துக்கொண்டு கொட்டும்... என்ன, என் கணிப்பு சரிதானே?''

எவ்வளவு துல்லியமாகக் கணித்திருக்கிறாள் என்று சைதன்யா ஆச்சரியப்பட்டாள்.

"இப்போதும் தொழில் லாபகரமாகத்தான் நடக்கிறது, மேடம்'' என்றான் பூபாலன்.

"இதென்ன லாபம்?'' என்றாள் நீதா. "நாலு பேரும் தனி ஆட்கள். இப்போது சரியாகத்தான் தோன்றும்! நாலு பேருக்கும் குடும்பம் பெருகும்போது? லட்சக்கணக்கில் பணத்தைப் போட்டு, உற்பத்தியைப் பல மடங்கு பெருக்கி, டிவி சேனல்களிலும், பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்து நடத்தினால், சென்னையில் மட்டுமல்ல... இந்தியாவிலேயே பெரிய நிறுவனம் ஆகிவிடாதா?'' என்று கேட்டாள்.

"நடக்கிறதைப் பேசுங்கள், மேடம்!'' என்றான் பூபாலன்.

"நடப்பதுதான்...பணத்தை நான் தருகிறேன். தொழிலை வளர்ப்பதற்காக, உங்களுக்கு வட்டியில்லாக் கடனாக இருபத்தைந்து லட்ச ரூபாய் தருகிறேன்!''

நம்ப மாட்டாத திகைப்புடன், விழிகள் அகல இருவரும் பார்க்கவும், "விளையாட்டுப் பேச்சில்லை. நிச்சயமாகத் தருவேன், ஒரு நிபந்தனையோடு! அதுகூட எளிதுதான். குறிப்பாக உங்களுக்கு... நீங்கள் இருவரும் மணந்துகொள்ள வேண்டும். அவ்வளவே!'' என்றாள் நீதா, புன்னகை பரந்து விரிய!

(தொடரும்)

நீதாபரன் சொன்ன விஷயம் பெரியது. அவர்களது ‘திரும்பிப்பார்’ நிறுவனத்தின் வேகமான வளர்ச்சிக்கு, அப்போது மிகவும் தேவைப்பட்ட பணம் பற்றியது! அவர்கள் யாருமே கனவு கூடக் காணாத அளவுக்குப் பெரியதாக அவள் சொன்ன தொகை, அதை வைத்து என்னென்ன வேலைகளை இலகுவாக முடிக்க லாம் என்பதெல்லாம் பற்றிய சிறு யோசனைகூட, சைதன்யா வுக்கு வரவில்லை!

எப்போதோ படித்த கதை ஒன்றில், ‘மேலும் மேலும் சிரித்தாலும், அவன் வில்லனே’ என்று படித்ததுதான் நினைவு வந்தது! நீதாவின் சிரிப்பும் அப்படித்தானா?



போரடித்துக் கிடக்கும் பணக்காரியின் பொழுதுபோக்கா... அல்லது மூன்று ஆண்டுகளாக ஒதுங்கியிருந்தவளை இழுத்து வந்து, பெரும் பணத்தைக் கொடுத்து, இல்லாத தொடர்பை அறுக்கிற அசட்டுத்தனமா?

பூபாலன் வேறு பிழை கண்டான் போலும். ''திருமணத்தைப் போய், 'எளிது' என்கிறீர்களே! ஒருவரின் வாழ்க்கையையே அடியோடு மாற்றக்கூடியது. எவ்வளவு முக்கியமானது!'' என்றான் அவன்.

''வாழ்க்கையையே மாற்றக்கூடியதுதான். ஆனால் உங்களுக்கு, அதாவது உங்கள் இருவருக்கும் அது எளிது தானே?'' என்று குறுநகை மாறாமலே கேட்டாள் நீதா.

''அதெப்படி?''

''இப்போதே நாள் முழுவதும் இருவரும் சேர்ந்தே இருக்கிறீர்கள். மணமானதும், இரவும் சேர்ந்து இருப்பீர்கள்! அவ்வளவுதானே, வேறுபாடு?'' என்று கேட்டாள் நீதா. ''யார், என்ன என்று ஒன்றும் தெரியாமல், புதியவராக ஒருவரை மணந்து, அவரோடு வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்வது எவ்வளவு சிரமம் தெரியுமா? கும்மிருட்டில் வழி தேடுவது போலத்தான். எங்கே போய் எத்தனை முறை முட்டிக் கொள்ள நேருமோ? அதெல்லாம் இல்லாமல், உங்கள் இருவருக்கும், அடுத்தவர் குணம் அத்துப்படி எனும்போது, அதோடு பணமும் வரும் என்றால், இந்த வாய்ப்பை விடுவது... தப்பாக எடுத்துக் கொள்ள வேண்டாம், முட்டாள்தனமாகத் தெரியவில்லை? நல்ல முடிவைச் சீக்கிரமாக எடுங்கள்!'' என்று முடித்தாள்.

''சட்டென பதில் சொல்கிற விஷயம் இது அல்ல, மேடம்!'' என்றான் பூபாலன் அப்போதும்.

''யோசியுங்கள். ஆனால் காலத்தைக் கடத்தினால், உங்கள் முன்னேற்றம்தான் வீணாகத் தடைபட்டு நிற்கும்!''

இவ்வளவு சொல்கிறாளே..!

இப்படி ஓர் அதிரடி குண்டு போட்டு, இருவரிடமும் அதன் எதிரொலியைப் பார்த்து ரசித்துவிட்டு, 'எல்லாம் சும்மா' என்று சொல்வாள் என சைதன்யா எண்ணினாள். ஆனால், இது நீதாவின் வெறும் அசட்டுத்தனம்தானா என்று யோசிக்கும்போதே, குரங்கு மனம், அது தொடர்பாக இன்



**SMS**

''எல்லோரும் 'கெமிஸ்ட்ரி' உண்டாயிருச்சுன்னு சொல்வாங்க... நீ அந்தப் பொண்ணு கூட 'உயிரியல்' உண்டாயிருச்சுன்னு சொல்றியே?''

''என் குழந்தை அவ வயிற்றுல வளருதே!''

**- பிரியதர்ஷன், சேலம்.**

னோர் இடம் தாவியது.

மனுவை மணந்தபின், அவனோடு பழக நீதா மிகவும் சங்கடப்பட்டாளோ? ஆனால் அவன் நல்லவன் ஆயிற்றே! பெயருக்கு ஏற்றபடி, அவனுக்குத் தன்மானம் அதிகம் உண்டு. அதை குறையாகக் கூற முடியாதே! சொல்லப்போனால் அந்தத் தன்மானமே அவனுக்கு கம்பீரம் தருவதாயிற்றே!

ஒருவேளை... அவளை நினைத்து, மனைவியிடம் சரியாக நடக்காமல்... இல்லை, இந்த மாதிரி நினைப்பது கூடாது என்பது, சைதன்யா முன்பே முடிவு செய்த விஷயம்! அதோடு, மானபரனும் எந்தப் பொறுப்பும் ஏற்றுவிட்டால், அதை அரைகுறையாக நடத்துகிறவன் அல்ல.

எனவே இந்த முயற்சி, நீதாவின் சொந்த வாழ்வைப் பற்றிய விளக்கமாக இராது! ஆனால், ஏன் இவ்வளவு வற்புறுத்துகிறாள்?

''என்ன சைதன்யா, ஒன்றுமே பேசவில்லை? மௌனம் சம்மதம் என்று அர்த்தமா?'' – கேலி போலக் கேட்டாலும், கண்ணில் ஆவலை சைதன்யாவால் காண முடிந்தது!

25 லட்சம், குச்சியில் கட்டிய 'கேரட்'டா? ஆனால் நான் ஒன்றும் முட்டாள் குதிரையில்லை என்று எண்ணியவாறே, "இந்தப் பணத்தை நீங்கள் எங்களுக்கு ஏன் தருகிறீர்கள்?'' என்று விளக்கம் கேட்டாள் சைதன்யா.

இந்தக் கேள்வி நீதா எதிர்பார்த்தது தான் என்பது, தயக்கமின்றி வந்த பதிலில் தெரிந்தது. அதிர்ச்சி வைத்தியம் செய்கிறவள், அதன் பக்க விளைவுகளையும் யோசித்துத்தானே இருப்பாள்?

"வேறென்ன? உங்கள் இருவரையும் எனக்குப் பிடித்திருக்கிறது! உங்கள் தொழில் திறமையும் பிரமாதம்தான். என்னிடம் பணமும் இருக்கும்போது,



**SMS**

''பெத்தவங்கதான் கல்யாணத்துக்கு சம்மதிச்சுட்டாங்களே... அப்புறம் என்னங்க பிரச்னை?''

''நான் பெத்ததுங்க இன்னும் சம்மதிக்கலையே!''

**- வி.சாரதி டேச்சு, சென்னை-5.**

ஏன் கொடுக்க மாட்டேன்?''

"தாராளமாகக் கொடுக்கலாம். பணமும் இருந்து, கொடுக்கிற மனமும் இருந்தால் எவ்வளவு வேண்டுமானாலும் அள்ளிக் கொடுக்கலாம்தான்! ஆனால் எனக்குப் புரியாதது, திருமணத்துக்கும் தொழிலுக்கும் ஏன் முடிச்சிடுகிறீர்கள் என்பதுதான்!'' என்றாள் சைதன்யா.

இந்தக் கேள்விக்கும் நீதாவிடம் பதில் தயாராகவே இருந்தது. "என் பணத்துக்கு உத்தரவாதம்!'' என்றாள் அவள், இலகுவாகச் சாய்ந்து.

"புரியவில்லை?''

''நீங்கள் சேர்ந்தே இருப்பீர்கள், சேர்ந்து தொழிலைத் தொடர்ந்து செய்வீர்கள் என்று நம்பித்தான் பணத்தைத் தருவதாக இருக்கிறேன். நீங்களும் ஆளுக்கு ஒரு பக்கம் பிய்த்துக் கொண்டு ஓடிவிட்டால், நான் பணத்தை யாரிடம் கேட்பேன்?''

மற்ற இருவரும் திகைத்து, ஒருவரை ஒருவர் பார்த்தனர். "விட்டால் எங்கள் இருவரையுமே, ஒருவரை ஒருவர் சந்தேகிக்கும்படிச் செய்து விடுவீர்கள் போலிருக்கிறதே மிசஸ் நீதா! நாங்கள் நாலு பேருமே, ஒரே மாதிரி நம்பிக்கைக்கு உரியவர்கள்தான். ஏமாற்றுகிற ரகம் அல்ல!'' என்று சற்று அழுத்தமான குரலில் சைதன்யா கூறினாள்.

SMS

''என்னது, கபாலிக்கு சீட் குடுத்திட்டாங்களா... எப்படி?''

''ரெகுலரா மாமூல் தர்றவனுக்கு ஸ்டேஷன்ல உக்கார ஒரு 'சீட்' தரக்கூடாதா?''

**- பா.து.பிரகாஷ், தஞ்சாவூர்.**

நீதா லேசாக உதட்டைப் பிதுக்கித் தோளைக் குலுக்கியதோடு சரி!

"மெய்யாகவே அப்படித்தான், நீதா மேடம். சொல்லப்போனால், எங்களை விடவும் இலியாசும் பரிமளாவும் ரொம்ப சுத்தம்! நானாவது ஒரு காபி, டீக்காக வேணும் பணம் எடுப்பேன். அவர்கள், அதுவும் மாட்டார்கள். சைதன்யா முதலிலேயே கேட்டது ரொம்பச் சரி. அவள் அப்போதே சொன்னது போல, மாற்றி மாற்றி அவர்களும் வந்து பழகியிருந்தால், நீங்களே அதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள்'' என்றான் பூபாலன்.

அவனது பேச்சின் இடையே நீதாவிடம் தெரிந்த மாற்றத்தில், பூபாலன் சும்மா இருந்திருக்க வேண்டுமோ என்று சைதன்யாவுக்குத் தோன்றியது.

அவ்வளவு விறைப்புடன் நீதா நிமிர்ந்து அமர்ந்து, "ஓ! அப்படியானால், தனக்குப் பதிலாக மற்றவர்களை இங்கே வரச் சொல்லி, சைதன்யா முன்பே கேட்டாளா? அப்போதேயா? ஏன் சைதன்யா, இப்போது உனக்கு இங்கே யார் மீது என்ன கோபம்? என் மீதா? பரன் மீதா?'' என்று ஒரு வேகத்துடன் விசாரித்தாள்.

"யார் மீதும் இல்லை. சற்று முன் குறைப்பட்டீர்களே, அதற்கு இடம் இல்லாமல், எல்லோருமே பழகிக் கொள்ளலாமே என்று, ஒரு யோசனை சொன்னேன். ஆனால்...'' என்றவளின் பேச்சில் குறுக்கிடப் போன பூபாலனை லேசாகப் பார்த்துவிட்டு, "இலியாஸ்... எங்கள் இன்னொரு பங்குதாரர். அவருக்கு வேறு ஒரு பெரிய வேலை வந்துவிட்டதால், அது நடவாது போயிற்று!''

என்றாள் சைதன்யா, சற்று அலுத்த குரலில்.

"ஆனால் பண விஷயத்தில் மற்றவர்களின் சிபாரிசை ஏற்றுக்கொள்ள முடியாது சைதன்யா. ஆளாளுக்குச் சொல்வதை எல்லாம் கேட்டால், அப்புறம் கழுதையைச் சுமந்த அப்பா மகன் கதைதான் ஆகும்! இதுபோன்ற முக்கிய விஷயங்களில், நம் மனம்தான் சொல்ல வேண்டும்! என் மனம் சொன்னதைச் சொல்லிவிட்டேன். அதில் மாற்றமே இராது! இதற்கு மேல், முடிவு செய்ய வேண்டியது நீங்கள்தான். அனாவசியமாக நாட்களை இழுத்தடிக்காதீர்கள். யாருக்காகவும் காத்திருப்பது எனக்குப் பிடிக்காது. என் மனமே மாறிவிடக் கூடும்... சொல்லிவிட்டேன்!'' என்று செல்லக் கண்டிப்பு மாதிரியாக, ஒரு மிரட்டலோடு முடித்தாள் நீதா.

அவளை நேராகப் பார்த்துவிட்டு, ''உங்கள் சினேகிதிகள் உங்கள் உடை பற்றிக் கேட்டார்கள் என்று எழுதியிருந்தீர்களே'' என்று பேச்சையே மாற்றினாள் சைதன்யா.

நீதாவின் முகம் மாறிய விதத்தில், இப்போது பூபாலன் குறுக்கே புகுந்தான். "எங்களைப் பொறுத்த வரை இது ரொம்பப் பெரிய விஷயம், மேடம்! அதனால் யோசிக்கக் கொஞ்சம் அவகாசம் வேண்டும்! அதுவும், தொழிலில் வெற்றி பெறுமுன், திருமணம், குடும்பம் என்றெல்லாம் நினைக்கவே கூடாது என்று எல்லோருமே இருந்தோமா... நீங்கள் திடுமெனக் கேட்டதும் குழம்பி... நாங்கள் யோசித்துச் சொல்கிறோமே!'' என்று அவளைக் குளிர வைக்க முயன்றான்.

முழுதாக இல்லாவிட்டாலும், ஓரளவு பலன் இருந்தது. சிறு அமைதியின் பின், "சொன்னேனே, அதிகத் தாமதம் பண்ணாமல், என் மனம் மாறுமுன் முடிவு பண்ணுங்கள்'' என்று சைதன்யாவைப் பார்த்தாள். "இப்போது, உன் கேள்விக்குப் பதில். என் சினேகிதிகள் எல்லோருக்கும் ரொம்ப அசதியாக இருக்கிறதாம். நேற்று, எல்லாமே அதிகமாகிப் போயிற்று போல! கிளம்பி வருவது என்றால் கஷ்டம். இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம் என்றார்கள்... அல்லது, எல்லோரும் சேரும் விதமாக ஒரு... அது எப்படி, என்றைக்கு முடியும் என்று யோசித்துப் பிறகு சொல்கிறேனே! இப்போது போய் விட்டு, இன்னொரு நாள் வாருங்கள்''

**SMS**

''போலீஸ் இல்லாத ஊர்ல திருடக்கூடாதுன்னு ஏன் சொல்றே கபாலி..?''

''பின்னே என்ன ஏட்டய்யா... திருடும்போது மாட்டிக்கிட்டா யார் வந்து காப்பாத்துவாங்க!''

**- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி.**

என்று சோபாவில் கண் மூடிச் சாய்ந்தாள் நீதா.

இதற்கு மேல், வெளியேறுவது தவிர வேறு என்ன செய்ய முடியும்?

அதிகமாக ரோஷம் பார்க்கக் கூடாது என்று முதலிலேயே எல்லோருமாகப் பேசியது நினைவு வர, ஃபோல்டர், பை எல்லாவற்றையும் மிக மெதுவாகவே சேகரித்தபோதும், நீதா கண்ணைத் திறந்து அவர்களைப் பார்ப்பதாகவே இல்லை! வேறு வழியின்றி, ''வருகிறோம்'' என்று முணுமுணுத்துவிட்டு சைதன்யாவும் பூபாலனும் கிளம்பினர்.

வாயிலுக்குச் செல்லும் வரை அதற்கும் பதில் இல்லாதுபோகவும், சைதன்யா



**SMS**

''என் மனைவியே காபி போடுறா... சமைக்கறா... சத்தமா பாட்டு வேற பாடறா...''

''ஏன் இப்படிச் செய்யறாங்க?''

''வந்திருக்கற விருந்தாளியை சீக்கிரமா விரட்டத்தான்!''

**- எஸ்.ராமன், சென்னை-17.**

தயக்கத்துடன் நின்றாள். பூபாலன் கேள்வியாக நோக்க, ''மிசஸ் நீதாவுக்கு உடம்பு ஏதும் சரியில்லையோ...'' என்று கிசுகிசுப்பாக இழுத்தாள் சைதன்யா.

திரும்பிப் பார்த்துவிட்டு, சைதன்யாவின் கையைப் பிடித்து வெளியே இழுத்துப் போய் நிறுத்தினான் பூபாலன். "மூச்சு நன்றாகத்தான் வருகிறது. பணத்திமிர் தவிர, வேறு சுகக்கேடு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இந்தம்மாவுடைய சினேகிதிகளைப் போல, இவளுக்கும் நேற்றைய விழாவின் பாதிப்பு இருக்கத்தானே செய்யும்? எல்லாமே மொடாக்குடியா?'' என்று கேட்டான் அவன்.

நீதா சோர்ந்து கிடந்த தோற்றம், இன்னமும் சைதன்யாவை உறுத்தியது. மனுவுக்கு போன் பண்ணி இதைச் சொல்லிவிட்டால் கூட நிம்மதியாக இருக்கும்! ஆனால், அதற்குரிய விளக்கத்தைப் பூபாலிடம் சொல்ல முடியாது. அதைவிடவும் மோசம், அந்த விவரம் நீதாவுக்குத் தெரிவது!

செய்வதறியாது அவள் தயக்கத்துடன் நிற்கும் போதே, ''ஏய்...'' என்று கனத்த முரட்டுக் குரலில் நீதா யாரையோ அழைப்பது கேட்டது! "இனியேனும் போகலாமா?'' என்று நடந்த பூபாலனோடு மறுபேச்சின்றி சைதன்யாவும் கிளம்பினாள்.

இருவரும் அவரவர் யோசனையில் முழுகியிருக்க, கிட்டத்தட்ட வழி முழுவதுமே அமைதியில் கழிந்தது. நிறுவனத்துக்கான சாலை நெருங்கியபோது, "ஏன் சைதன்யா, அவ்வளவு பணம் வரும் என்கிறபோது, அந்த நீதா சொன்னது போலச் செய்வோமா?'' என்று மெதுவாகக் கேட்டு, அவளைப் பெரிதாக அதிர வைத்தான் பூபாலன்!

(தொடரும்)



# கண்டநாள் முதலாய் 19

**மனம் மயக்கும் மலர் தொடர்**

சற்று நேரம் சைதன்யாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை மரத்துப் போய்விட்ட மாதிரி தோன்றியது. சற்று உணர்வு வந்ததுமே பூபாலனை வெறித்துப் பார்த்தாள் அவள்.

முகம் சிவந்தபோதும் லேசாகத் தோளைக் குலுக்கி, ''இது என்ன முழி, சைது? நல்ல விஷயம்தானே கேட்டேன்? என்னவோ, யாரையோ, கொலை செய்யச் சொன்ன மாதிரிப் பார்க்கிறாய்!'' என்றான் பூபாலன்.

''வேடிக்கை பண்ணுவதற்காகவே என்றாலும், என்னதான் உளறுவது என்று இல்லையா? தயவுபண்ணி இதுபோலப் பேச வேண்டாம், பூபால்'' என்று கோபமாகக் கூறினாள்.

**ரமணிசந்திரன்**

''கபாலிக்கு நாம அதிகமா சலுகை கொடுத்ததை தப்பா பயன்படுத்தறானா... எப்படி?''

''அவன் எங்கே, எப்போ திருடப் போகப் போறான்ங்கறதை டிரெய்லரா எடுத்து ஸ்டேஷனுக்கு அனுப்பறான் சார்!''




''வேடிக்கை இல்லை சைதன்யா. உண்மையாகத்தான் சொன்னேன்'' என்றான் அவன்.

'கல்யாணம் செய்வோமா' என்று நேரடியாக அந்த வார்த்தையைச் சொல்ல வாய்கூட வரவில்லையே! இவன் உண்மையாகத்தான் சொன்னானாம்! சைதன்யா ஏளனமாக எண்ணுகையிலேயே, பூபாலன் தொடர்ந்து பேசினான். "பைசா கணக்குப் பார்த்துச் சிக்கனமாகச் செலவு பண்ண வேண்டியிருக்கிறது! இப்போது இந்த அடையாறு ஷாப் இணைப்புக் கிடைத்ததற்கு நிறையப் பணம் இருந்தால், முதலீடு பண்ணி ஒரே ஆண்டில் எங்கேயோ போய்விடலாம்...''

"எங்கே... சந்திர மண்டலத்துக்கா? அங்கே போய் மூச்சு முட்டிச் சாவதற்கு இங்கேயே இருக்கலாம். ஆனால், ஒன்று புரியவில்லையே! மனோகரி விஷயம் என்ன?'' என்று கேட்டாள் அவள்.

திரும்பி கீழ்க்கண்ணால் அவளைப் பார்த்துவிட்டு, ''இதே போல நானும் கேட்கலாம்தான். ஆனால் நாகரிகம் கருதிக் கேட்க மாட்டேன்!'' என்று பதிலடி கொடுத்தான் பூபாலன்.

ஒரு கணம் சைதன்யாவுக்கு வாயடைத்துப் போயிற்று! ஆனால் உடனேயே சமாளித்து, ''பெரிய நாகரிகவாதிதான். அதனால்தான் பணத்துக்காக மணந்துகொள்ளலாமா என்று கேட்டாயாக்கும்?'' என்று கேட்டாள் அவள்.

மிகச்சிறிய ஒரு மௌனத்தின் பின், "ஸாரி!'' என்ற பூபாலன், மேலும் தொடர்ந்தான். "ஆனால், ஒரு விவரம் சொல்கிறேன், கேட்டுக்கொள். மனோகரி என்னை மணக்க மறுத்துவிட்டாள். காரணம் தெரியுமா? சின்னக்கிருஷ்ணனுக்கு அது நல்லது இல்லையாம். என் பிள்ளையாகவே பார்ப்பேன் என்றால், அது சரி வராதாம்! அதோடு...''

"அதோடு?''

"அவளுக்கு அந்த மாதிரி எண்ணமே என் மீது கிடையாதாம்! எப்படி இருக்கிறது? சின்னுவுக்கு என்னைவிட நல்ல தகப்பன் எப்படிக் கிடைப்பான் என்று புரியாமல் இப்படிச் சாதிக்கிறாள்...''

வெகு சமீபத்தில்தான் இது நேர்ந்திருக்க வேண்டும். குரலில் வலி அப்படியே தெரிந்தது! "நான் வேண்டுமானால் மனோவிடம் பேசிப் பார்க்கட்டுமா?'' என்று மெல்லக் கேட்டாள் சைதன்யா.

“வேண்டாம். பயன் இராது என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். அதனால்தான், உன்னிடம் இந்தப் பேச்சை நான் எடுத்ததே! நம் இருவருக்கும் விரும்பியது கிடைக்க வழியில்லை எனும் போது, இந்தப் பணத்தைக் கொண்டு தொழிலையாவது வளர்க்கலாமே என்று எண்ணித் தான்...''

மறுப்பாகத் தலையசைத்தாள் அவள். “அது சரிவராது பூபால். எனக்கு முன் பிறக்காத என் அண்ணனாகவே உன்னை நினைக்கிறேன். உன் மனதும் அப்படித் தான் என்று எனக்குத்...''

“கிடையவே கிடையாதே!'' என்று குறுக்கிட்டவனை அதிர்ந்து நோக்கினாள் அவள்.

“நீ பெண், அதிலும் என்னினும் சின்னவள் என்பதால், உன்னை நான் தங்கையாகத்தான் கருதுவது! அண்ணனாக அல்லவே அல்ல!'' என்று எடுப்பாக நிமிர்ந்தமர்ந்து விளக்கினான் அவன்!

''கபாலிக்கு பெண் போலீஸ் மேல பிரியம் அதிகம்னு எப்படிச் சொல்றே..?''

''மாமூல் கொடுக்கறதோட மேக்கப் அலவன்சும் தர்றானே..!''

- பெ.பாண்டியன், காரைக்குடி.



SMS

என்ன இது என்று, ஒரு கணம் திடுக்குற்றுக் கவலையுடன் பார்த்தவளுக்குச் சிரிப்புடன் எரிச்சலும் வரவே, “உன் போலக் குட்டிப் பையன்களுக்கு எல்லாம், எதையும் விளக்குவதே பெரும் பாடுப்பா!'' என்று ஒரு குட்டு வைத்து முடித்தாள் சைதன்யா.

**வ**ழக்கம்போலவே நாலு பேரும் சேர்ந்து நீதாவின் இந்த தாராள தர்மம் பற்றிக் கவனமாக ஆராய்ந்தனர். “நமக்கு நிறையப் பணம் தேவைதான். ஆனால் உங்கள் இருவருக்கும் அந்த எண்ணம் சிறிதும் இல்லை எனும் போது, இதை ஏற்பது அநாகரிகம்! எந்த லாட்டரியிலும் பணம் விழும் என்று எதிர்பார்த்து, நாம் நால்வரும் இந்தத் தொழிலைத் தொடங்கவில்லை. இந்தப் பணமும் லாட்டரிப் பணமே... பரிசு விழவில்லை என்று கருதி, நம் உழைப்பிலேயே வானம் எட்டுவோம்!'' என்று பரிமளா உறுதியான குரலில் கூறி முடித்தபோது, மற்ற மூவருமே கைதட்டினர்.

ஆனாலும், “இந்த முடிவை ஆதரிக்கவில்லை என்று நினைக்கக்கூடாது. ஆனால் அந்த நீதாவுக்குக் கோபம் வந்து, உங்கள் சங்காத்தமே வேண்டாம் என்று விட்டால்? அவள் கொஞ்சம், க்ஷணப் பித்தம் க்ஷண சித்தம் என்கிற மாதிரி தினுசு! எதையாவது செய்த பிறகும், யோசிக்கமாட்

டேன் என்கிற வகை! வாடிக்கையும் போய், கொடுத்த பணத்தையும் திருப்பித் தர வேண்டி இருக்குமே!'' என்று எச்சரிக்கை செய்தான் பூபாலன்.

"நீ சொல்வது போல ஆகாது பூபால்!'' என்றான் இலியாஸ். "மிசஸ் நீதாவுக்கு இந்த மாதிரி ஒரு யோசனை வந்ததன் காரணமே, நம் 'திரும்பிப்பா'ரின் உடைகள், அவளுக்குத் தடையின்றி தனிக் கவனத்துடன் தயாரிக்கப்பட வேண்டும் என்பதற்காகத்தான்! அதனால் ஒரேயடியாக நம்மை விட்டுவிட மாட்டாள்!'' என்றான் அவன் உறுதியாக.

"அவள் யோசித்துச் செயல்படுகிறவள் இல்லை என்றேனே! அதிலும், அவள் சொல்லுக்கு மறுப்பு என்றால் வெறியே பிடிக்கிறது!''

சைதன்யாவும் ஒப்பித் தலையாட்டி, "அதனால் அவளது பணத்தைத் திருப்புவதற்கும், நாம் தயாராகத்தான் இருக்க வேண்டும் பரிமளாக்கா!'' என்று கவலையுடன் கூறினாள்.

"அப்படி நேர்ந்தாலும் சமாளிப்போம், சைது! அடையாறு ஷாப் வேலைக்காக பாங்கில் ஓ.டி. கேட்டதற்குத் தருவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்தப் பணத்தை நீதாவுக்குக் கொடுப்போம். இன்னும் நமக்கு மற்ற வருமானமும் இருக்கிறதில்லையா? எப்படியாவது சமாளிப்போம்'' என்று அவள் கூறவும், நன்றியால் சைதன்யாவின் நெஞ்சு நிறைந்தது!

''மன்னர் ஏன் கடுப்பாக இருக்கிறார்..?''

''அவர் புறமுதுகிட்டு ஓடி வரும் பாதையில் யாரோ, 'காலை நம்பி வாழாதே; வாளை நம்பி வாழ்'னு பேனர் கட்டியிருந்தாங்களாம் !''

*- பிரியதர்ஷன், சேலம்.*




சொந்த வாழ்வில் மற்ற யாரும் அதிகம் வற்புறுத்த மாட்டார்கள் என்ற நம்பிக்கை சைதன்யாவுக்கு இருந்தபோதும், 'இவ்வளவு பணம் கிடைப்பதை விடுவதா' என்று யாருக்கேனும் தோன்றக் கூடுமோ என்று சிறு கலக்கம் அவளுக்கு இருக்கத்தான் செய்தது! பூபாலனே அதுபோல சொல்லத்தானே செய்தான்?

ஆனால் மற்ற இருவருமே, அதிலும் நிறுவனப் பணக்கணக்கை எப்போதும் மனதில் வைத்திருக்கும் பரிமளாவுமே, அப்படி மறைமுகமாகக் கூடப் பேசாதது, அவளுக்கு ஆறுதலை அளித்தது. கணக்கு நோட்டைப் பார்த்துக் கொண்டிருந்த பரிமளாவின் கையைப் பற்றி அவள், "நன்றிக்கா!'' என்றபோது, மற்றவள் ஆச்சரியமாக நோக்கி, "என்னப்பா திடீரென்று?'' என்று வினவினாள்.

''அது வந்துக்கா... நமக்கு இருக்கும் பண நெருக்கடியில்,

இதை இந்த மாதிரி இலகுவாக எடுத்துக் கொண்டதற்கு!'' என்றாள் சின்னவள்.

"இந்த மாதிரித் தரம் கெட்ட, கொச்சைத்தனமான நிபந்தனையை இன்னொரு தரம் நினைத்துப் பார்ப்பதுகூட நேர விரயம்... விடு!'' என்றாள் பரிமளா தன் வழக்கமான வேகத்துடன்.

சட்டென அவள் கையை விட்டுவிட்டு, "ஐயோக்கா... இந்தப் பேச்சைப் பேசி, இனியும் உங்கள் நேரத்தை வீணடிக்க எனக்குத் தைரியமில்லை! இதோ நிறுத்திவிட்டேன்!'' என்று சைதன்யா வேடிக்கையாகக் கை கூப்பிக் கும்பிடவும், இருவருக்குமே சிரிப்பு வந்துவிட, நகை முகத்துடனேயே, அவரவர் வேலையைப் பார்க்கச் சென்றனர்.

**நீ**தாவின் நிபந்தனைக்கான பதிலைச் சீக்கிரமாகத் தெரிவித்துவிட வேண்டும் என்று சைதன்யா கருதினாள். விஷயத்தைச் சொல்லும்போது, நீதா ஆத்திரப்படுவாள் என்பது அவளுக்கு நிச்சயமே.

அந்த மாதிரி நினைக்கக்கூட வழியில்லாமல், இருவரும் உடன்பிறந்தாரைப் போலப் பழகுவதைப் பற்றிப் பூபாலனும் சேர்ந்து எடுத்துக் கூறினால் ஒருவேளை ஒப்புக்கொள்வாளோ என்று தோன்றவும், அவனைக் கூப்பிட்டுப் பேசினாள் அவள். ஆனால், அவன் தயங்கினான். எடுத்தேன், கவிழ்த்தேன் என்று இல்லாமல், சற்று ஆறப்போட்டு, மெதுவாகச் சொல்லலாமே என்பது அவனது கருத்தாக இருந்தது.



"அதிர்ஷ்டவசமாக நீதாவுக்கே இந்த ஆர்வம் குறைந்து போய்விடக் கூடும். வேறு ஏதாவது விஷயம் கிடைத்தால், இதை அவள் மறந்துகூடப் போய்விடலாம். இப்போது நாமாகப் பேசப் போக, என் சொல்லை மறுப்பதா என்று நீதா தாண்டவம் ஆடத் தொடங்கிவிட்டால் வம்புதானே'' என்றான் அவன்.

ஆனால் பூபாலின் இந்த லாஜிக், சைதன்யாவுக்குப் பிடிக்கவில்லை. அந்த மாதிரி ஓர் இணைப்பு நடக்கக்கூடும் என்ற எண்ணத்தோடு ஒருவர்... அதிலும் நீதா இருப்பதை, அவளால் சற்றும் பொறுக்க முடியவில்லை. எனவே பூபால் அருகில் இருக்கும்போதே, நீதாவின் செல்லுக்குத் தொடர்பு கொண்டு விட்டாள்.

தன் பணத்தின் வலிமை பற்றி நீதாவுக்கு இருந்த பெரும் நம்பிக்கை, சைதன்யாவை முந்திக்

"மன்னருக்கு எதிரிகளை விட மகாராணி மேல்தான் அதிக பயம் என்று எப்படிச் சொல்கிறீர்கள் அமைச்சரே?''

"அந்தப்புரத்தில் கூட பதுங்கு குழிகள் வேணும்ங்கறாரே..!''

- பெ.பாண்டியன், காரைக்குடி.

**SMS**



கொண்டு அவள் பேசிய விதத்திலேயே தெரிந்தது. அவ்வளவு வேகம் நீதாவின் பேச்சில்!

“என்ன... போய்ச் சேரும் முன்பாகவே முடிவு செய்து விட்டீர்களா? நீ கெட்டிக்காரிதான்! சும்மா தாலியைக் கட்டிக் கல்யாணத்தை முடித்து விடலாம்! இங்கே வரும் வழியில் ஒரு பிள்ளையார் கோயிலில் எளிதாக...'' என்று அவள் மடமடவென திட்டமிடவும், பூபாலன் சொன்னது போல சற்று ஆறப்போட்டிருக்க வேண்டுமா என்று சைதன்யாவுக்குமே ஒரு கணம் தோன்றிவிட்டது.

ஆனால், இந்த எண்ணத்தை வளர விடுவது நல்லதல்லவே! பிடிவாதமாக நீதாவின் பேச்சில் குறுக்கிட்டு, தங்கள் எதிர்மறை முடிவைச் சற்று அழுத்தமாகவே சொல்லி முடித்துவிட்டு, ஒரு காட்டுக் கத்தலுக்காகச் சைதன்யா காத்திருந்தாள்.

ஆனால், “என்னது?'' என்று கடுங்கோபத்துடன் செல்லை எறிந்ததற்கு மேல், அப்போதைக்கு நீதாவின் செல் தொடர்பு அறுந்து போயிற்று! செல்போன் எங்கோ பலமாக மோதிய சத்தம்தான் சைதன்யாவுக்குக் கடைசியாகக் கேட்டது. நீதா அதை வீசி எறிந்த வேகத்தில் எதில் மோதி, எதையெதை உடைத்து, எப்படி விழுந்ததோ?

செல்போன் உடைந்திருக்கும் என்பது எல்லோரது கருத்தும். “அந்த மாடல் விலை எழுபதாயிரம்ப்பா!'' என்று பூபால் சொன்னதும் எல்லோருக்குமே சற்றுக் கலக்கம்தான். அந்த மாதிரி செல்லையே தூக்கி வீசியவள், அடுத்து அவர்களைத் தூக்கி எறிய ஏன் யோசிக்கப் போகிறாள்?

இந்த விஷயம் இதோடு முடியவில்லை. சைதன்யாவின் செல்போன் குரல் எழுப்ப, திரையில் வந்த எண் வேறொரு விதமாக மனதைக் கலக்க, தனியே சென்று பேசினாள் அவள். “என்ன விஷயம்?''

‘‘தெரியாது? வாழ்த்துகள் சைதன்யா, வாழ்த்துகள்! திருமணம் நடக்கப் போகிறதாமே! குறிக்கோளை அடையப் போவதற்காக, உனக்கு வாழ்த்துகள். ஆனால் பூபாலனுக்கு..? இரங்கல் தெரிவிக்கலாமா?'' – மானபரனின் குரலில் ஏளனம், எகத்தாளம், வெறுப்பு, கோபம் எல்லாம் ஒன்றின் மேல் ஒன்றாக முட்டி மோதிக்கொண்டு எகிறித் தெறித்தன!

(தொடரும்)



**SMS**

‘‘கட்சி ஆபீசுக்குள்ள நுழைஞ்ச திருடனை பிடிச்சி அடி அடின்னு அடிச்சிட்டேன்..!''

‘‘ஏன்யா அவசரப்பட்டே... வந்தவன் ஒருவேளை தலைவரோட பால்ய சிநேகிதனாகூட இருந்திருக்க வாய்ப்பிருக்கில்ல !''

- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.

ரமணிசந்திரன்

மனம் மயக்கும் மலர் தொடர்

20

# கண்ட நாள் முதலாய்...

பாராயணம் போல, அவன் நிலையில் இருந்து பார்த்தால் இப்படித்தான் பேசத் தோன்றும் என்று தனக்குள் பலமுறை சொல்லிக்கொண்ட பிறகே, சைதன்யாவால் சற்று அமர்ந்த குரலில் பேச முடிந்தது.

குரல் ஓரளவு கட்டுப்பாட்டுக்குள் வந்ததும், ''உங்கள் வாழ்த்துகளுக்கு அவசியம் இல்லை, மானபரன். ஏனென்றால், இங்கே யாருக்கும் திருமணம் நடப்பதாக இல்லை'' என்றாள் அமைதியாக.

''உன் பேச்சை நம்ப முடியவில்லையே!''

''நம்பினாலும் நம்பாவிட்டாலும் உண்மை அதுதான். அதனால்...''

''பொறு பொறு... உன் குறிக்கோள் காசை எண்ணிப்பார்க்கத் தேவையில்லாத பணக்காரி ஆவது. அதைத் தொழில் மூலம் அடைவது, புதிதாக வந்து ஒட்டிக்கொண்ட அடுத்த லட்சியம். ஒரு கல்லில் இரு மாங்காயாக இரண்டையும் அடைய வழி கிடைக்கும்போது, அதை விடுவாயா என்ன? அதுவும், நீ!''

மட்டம் தட்டுகிறானாம்... பண்ணட்டும்! ''உங்களுக்கு எப்படித் தோன்றினாலும், நிஜம் அதுதான். உங்கள் திருமண வாழ்த்து அவசியமற்றது என்பதுதான் உண்மை...''

''அதுதான் ஏன் என்று கேட்கிறேன்...''

''ஏன் என்றால்... பிடிக்கவில்லை. அவ்வளவுதான்!''

''யாருக்குப் பிடிக்கவில்லை... உனக்கா? பூபாலனுக்கா?''

''இதெல்லாம் என்ன கேள்வி மனு? எனக்கு வேலை இருக்கிறது. வைத்துவிடுகி...'' என்று சைதன்யா சொல்லிக் கொண்டிருக்கும்போதே, மானபரன் குறுக்கிட்டான். ''இல்லை, எனக்குத் தெரிய வேண்டும். பேச்சைக் கட் பண்ணிவிடாதே. பண்ணினால், நேரே வந்து கேட்பேன். சொல்லு, யாருக்குப் பிடிக்கவில்லை? பூபாலனைப் பார்த்தால், உன்னிடம் அன்பாக இருப்பது போலத் தானே தெரிகிறது? அல்லது, சரியான சமயத்தில் உன்னைக் கண்டுகொண்டு, மறுத்துவிட்டானா?''

என்னதான் விடாப்பிடியாக அவனது நிலைமை என்று சொல்லிக்கொண்டாலும், உள்ளே அவளுக்கு வலிக்கத்தான் செய்தது. 'வைத்தால் நேரே வருவேன்' என்கிறானே என்கிற ஒரு காரணத்துக்காக மட்டும்தான் அவனுக்குப் பதில் சொன்னாள் அவள்.

''இரண்டு பேருக்குமே விருப்பம் இல்லை!'' என்றாள் சுருக்கமாக.

''அதுதானே நம்பும்படியாக இல்லை என்கிறேன்! 'ஆல் இஸ் வெல், தட் என்ட்ஸ் வெல்' என்பது உன் புதிய சித்தாந்தம். எந்த வழியைக் கடைப்பிடித்தேனும் தொழிலில் வெற்றி பெற்றுப் பணக்காரி ஆவதுதான் லட்சியம்! மற்றபடி, என் எச்சரிக்கையை அலட்சியம் செய்து, மீண்டும் மீண்டும் இங்கே வந்து நிற்க மாட்டாய்! ஆண்களை மடக்குவது, உனக்கு ஒன்றும் அரிய காரியம் இல்லையே?'' என்று மேலும் மேலும் துருவினான் மானபரன்.

அவன் ஆராய்ந்தது கூட சைதன்யாவுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. ஆனால் அவளைப் பற்றி அவன் வெளியிட்ட அபிப்பிராயம், அவளை மிகவும் பாதித்தது. முன்பு என்னதான் நடந்திருந்தாலும், அவளை இவ்வளவு மட்டமாகவா எண்ணுவது? அதுவும் அவன்!

அவன் காண முடியாதுதான். ஆனாலும் நேராக நிமிர்ந்து, ''காரணம்தானே உங்களுக்குத் தெரிய வேண்டும்? தாராளமாகக் கேட்டுக் கொள்ளுங்கள். எதெதற்கோ, எதையெதையோ தியாகம் பண்ணலாம். ஆனால் எதற்காகவும், மனம் ஒன்றாத ஒருவரோடு சேர்ந்து வாழ்வது என்னால் முடியாது! அதனால் இந்த உலகத்தையே கொடுப்பதாக இருந்தாலும், நான் ஒருபோதும் திருமணம் செய்து கொள்வதாக இல்லை! இது மட்டுமேதான்!

**SMS**

**''அந்த நாய்தானே உங்களைக் கடிச்சுது... அப்புறம் ஏன் தினமும் அதுக்கு நான் சமைச்ச சாப்பாட்டைப் போடறீங்க?''**

**''அதை நான் பழிவாங்க வேணாமா விமலா?''**

*- கே.ஆனந்தன், பி.பள்ளிப்பட்டி.*

இதற்கு மேல், இந்த விஷயம் பற்றி உங்களுக்குச் சொல்ல எதுவும் இல்லை! அதனால், பேச்சை முடிக்கிறேன். தயவு பண்ணி, இங்கெல்லாம் வர வேண்டாம்!'' என்று மூச்சு வாங்க, செல்லை அணைத்தாள் சைதன்யா!

இந்த மன நிலையில், மற்ற பங்குதாரர்களைப் பார்க்கவோ, வேலை செய்யவோ அவளுக்கு மனம் வரவில்லை. சும்மா இருக்கவும் பிடிக்காமல், ஆர்டர் புத்தகத்தை எடுத்து, அடுத்தடுத்து கொடுக்க வேண்டிய உடைகளைச் சரிபார்த்து, பில் காப்பியில் முத்திரையிட்டு, உடையோடு பின் பண்ணிவிட்டு, அவற்றை அடுக்கி வைக்கத் தொடங்கினாள்.

ஓரளவு மனம் அமைதியானதும், மீதியை ஓர் உதவியாளை அழைத்துக் கொடுத்துவிட்டுப் பரிமளாவிடம் வந்தாள் சைதன்யா. ''அன்று வரைந்த டிசைன்...'' என்று பெரியவளிடம் ஏதோ சொல்ல முற்பட்டபோது, கடையின் கதவைத் தள்ளித் திறந்து கொண்டு உள்ளே வந்தவளைப் பார்த்து, சைதன்யா மயக்கம் போடாத குறைதான்.

இந்தக் குடும்பத்திடம் இருந்து, அவளுக்கு விடுதலையே இல்லையா? இல்லை என்பது போல, அங்கிருந்த யாருமே எதிர்பாராத விருந்தாளியாக அங்கே வந்து நின்றவள், நீதாவுடைய தாயார்! என்னதான் அனுசூயாவை அவளுக்கே பிடித்துப் போயிருந்தாலும், அப்போதைக்கு நீதா, மானபரனுடைய உறவினரிடமிருந்து கொஞ்சம் தள்ளியே இருப்பது மேல் என்பது, சைதன்யாவுக்கு.

ஆனால், பெரிய உதவி செய்ததோடு, நல்லவள் என்றும் அறிந்திருந்ததால், மனதைக் காட்டாமல், "வாருங்கள் மேடம்!'' என்று வரவேற்றாள் புன்னகையோடு வரவேற்றாள்.

''இவர்கள் வந்து...'' என்று முதியவளை அறிமுகப்படுத்த முற்பட்டு, ''இவர்கள், திருமதி நீதாபரனுடைய தாயார், பரிமளாக்கா. அன்றைக்கு இவர்கள் காரில்தான் வீட்டுக்கு வந்தேன்'' என்று தெரிவித்தாள்.

வியப்பும் குறுகுறுப்புமாக மற்றவர்கள் பார்க்கும்போதே, பெரியவளின் கூர்நோக்கும் அவர்களை அளவிட்டது. ''உங்களுக்குள் ரகசியம் இல்லை என்று தெரிகிறது. அதனால், நீதாவுடைய தாயார் என்பதைவிட, என் பெயர் அனுசூயா என்று மட்டும் நினைவு வைத்துக்கொண்டால் நன்றாயிருக்கும்'' என்று முறுவலுடன் கூறியவள், இலியாசிடம்




''நர்ஸ் நமீதாவைப் பார்த்ததும் எதுக்கு ஊறுகாயை எடுத்து நக்க நீங்க..?''

''அவங்க அழகு எனக்கு போதையூட்டுது!''

- அம்பை தேவா, திருநெல்வேலி.

''உங்க பிளட் குரூப் 'பி நெகடிவ்'தானே... பின்ன எதுக்கு 'பி பாசிடிவ்'னு சொல்றீங்க?''
''யாரும் நெகடிவ்வா பேசினா எனக்குப் பிடிக்காது'ன்னு நீங்கதானே டாக்டர் சொன்னீங்க!''
- *உஷா சாரதி டேச்சு, சென்னை-5.*

திரும்பி, "உங்களை நான் பார்த்திருக்கிறேன்'' என்றாள்.

இலியாசும் யாரையும் இலகுவில் மறக்கிறவன் அல்ல. எனவே, "ஆமாம் மேடம். அடையாறு ஷாப்பில் ஒரு தரம் பார்த்திருக்கிறேன். யாருக்கோ திருமண உடைக்காக வந்திருந்தீர்கள்'' என்றான்.

விழிகள் மலர, "நீல்கமல் சொன்னதும் சரிதான். 'கெட்டிக்கார இளம் பிள்ளைகள் நாலு பேர் சேர்ந்து தொழில் தொடங்கியிருக்கிறார்கள். எவ்வளவோ உயரம் போகப் போகிறார்கள்' என்றார். நாலா பக்கமும் கவனிக்கிறீர்களே!'' என்றாள் மெச்சுதலாக.

அடையாறு ஷாப் உரிமையாளர்களில் நீல்கமல் ஒருவர் என்பது அங்கே எல்லோருக்கும் தெரியும். அவரே பாராட்டினார் எனும்போது, எல்லோருக்கும் பூரிப்புதான்! அந்த சந்தோஷத்துடனேயே உட்காரச் சொல்லி உபசரித்து, "உங்களுக்கு நாங்கள் எந்த விதத்தில் உதவட்டும், மேடம்?'' என்று இலியாஸ் வினவினான்.

"அதேதான். அந்தத் திருமண உடை! பெண், பையன் – இரண்டு பேரும் வெளிநாட்டில் இருக்கிறார்கள். இருவகைப் பெற்றோருமே, அளவை மட்டும் அனுப்பிவிட்டு, என் பொறுப்பில் தைக்கச் சொல்லிவிட்டார்கள். இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குப் பிடித்த மாதிரி எப்படிச் செய்யச் சொல்லுவது என்று குழம்பிக் கொண்டிருந்தேன். நீதா உடையைப் பார்த்தேனா, நிம்மதியாகிவிட்டது!'' என்ற பெரியவள் துணி ரகம், வண்ணம், வடிவமைப்பு முதலியன பற்றிய தன் தேவைகளைச் சொல்ல, அவள் திருப்திப்படும் விதமாக எல்லாம் விரைவாக முடிவாயின.

நீதா போல அள்ளி வீசவில்லை என்றாலும், பணக்கணக்கும் ஒப்புக்கொள்ளும் விதமாகவே முடிவாகிவிட, ''உங்கள் மகளுக்கு எங்கள் நன்றியைச் சொல்லுங்கள், மேடம். உங்கள் மூலம் ஒரு புது வாடிக்கையை ஏற்படுத்தித் தந்திருக்கிறார்கள்!'' என்று மனதார உரைத்தான் இலியாஸ்.

"யார்... என் மகளா? இல்லை தம்பி. உங்கள் முகவரியை எனக்குத் தந்து அனுப்பியது என் மருமகன்! உண்மையில் உங்கள் நன்றிக்கு உரியவர் அவர்தான்'' என்று சைதன்யாவைப் பார்த்தாள், அந்தப் பெண்மணி. ''வரட்டுமா? உடை பற்றி ஏதேனும் சொல்வதானால், என் கார்டு வைத்துக் கொள்ளம்மா!'' என்று கார்டை அவளிடமே கொடுத்து, மறுபடியும் அவளைப் பார்த்துவிட்டு, எல்லோரிடமும் விடைபெற்றுச் சென்றாள் அந்தப் பெண்மணி.

எல்லோருக்குமே புத்திக் கூர்மை உண்டு என்பதால், சைதன்யா அஞ்சியது போல அனுசூயாவின் பார்வையை அங்கே அனைவருமே கவனித்திருந்தனர்.

"மகளால் கஷ்டப்பட்டுவிட்டாய் என்று அவர்களுக்கு வருத்தம்!'' என்றான் இலியாஸ். மற்ற இருவரும் ஒப்புதலாகத் தலையாட்ட, பூபால் வேறு சொன்னான்... "எனக்கென்னவோ, அவர்கள் உன்னோடு தனியாகப் பேச விரும்பியது போலத் தோன்றியது சைது!''

சைதன்யாவுக்கும் அதே எண்ணம்தான். கூடவே, மகளால் ஏதேனும் பிரச்னை என்றால், தன்னிடம் வரலாம் என்ற குறிப்பும் கூட. அப்படி என்ன பிரச்னையை எதிர்பார்க்கிறாள் அந்தப் பெரியவள்? தன் குழப்பங்கள் எதையும் சொல்ல முடியாததால், "சின்னப் பையன்களின் கற்பனையே அலாதிப்பா!'' என்று வழக்கமான கேலியில் முடித்தாள்.

தொடர்ந்த சில நாட்களில், அனுசூயா மூலமாகப் பல வாடிக்கையாளர்கள் வந்து சேர்ந்ததோடு மட்டுமின்றி, மூத்தவளின் கலகலப்பான பேச்சினாலும், அங்கே எல்லோருக்குமே அந்தப் பெண் மணியைப் பிடித்துப் போயிற்று! 'வேலை வேலை என்று உழைக்கிறீர்கள்... சாப்பிடுங்கள்' என்று சத்தும் சுவையுமான உண்டி வகைகள் கொண்டு வந்து தரும் அளவுக்கு நெருக்கம் வளர்ந்தது! அவளது அன்பான பார்வை சின்ன வயதிலேயே இழந்த தாயை சைதன்யாவுக்கு நினைவு படுத்திற்று! இந்தப் பெண்மணி, நீதாவுடைய தாயார் என்பதை சற்று சிரமப்பட்டே நினைவுபடுத்திக் கொள்ள வேண்டியிருந்தது!

**தொ**ழில் என்றால், மேடு பள்ளங்களைச் சமாளித்தே ஆக வேண்டும் என்று கூறி ஒருவருக்கொருவர் தெம்பூட்டிக் கொண்டாலும், சில தினங்களிலேயே வந்து சேர்ந்த தங்கக்கோடுகள் இட்ட ரோஜா நிற உறையை, உள்ளூரக் கவலையுடன்தான் சைதன்யா பிரித்தாள். பிரித்துப் படித்தவள், தன் கண்களையே நம்ப முடியாமல் திகைத்தாள்!

நீதாவின் கடிதத்தைச் சந்தேகத்துக்கு இன்னொரு முறை படித்துப் பார்த்துவிட்டு, அருகில் இருந்த பரிமளாவிடம் நீட்டினாள், சைதன்யா. "அப்படியானால் உடனடியாக அந்தப் பணத்தைத் திருப்ப வேண்டியிராது போலத் தெரிகிறதே!'' என்று கடிதத்தை ஆண்களிடம் கொடுத்தாள் அவள்.

"அதானே!'' என்றான் பூபால்



SMS

''இன்வெஸ்ட்மென்ட் பண்ணச் சொல்லி தினமும் எனக்கு பத்து போன் வருது...''

''அவ்வளவு பணம் வச்சிருக்கியா?''

''ஒரே ஒரு செல்போன் வச்சிருக்கேனே!''

-என்.பர்வதவர்த்தினி, சென்னை-75.

விழி விரிய! “கைக்கவளத்தையே எப்போது பிடுங்கப் போகிறானோ என்று கலக்கிக் கொண்டிருந்தால், ‘சாப்பிடு சாப்பிடு’ என்று பாதாம் அல்வாவை அல்லவா அள்ளித் தருகிறாள்! அவர்கள் வீட்டுப் பாதாம் அல்வா நன்றாகத்தான் இருக்கும்... ஐயோடா, இது ஒன்றும் வேறு மாதிரி அல்வா கொடுப்பதாக இராதே!'' என்று திடீர் மிரட்சியுடன் கேட்டான் அவன்.

“இல்லை பூபால்! நீ சொல்வது போல இது நிஜ பாதாம் அல்வாவேதான்! ஏதோ ஒரு வேகத்தில் பணம் தருவதாகச் சொல்லியிருக்கிறாள். சைது மறுத்துச் சொல்லவும், கோபமும் கூடத்தான்! ஆனால் அப்புறம் யோசித்திருப்பாள். எப்படியும், இருபத்தைந்து லட்சம்! கால் கோடி. இப்போது அவளுக்கு மிச்சம்தானே! அதோடு அவளுடைய தோழிகளும் நெருக்கினார்கள் போல! அதுதான், பரிசு போல இந்த சகாயம்! இதை விடக் கூடாது சைதன்யா'' என்றான் இலியாஸ்.

கடிதத்தை மீண்டும் படித்துப் பார்த்த சைதன்யாவுக்கு இன்னமும் ஆச்சரியம்தான். நீதாவிடம் அவளது ஆடை பற்றி ஆவலாகக் கேட்ட அத்தனை பேரும், ஒன்றாகக் கூடும் வேளை, நாள், இடம் எல்லாம் குறித்து, பூபாலனோடு வந்து கலந்து கொள்ளுமாறு அழைப்பு விடுத்திருந்தாள் நீதா. அவள் தருவதாகச் சொன்ன பெரும் பணம், அவளது நிபந்தனை... எல்லாம் அடியோடு மறக்கப்பட்டிருந்தன.

இவள் எப்படி, இப்படி? என்னவோ பெரிய முரண்பாடாகத் தோன்றியது, அவளுக்கு. ஆனால், அன்று வீட்டு பார்ட்டி போல விளையாட்டு காட்டும் எண்ணமும் இல்லாதது போல, பூபாலனோடுதான் வரச் சொல்கிறாள்! அப்படியானால் காரணம், இலியாஸ் சொல்வது போலத்தான் இருக்குமோ?

அடி மனதில் மானபரன் இருப்பதால், அவள்தான் அடிக்கடி, அனாவசியமாகக் குழம்புகிறாளோ?

மானபரன்! அன்றைய பேச்சுக்குப் பிறகு, அவன் தொடர்பே கொள்ளவில்லை. என்ன நினைத்துக் கொண்டிருக்கிறானோ? அவளை நம்பினானா என்று கூடத் தெரியவில்லை! அவன் வெளியூர் சென்றிருப்பதாக அனுசூயா பேச்சுவாக்கில் சொன்னாள்தான். மனு ஊரில் இல்லாத நேரம் பார்த்து, நீதா இந்தக் கூட்டத்துக்கு அவளை அழைப்பதில் ஏதேனும் உள் நோக்கம் இருக்கிறதோ?

இருந்தது. அது அவளுக்குக் காலம் கடந்து தெரிய வந்தது!

**(தொடரும்)**

SMS

''அண்டை நாட்டு மன்னர், நம் மன்னருக்கு இணையானவராம்!''

''சம பலம் கொண்டவரா?''

''இல்லை... சபலம் கொண்டவர்!''



*- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.*



# கண்ட நாள் முதலாய்...

தனக்கும் பூபாலனுக்கும் திருமணம் நடக்க இருப்பதாக மானபரன் எண்ணிக்கொண்டு இருக்கிறானோ என்ற நினைப்பே சைதன்யாவுக்கு வெறுப்பைத் தந்தது. கிட்டத்தட்ட அதுபோன்ற ஒரு கருத்தை விதைத்துவிட்டு, அவனை விலக்கி வெளியேற்றியவள் அவளேதான். ஆனால், யாரோ இனம் தெரியாத ஒரு பணக்காரனை அவள் மணக்க ஆசை... வெறும் ஆசையல்ல, பேராசைப்படுவதாக எண்ணி, அவளை வெறுத்து, விலகி, அவன் செல்வது மட்டுமே, அன்றைக்கு அவளது தேவையாக இருந்தது!

அது நடந்தபோதே, அவளுக்குத் தவிப்பாகத்தான் இருந்தது. ஆனால் தியாக வண்ணம் பூசி, அப்போது அவளால் மனதை அடக்கிக்கொள்ள

மனம் மயக்கும் மலர் தொடர்

**ரமணிசந்திரன் 21**

முடிந்தது. இப்போது உயிரும் உரு வமுமாக பூபாலனோடு அவளை இணைத்து மானபரன் நினைப்ப தைக்கூட, அவளால் சகிக்க முடியவில்லை!

ஆனால் அதற்காக மனுவைத் தேடிச் சென்று அவனிடம் உண்மை நிலவரம் சொல்வதோ வடிகட்டிய அசட்டுத்தனம்... முட்டாள்தனம் கூட! இத்தனை நாள் அனுபவித்த துன்பமெல்லாம் அர்த்தமின்றிப் போய்விடும். செய்வது அறியாது, நீதா மேல் ஆத்திரம் வந்தது!

ஒரு யோகினி மாதிரி, மானபரனின் நினைவே போதும் என்று ஒதுங்கிக் கிடந்தாள். அவளை இழுத்துப்போய், அவன் அறைக்கு அனுப்புவதும், அளவெடுக்கச் சொல்வதுமாகக் கூத்தடித்தது போதாது என்று, இப்போது பணம், கல்யாணம் என்று இந்தக் குளறுபடி வேறு...

அதோடு நில்லாமல் சைதன்யா முடிவு சொல்லும் முன்பாகவே, மனுவிடம் தெரிவித்தாக வேண்டுமா? இந்த வேகத்திலேயே, சைதன்யாவின் மறுப்பையும்

SMS

''ஆறுல அஞ்சு போனா என்ன வரும்டா..?''

''அஞ்சுவோட டெட் பாடிதான் வரும் டீச்சர்... ஏன்னா அஞ்சுவுக்கு நீச்சல் தெரியாது!''

- எம்.செந்தில்குமார், கம்பம்.



சொல்லிவிட்டாள் என்றால் பரவாயில்லை, நிம்மதி! ஆனால் சொல்வாளா? எத்தனையோ மறைக்கிறவள், இதை எங்கே சொல்லப் போகிறாள்?

''நீ புதிதாக வரைந்த டிசைன்களை எடுத்துப் போ சைது. எப்படியும் அதில் மூன்று நாலேனும் பலருக்குப் பிடித்துப் போகும்!''

திடுமென ஒலித்த இலியாசின் குரலில், சைதன்யா துள்ளிக் குதிக்காத குறைதான்! சட்டென நிகழ்காலத்துக்கு வந்து, ''என்... ஓ... சரி இலியாஸ். கட்டாயம்!'' என்று தயக்கத்தை உதறி, நீதாவின் அழைப்பை ஏற்றுச் செல்வதை, தனக்குள்ளே உறுதி செய்து கொண்டாள் சைதன்யா.

இதற்குத் தயங்குவானேன்? கண்ணை மூடிக்கொண்டு எங்காவது போய் மாட்டிக்கொள்ள, அவள் ஒன்றும் முட்டாள் அல்ல! அன்று போலத் தனியாகவும் செல்லப் போவதும் இல்லை! ஆணோ, பெண்ணோ, கூட ஒருவர் இருப்பது எப்போதும் பாதுகாப்பு. அவளைப் போல மனிதர்கள் இருக்கும் இடத்துக்குத்தானே போகப் போகிறாள்? குடிகாரக் கும்பல்தான் என்றாலும், கூட ஒருவன் இருக்கும்போது எந்தத் தொல்லையும் இருக்க வாய்ப்பில்லை. முடிந்த அளவு சீக்கிரமாக வேலையை முடித்துக்கொண்டு, உடனே திரும்பி வந்துவிட வேண்டியதுதானே!

இப்படி எண்ணித்தான்,

சைதன்யா பூபாலனோடு கிளம்பியது. நீதா கொடுத்திருந்த முகவரி, முக்கிய சாலைக்குச் சற்று உட்புறமாக அமைந்திருந்த போதும், செல் மூலமாக வழியைக் கேட்டுக்கொண்டே போனதால், எளிதாகவே சென்றடைய முடிந்தது. ஆனால் பொதுவாக அங்கே காராளர்கள் மட்டும்தான் வருகிற வழக்கம் என்பது போல, அவர்கள் சென்ற ஆட்டோவை உள்ளே விட மறுத்தனர்.

நீதாவைத் தொடர்பு கொண்டு, அவளது உதவியால் உள்ளே சென்றபோதும், ஆட்டோவை கண் மறைவாகக் கட்டிடத்தின் பின்புறமாக நிறுத்துமாறு செய்த ஏற்பாடு, சைதன்யா, பூபால் இருவருக்குமே உறுத்தியது! 'திரும்பிப்பார்' இன்னும் கொஞ்சம் வளர்ந்ததும், முதலில் ஒரு கார் வாங்க வேண்டும். இதுபோன்ற பெரிய ஆட்கள் கூடும் இடங்களுக்குக் கம்பீரமாக, அதில்தான் வரவேண்டும் என்று பேசிய படி சென்றால், 'டை' கட்டாமல் உள்ளே போகக்கூடாது என்று வரவேற்பில் இருந்த பெண், பூபாலனைத் தடுத்து நிறுத்தினாள்.

மறுபடியும் நீதாவைக் கூப்பிட்டார்கள். இது போன்ற விதிமுறைகள் இருப்பதை முன்பே சொல்ல வேண்டாமா என்று நீதாவிடம் இவர்கள் கடுப்படைந்ததால், 'வருமுன் எப்படி என்ன என்று விசாரித்திருக்க வேண்டாமா' என்று அவள் வெளிப்படையாகவே




''ஸ்கூல்ல மணியடிச்சா நேரா வீட்டுக்கு வராம, என்னடா பண்ணிக்கிட்டு இருந்தே?''

''மணியை திருப்பி அடிச்சுக்கிட்டு இருந்தேன்பா!''

- எஸ்.கோபாலன், நங்கநல்லூர்.

எரிச்சல் காட்டினாள்.

ஆனால் உடனேயே மாறி, ஓர் ஆளை அழைத்து, ஸ்டோர் அறையில் ஒரு டை வாங்கிக் கொடுத்துக் கட்டி, பூபாலனைக் கூட்டி வருமாறு சொல்லி அனுப்பினாள்.

"இந்த டீஷர்ட்டுக்கும் டைக்குமாக கோமாளி போல இருப்பேனே!'' என்று புலம்பியவாறு பூபாலன் சென்றது, சைதன்யாவுக்குச் சிரிப்பூட்டியது. உதட்டில் முறுவலோடு நீதாவுடன் அவள் உள்ளே சென்றாள்.

அன்று போலன்றி, தன் நட்பு வட்டத்துக்குச் சைதன்யாவை நீதா அறிமுகம் செய்து வைத்தாள். 'உடைகள் தைத்துச் சம்பாதிக்கிறாளா... ஹௌ ஸ்வீட்...!' என்று அவர்கள் வியப்புக்காட்டி, மேல்தட்டுக்காரர்களாகத் தட்டிக் கொடுத்த விதம் எரிச்சலூட்டியபோதும், வரக்கூடிய தொழில் பெருக்கத்தை நினைத்து சைதன்யா அமைதி காத்தாள்.

இந்த பூபால் எங்கே இன்னும் காணோம் என்று அறை

sms

''புற முதுகிட்டு 'பல்லக்கில்' அமர்ந்தே நம் மன்னர் தப்பிவிட்டாராமே... எப்படி?''

''அவருக்கு 'ஃபுல் லக்கு' இருக்கே!''

*- சி.பி.செந்தில்குமார்,*
*சென்னிமலை.*



வாயிலைப் பார்த்தாள். அவன் ரொம்ப ரோஷம் பார்க்க மாட்டான். இவர்களிடமே இலகுவாகக் கலந்து பேசி, ஆளை வளைத்து, நாலைந்து ஆர்டர்களேனும் பிடித்துவிடுவான்.

''என்ன சைதன்யா, உன் இணை பிரியாத் துணையைத் தேடுகிறாயா?'' என்று நீதா கேட்ட விதம் இன்னமும் எரிச்சலூட்டியது!

''எதையும் நன்கு விளக்கிப் புரிய வைப்பதில் பூபாலன் கெட்டிக்காரன். அதனால்தான் என்னோடு அவன் இங்கே வந்ததே! தேவைப்படும் நேரத்தில் அவனைக் காணோமே என்று பார்த்தேன்'' என சாதாரண குரலில் விளக்கம் சொன்னாள்.

ஆனால் அதற்கும், ''நாலு பேர் சேர்ந்து கூட்டுத்தொழிலா? ஹௌ ஸ்வீட்!'' என்று பலர் கண்ணை விரித்துக் கூவவும், சைதன்யாவுக்குச் சலித்துப் போயிற்று! கௌரவமாகத் தொழில் நடத்துவது பற்றி இவர்களுக்கு என்ன தெரியும்?

நல்லவேளையாக பூபாலைத் தேடி நீதா யாரையோ அனுப்பவும், அந்த ஆள் போய் ஒரு வழியாக அவனைக் கூட்டி வந்தான். வந்ததுமே பொறுப்பேற்று, பூபாலன் தன் விளக்கங்களைத் தொடங்கவும், எல்லோரும், ''ஹௌ ஸ்வீட்!'' என்று அவனைச் சுற்றிக் குழுமினர்.

சற்று நேரம் நன்றாகத்தான் இருந்தது. ஐந்து ஆர்டர்கள் கூட எழுதப்பட்டன. ஆனால் அவன் சொல்வதை நன்றாகக் கேட்கும் ஆவலில், நீதாவுடைய தோழி ஒருத்தி, கையில் இருந்த மதுவை பூபால் மீதே கொட்டிவிட்டாள்.

''சாரிப்பா! சாரிப்பா!'' என்று அவள் பூபாலனைத் தடவி, மதுவை இன்னமும் அதிக இடத்துக்குப் பரப்பினாள். அப்போதும், நீதாதான் உதவிக்கு வந்தாள்.

எழுந்து, ''என்னோடு வா, பூபால். உன் உடையை மாற்றவோ, இதையே சுத்தம் பண்ணி அயர்ன் பண்ணித் தரவோ ஏற்பாடு செய்கிறேன்'' என்று அவனை அழைத்துப் போனாள்.

''சைதன்யாவைப் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று நீதா தன் தோழர், தோழிகளிடம் கூறியது இயல்பாகத்தான் தோன்றியது. ஆனால் அந்தத் தோழமைப் பட்டாளத்தை ஏன் அப்படி, அவ்வளவு நேரம் பார்த்தாள் என்று சைதன்யாவுக்கு ஒரு சிறு உறுத்தல். ஏதோ சேதி சொல்கிற மாதிரியான பார்வை! என்ன சேதியாக இருக்கக்கூடும்?

தனக்காகக் காத்திராமல், மேலே வேண்டிய உடை அமைப்புகளைப் பார்த்து முடிவு செய்யச் சொல்லியிருப்பாளா? அவர்களது பார்ட்டி தடைபட்டு நிற்பதால், அப்படித்தான் இருக்க வேண்டும்! இவர்கள் பார்ட்டி நடத்தும் விதம்தான் சைதன்யா ஏற்கனவே பார்த்திருந்தாளே! இப்போது அந்த 'மேஜிக் ஷோ' இல்லை. அதற்கு பதிலாகத்தான் நீதா தன்னை அழைத்தாளோ என்று தோன்றவும் அவளுக்கு ஒரு மாதிரி ஆகிவிட்டது!

இந்தக் கூட்டம் 'மேஜிக் ஷோ'வை ரசித்த விதமும் அவள் அறிந்ததுதானே? அந்த மேஜிக் நிபுணரின் கதி, தனக்கும் வந்து விடக்கூடாது என்று எண்ணி, அவசரமாக ஃபோல்டரில் உள்ள டிசைன்கள் அனைத்தையும் வேகமாகக் காட்டலானாள்.

எங்கே எங்கே என்று, ஆண் பெண் பேதமின்றி அவர்கள் அனைவரும் ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளிக்கொண்டு, அவளை நெருங்கி நின்று பார்த்தது அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. அன்று அந்த மேஜிக் வல்லுனரைச் சீந்துவாரே இல்லையே! நல்லவேளை... அந்த நிலை அவளுக்கு இல்லை. அவரவரை அழகாகக் காட்டும் ஆடை என்றதும் சுவாரசியம் வந்துவிட்டது போலும்!

ஒட்டி உராயும் அளவு நெருங்கி நின்று, ஃபோல்டரில் உள்ள வடிவமைப்புகளை அவர்கள் பார்த்ததை சைதன்யா தவறாக நினைக்கவில்லை! பார்த்தாலே பாவம், தெரியாமல் பட்டாலும் தப்புதான் என்பதெல்லாம் இந்தக் காலத்துக்கு சரிவராத பழைய கொள்கைகள் என்று அவளுக்கு நன்றாகவே தெரியும். எனவே, உற்சாகமாகப் பார்க்கிறார்கள் என்று டிசைன்களை விளக்கிக் காட்டிக் கொண்டிருந்த சைதன்யா, விரைவிலேயே ஒரு வேறுபாட்டை உணர்ந்து திகைத்தாள்!

**உ**தட்டில் ஏளன வளைவுடன், மறைவாக அமர்ந்து பார்த்தாள் அவள். இந்த நல்லவர்களுக்கு ஒரு மடத்தனம்! சட்டென சந்தேகப்படத் தெரியாது! தன்னைப் போலவே பிறரையும் எண்ணி, நம்பி ஏமாறுவார்கள்!

நன்றாக அடிபட்டுத்தான் புரியும்! சும்மா சும்மா ஒருவனுக்குத் தட்டுத் தடங்கல்கள் வருமா என்று யோசிக்கத் தெரியவில்லையே! இத்தனை பேரில் அவன் மீது மட்டும் மது கொட்டுமா என்றும்தான்!

**SMS**

''உடல் உறுப்புகளை தானம் பண்ணப் போறேன்னு டாக்டர்கிட்ட சொன்னது தப்பாப் போச்சு!''

''ஏன்..?''

''எப்போ ஆபரேஷனை வச்சுக்கலாம்னு கேக்கறார்!''



- ஜி.பாலாஜி, புதுச்சேரி.

பார்த்து ரசிக்க, நல்ல அருமையான காட்சி! மெல்ல மெல்ல, அந்தத் தையல்காரியின் கண்களில் தைரியம் குறைவதும், யாராவது... யாராவது என்ன, பூபால் வந்துவிட மாட்டானா என்று, அவன் மயங்கிக் கிடப்பது தெரியாமல் ஓரப் பார்வையால் அறை வாயிலை நோக்குவதும், ஏமாந்து சோர்வதும், கண்ணுக்கும் மனதுக்கும் எப்பேர்ப்பட்ட விருந்து!

இன்னும் நிறைய இருக்கிறது! எவனாவது... எவளாவது கூடத் தையல் மாதிரியைப் பார்க்கிற சாக்கில் அத்துமீறித் தொடுவதும், அவள் திடுக்குற்று விறைப்பது, திகைப்பு மாறி, அருவருப்பும் கோபமுமாக எழுந்தே விட்டாளே! ஆனால், எழுந்து என்ன பயன்?

நிமிர்வைப் பார்! ஒன்றும் இல்லாதது போலக் காட்டிக் கொண்டு, மெல்ல அங்கிருந்து அவள் வெளியேற முயல்கிறாளாம்! இவர்கள் சேர்ந்து வழி மறைத்து, அவளைக் கண்டபடி இடிப்பதும் தடவுவதும் அதைத் தவிர்க்க, அவள் விலகிப் பின்னடைவதும் நல்ல வேடிக்கை!

பின்னடைந்துதான் ஆக வேண்டும்! வேறே வழிதான் விடமாட்டார்களே! அத்தனை பேருக்கும் தீனி போட்டு, எப்படி அணு அணுவாகச் சொல்லிக் கொடுத்திருக்கிறாள்! தையல்காரியின் கண்களில் திகில் பரவுவதைப் பார்க்க, அவளுக்கு மிகவும் உற்சாகமாக இருந்தது! இந்த உடல் அசதி மட்டும் இல்லை என்றால், கை கொட்டி நகைத்திருப்பாள்!

ஏன், இந்த மான் வேட்டையில் அவளுமே கலந்து கொண்டிருப்பாளே! எப்படியும், இன்று அவள் நாசமாகியே தீர வேண்டும்! ஏனெனில், நாளைக்கு அவளுடைய புருஷன் வந்துவிடுவான். மோப்பம் பிடித்து, ஆசைக் காதலியைக் காப்பாற்ற வந்துவிடவும் கூடும்! அன்றைக்கே அவளுக்கு அப்படி ஒரு சந்தேகம் இருந்தது! ஆனால், இன்றைக்கு அவன் ஊரில் இல்லை! திரும்பி வருமுன், காரியம் நடந்தாக வேண்டும்!

அதை விக்கி பார்த்துக் கொள்வான்! ஓநாய் மாதிரி, அவன் அவளை வெறிப்பதைப் பார்க்கச் சிரிப்பு வந்தாலும், கூடவே கொஞ்சம் எரிச்சலாகத்தான் இருந்தது! அவளை விட்டு இன்னொருத்தியை, அதிலும் இந்தத் தையல்காரியை விக்கியும் பார்ப்பதா என்று!

ஆனாலும் போய்த் தொலை

**sms**

''என்மேல இருக்கற கோபத்தை சமையல்ல காட்டிடுவா என் மனைவி...''

''எதுவும் சமைக்காம பட்டினி போட்டுடுவாங்களா?''

''இல்லை... அன்னைக்குத்தான் அவ சமைப்பா!''

- கே.ஆனந்தன், பி.பள்ளிப்பட்டி.



கிறான்! காரியம் நடக்க வேண்டுமே! இதற்காக, இந்தக் கூட்டத்துச் செலவு மட்டும் எவ்வளவு! போகட்டும்... அவள் போகப் போகிற இடத்துக்கு அந்தப் பணத்தை மூட்டை கட்டி எடுத்துப் போகவா முடியும்?

அதைவிட, இவளை அழிப்பதில், அதன் மூலமாக அவள் கணவனை அழிப்பதில், இன்னும்கூட எவ்வளவு வேண்டுமானாலும் செலவு பண்ணலாமே!

இந்த விக்கி மட்டும் ஊரில் இருந்திருந்தால், அன்றைக்கே முடித்திருப்பான். இல்லை... கணவன் காப்பாற்றியிருப்பான்! காதலி அல்லவா?

காதலி..! குரோதம் கொப்பளித்தது அவள் கண்களில்! கண்டுபிடிக்க விடாமல் இரண்டு பேரும் என்னமாக நடித்தார்கள்! ஆனால் அவளா விடுவாள்? அவன் குளிக்கிறபோது செல்லை எடுத்துப் பார்த்தால், தையல்காரியின் எண்!

அடடே... ரொம்பவும் அசதியாக இருக்கிறது போல? ஃபோல்டரை எடுத்து முன்னாலே பிடித்து மானம் காக்கிறாளாமா? பெரிய மானஸ்தி! இவளை அளவுகோலாக வைத்து அல்லவா, மனைவியை அருவருத்து ஒதுக்கினான்? ஒரு காலத்தில், இவளைப் போல இருந்தவள்தான், அந்த நாதிராவும்! இன்றைக்கு இந்த வேட்டைக் கூட்டத்தின் தலைவியே அவள்தான்! அடியோடு மாறிவிட்டாள். இவள் எவ்வளவு நேரம் தாக்குப்பிடிக்கிறாள் என்று பார்க்கலாம்.

இவளும் மாறுவாள்! மாறித்தான் ஆக வேண்டும்! அவர்களுள் ஒருத்தியாக இவள் மாறியிருப்பதை அவள் கணவன் பார்க்க, ஆஹா, அப்போது அவன் முகத்தைப் பார்க்க வேண்டும்!

பார்க்க முடியுமா? இப்போதே, இவள் அழிவதைக் கண்டு ரசிக்கவே உட்கார்ந்திருக்க முடியாது போல, சோர்வு மீறுகிறதே! இனிப் பெரிதாக என்ன? இவர்கள் விரட்டுகிற பக்கம்தான் பின்னடைந்து போய்ச் சேருவாள்! அங்கே நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு, விக்கி காத்திருப்பான்! அப்புறம் அவ்வளவுதான்! சக்கையாகிப் போவாள்!

இருக்கட்டும்... முடிவை நாளையே பார்த்துக் கொள்ளலாம்! இப்போது உடனே போய் மருந்து எடுக்காமல் வலியும் சோர்வும் தாளாது!

மெல்ல எழுந்தாள் அவள்!

(தொடரும்)

**SMS**

''மன்னா... படைகள் தயார்!''
''அப்ப போருக்குக் கிளம்ப வேண்டியது தானே..?''
''நீங்க வேற... அவங்கவங்க ஊருக்குப் போகத் தயாரா இருக்காங்க!''

*- சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.*





# கண்ட நாள் முதலாய்...

உண்மையாகவே சைதன்யா பயந்து தான் போனாள். பயத்தைவிட அருவருப்பு அதிகம்! இந்த அளவுக்கு ஒரு பெண் செய்யக்கூடும் என்று அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

தன் மனதில் மனு இருப்பதால், தானே தான் தப்புத் தப்பாக யோசிப்பதாக அவள் நினைத்ததே தவறு; திரும்பத் திரும்ப நீதாவை நல்லவளாக்கி, ஒன்றும் தெரியாதவளாக்கி, முடித்ததுதான் தப்பு என்று இப்போது புரிந்தது. சற்று காலம் கடந்துவிட்டதோ என்று தோன்றுகிறது இப்போது!



மனம் மயக்கும் மலர் தொடர்

ரமணிசந்திரன் 22



**SMS**

''கனவுல அடிக்கடி ஒரு உருவம் வந்து என்னைக் கொல்லுது...''
''யாரு... எமனா?''
''இல்லை... தமன்னா!''
- தஞ்சை தாமு

நீதாவிடம் அவ்வப்போது காணப்பட்ட வக்கிரம்தான் நிஜம்! இப்போது அது முழு அளவில் சைதன்யா மீது பாய்ந்திருக்கிறது!

மனுவைப் பிரிவது என்று முடிவு செய்ததுமே, சொல்லாலும் செயலாலும் அவனை விட்டு அடியோடு விலகியவள் அவள். ஆனால், மனம் என்பது வேறு! மனதிலிருந்து அவனை ஒதுக்குவது முடியாத காரியம் என்றும் அவள் தெளிவாக உணர்ந்திருந்தாள். ஒதுக்கப் பிரியமும் இல்லை!

மானபரனை முதன்முதலாகக் கண்ட நாளில் இருந்தே, 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக' என்பார்களே... அது போல கொப்பும் கிளையுமாகச் செழித்து வளர்ந்த அன்பு!

அதைக் கெல்லியெடுத்துத் தூரப் போடுவது ஒருபோதும் முடியாது. அதைவிட உயிரை விடுவது, இலகுவாக இருக்கும்! எனவே, கடைசி வரை அவனது நினைவுதான் என்று அவள் முடிவே செய்திருந்தாள்.

ஆனால் நல்ல காலமாக, மனிதனின் மனதை அடுத்தவர் படிப்பது முடியாது! உள்ளத்தில் நிறைந்திருந்த நேசத்தை, அடுத்தவர் அறியாமல் பூட்டி வைக்கவும் முடியும். இரவில், யாரும் அறியாத தனிமையில் மட்டும்தான், அவனைப் பார்த்து பழகியது பற்றி ஒவ்வொரு சம்பவமாக அவள் நினைத்துப் பார்ப்பதே! கஞ்சனும் லோபியும், சேர்த்து வைத்த செல்வத்தைப் பிறர் அறியாமல், மீண்டும் மீண்டும் பார்த்து மகிழ்வதில்லையா..? அதுபோல!

மனித மனம்தானே? இது வளர முடியவில்லையே என்று ஏக்கமும் வரத்தான் செய்யும். ஆனால் வெகுவாக யோசித்து, அவளாக ஏற்ற துறவு! ஏங்குவது முட்டாள்தனம் என்று தன்னையே தேற்றியும் கொள்வாள்!

ஆனாலும், இன்னும் ஏக்கத்தை அதிகப்படுத்திக் கொள்வதற்கான வாய்ப்புகள் இல்லாமலும் பார்த்துக் கொண்டாள் சைதன்யா. அவனைப் பற்றிப் பேச்சு, தகவல்கள் அனைத்திலிருந்தும் அடியோடு விலகி, ஒதுங்கி விட்டாள். நினைவுகள் மட்டும்தான் அவளுக்கு.

ஆனால், அதுதான் தப்பாகிவிட்டதோ? அவனது திருமணம் பற்றிய முழு விவரமும் அறிந்திருந்தால், நீதா பற்றியும் தெரிந்திருக்கும். இவளது சங்காத்தமே வேண்டாம் என்று முதலிலேயே விலகிப் போயிருக்கலாம்!

இல்லை, இராது! அப்படி நேர்ந்திராது!

சிலரைப் போல, மனதை எல்லோரிடமும் கொட்டுவது, அவளால் முடியாது! பக்கத்தில் இருந்து பார்த்தால், பூபாலன் சில யூகங்கள் சரியாகவே செய்திருந்தபோதும், அவளாகத் தன் காதல் தோல்வி பற்றி யாரிடமும் சொல்லியிருக்க மாட்டாள். எனவே, நீதா தொடங்கிய இந்தத் தொடர்பு இப்படித்தான் முடிந்திருக்கும்!

ஆனால், இதில் பிழை நீதாவினதுதான்! எதற்காகவோ, கணவனுடைய பழைய காதலை அனாவசியமாகத் தோண்டி எடுத்து, இல்லாத நெருக்கத்தை உடைக்கிறேன் என்று இந்த அளவுக்குக் கொண்டுவந்துவிட்டாள்!

இந்தத் தருணத்தில், அந்த இடத்தில் நீதா இல்லாவிட்டாலும், இந்தக் கிறுக்குத்தனத்தின் சூத்ரதாரி அவள்தான் என்பது சைதன்யாவுக்கு முதலில் புரியவிட்டாலும், இப்போது நிச்சயமே!

மகா நல்லதனம் போலப் பூபாலனையும் சேர்த்து வரச் சொன்னாலும், மதுவை மேலே கொட்டி, அவனை இங்கிருந்து அகற்றியது, நிச்சயமாக அவளது வேலைதான்! தோழமை வட்டத்திடம் அவளது பார்வை சொன்ன சேதியும் இதுவேதான்.

சைதன்யாவைத் தனிமைப்படுத்தி மிரட்டுகிறாளாம்... அசிங்கம் பிடித்த மிரட்டல்! பெண்களும் சேர்ந்து கொண்டு! பெண்ணுக்குப் பெண் என்பதுகூட இல்லையே!

இதுவரையும் கூட, சைதன்யா ரொம்பப் பயந்துவிடவில்லை. இந்தக்கூத்து எப்போது முடியும் என்று அருவருப்புடன் கூடிய எரிச்சல்தான்! அதிகப்படியாக, பூபாலனுக்கு என்ன ஆயிற்றோ என்று அதுதான், சைதன்யாவைக் கலக்கியது! அவளைப் பற்றிய அக்கறையே இல்லாமல், அவன் எங்கேனும் உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருக்கமாட்டான்! அவளிடம் வரமுடியாத நிலை ஏற்பட்டிருக்க வேண்டும்! அது என்னவாக இருக்கும்?

'அது என்ன...' என்று அவனைப் பற்றி யோசிக்க இடமின்றி, அவளைச் சூழ்ந்து நின்றோரின் செயல்கள், மேலே மேலே அத்துமீறி அவளை மருட்டலாயின. சைதன்யாவை மிரட்டிக்



**SMS**

''தலைவருக்கு பித்த உடம்பு போலிருக்குன்னு எப்படிச் சொல்றே..?''

''அவருக்கு 'பீர்'பால் கதையைக் கேட்டா கூட போதை ஏறிடுதே..!''

- அனார்கலி, தஞ்சாவூர்.

கலங்க வைத்து, இனி மனுவை நெருங்காதே என்று விரட்டியடிப்பது நீதாவின் நோக்கம் என்றால், இப்போதே, அவளுக்குக் கிட்டத்தட்ட வெற்றிதான்!

தவறான முறையில் அவர்கள் தொடுவதும் தடவுவதும், அவளது உடலோடு மனதையும் கூசிக் கலங்க வைத்துவிட்டன! ஒரு திசையை மட்டும் விட்டுவிட்டு, மற்ற இடங்களில் அரண் அமைத்து அவர்கள் விரட்டிய விதம் வேறு, அந்தத் திசையில் என்ன பூதம் இருக்கிறதோ என்று அவளை அஞ்ச வைத்தது!

ஆனால் தெரியாத பூதத்திடம் மாட்டுவதை விட, அவர்களையே முட்டி மோதிக் கொண்டு வெளியேறிவிட்டால் என்ன என்று அவள் முயன்றதுதான், பெரிய பிழையாகிப் போயிற்று. பதினைந்து பேரை அவளால் மீற முடியாததோடு, அவர்களையும் தூண்டி விட்டது போலாகி, அவளது ஆடையிலேயே கைவைக்கத் துணிந்தனர்.

“இந்தத் தையல்காரி, அவள் தைத்தது உடம்பில் இல்லாமல் எப்படி இருக்கிறாள் என்று பார்க்கலாம்... பிறகு வசதியாகவும் இருக்கும்'' என்று கண் சிமிட்டி, பகபகவென்ற நகைப்புடன் அவர்கள் அதைத் தொடங்கவும்தான், இவர்களுக்கு எல்லையே கிடையாது என்று புரிந்து, சைதன்யாவின் உடம்பு நடுங்கத் தொடங்கியது!

குடி வெறி! நல்லது, கெட்டது பற்றிய அக்கறையே இல்லாத தன்மை. எப்படியும், இதைவிட, அந்தத் தெரியாத பூதம் பயங்கரமாக இராது! அவர்கள் விரட்டிய திசையில் விழுந்தடித்து ஓடினாள் சைதன்யா.

அவளுக்குப் பின்னே, பார்ட்டி ஹாலின் கதவை உட்புறமாக இழுத்துச் சாத்திவிட்டு, ''அப்பாடி... வேலை முடிந்தது! ஒரு போன் போட்டு வெற்றியைத் தெரிவித்துவிட்டு, இனிமேல், நம் ஆட்டத்தைத் தொடங்கலாம்!'' என்று தங்கள் உல்லாசங்களைத் தொடங்கியது, அந்தக் கூட்டம்.

**வெ**ற்றிச் செய்தியைக் கேட்டதும், அவளுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது! பழைய காலம் என்றால், செய்தி சொன்னவளுக்கு ஒரு கழுத்தணியையே பரிசு கொடுத்திருக்கலாம்! ஆனால் இன்றைய தேவைகளே



**SMS**

''தமிழ்நாட்டில் எத்தனை எம்.பி. தொகுதிகள் உள்ளன..?''

''நடிகைகள் 'த்ரி'ஷா, 'நயன்'தாரா... ரெண்டையும் சேர்த்துப் பாருங்க சார்..!''

- இ.தங்கமணி, நாமக்கல்.

வேறு அல்லவா? இன்று போல முக்குளிப்பதற்குத் தேவையான பணத்தை வாரி வழங்கினால், அதுவே போதுமானது. அதற்குத்தான் நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு, ஓடி வருவார்கள்!

சற்றுமுன் பார்த்த காட்சியை மனதுள் நினைவுபடுத்திப் பார்த்தாள்... இனித்தது. அதன் முத்தாய்ப்பைக் கற்பனை செய்து பார்த்தாள். ஓய்வாகப் படுத்திருக்க முடியாமல், உள்ளத்தோடு உடலும் விறுவிறுத்தது!

எடுத்திருந்த மருந்து தந்த அமைதியை மீறிக்கொண்டு!

நினைத்தது நடக்கிற மகிழ்ச்சியைச் சேர்ந்திருந்து கொண்டாட முடியவில்லையே என்று எரிச்சல் கூட வந்தது! ஆனால், அந்த எரிச்சலை மீறிய எக்களிப்பு! அவள் கணவனின் ரகசியம் கண்டறிந்து, அவன் வாழ்நாள் பூராவும் வருந்துவதற்கு ஏற்பாடு செய்துவிட்டாளே! அவள் எவ்வளவு கெட்டிக்காரி!

அவளுக்காகத் துக்கம் காக்க வேண்டியவன், அவன் மட்டும் ஒழுங்காக இருந்திருந்தால், அவளுக்கு இந்த நிலையே நேர்ந்திராது. விஷயம் அப்படியிருக்க, அவன் விடுதலை பெறுவதா? பெற விடுவதா? அவளுக்காக இல்லாவிட்டாலும், எதற்காகவோ துக்கப்படட்டும்! இப்போது, எப்படியும் துக்கப்படுவான்! அது அவளுக்குப் போதும்!


* ஏராளமான ஓவிய ஆசிரியர்களை உருவாக்கிய ஒப்பற்ற கலைக்கூடம்.
* பலரும் வேலைவாய்ப்பைப் பெற்றுள்ளனர்.

விவரப்புத்தகம் இலவசம்

அஜந்தாவின் அர்ப்பணிப்பில் உங்களையும் இணைத்துக் கொள்ளுங்கள்...

**ஓவிய ஆசிரியர் பயிற்சி**

வீட்டில் இருந்தபடியே தபால் மூலம் படிக்கலாம்.

**கல்வித் தகுதி - SSLC, +2**
ஆண்கள், பெண்கள் தனித்தனி வகுப்புகள்.
நேர்முகப் பயிற்சியும் உண்டு.

வரும் நவம்பரில் தமிழ்நாடு அரசுத் தொழில்நுட்பத் தேர்வு Free Hand Drawing Higher Grade தேர்வு எழுதி நீங்களும் ஓவிய ஆசிரியர் ஆகலாம்.

மேலும் விவரமறிய உங்கள் முகவரியை ஒரு தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள் அல்லது தொலைபேசியில் தெரிவியுங்கள் அல்லது SMS அனுப்புங்கள்
இலவச விவரப் புத்தகம் உங்கள் வீடுதேடி வரும்.

**AJANTHA SCHOOL OF ARTS**
(Govt.Regd.)
No.6, Muthu Nagar, Poonamallee, Chennai - 56.
Ph: 044 - 26490363, Cell: 93810 50477, 99403 90708.

வெற்றிகரமான 23-ஆம் ஆண்டில் ...

போதுமா?

போதாதுதான்! அவளுக்கு ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்தாலும் போதாதே! ஆனாலும் சிறு ஆறுதல்! பழி வாங்கிவிட்ட திருப்தி!

தையல்காரி இப்போது விக்கியிடம் என்ன பாடுபட்டுக் கொண்டிருப்பாள் என்கிற கற்பனையில் எழுந்த பரபரப்பை அவளது உடலால் தாங்க முடியவில்லை! இதயம் வெடித்துவிடும் போலத் துடிக்க, கைகால்கள் பதறி, எங்கெங்கோ இழுத்தன. இப்போது என்ன தேவை? என்ன தேவை?

அவசரமாக யோசித்து, இன்னும் ஒருமுறை மருந்தை எடுத்தாள்... உடல் உறுப்புகள் மெல்ல வசத்துக்கு வர, படுக்கையில் சாய்ந்தாள்.

**உ**டலும் மனமும் லேசாகிக் காற்றில் மிதக்கும் உணர்வைத் திருப்தியோடு அனுபவித்துக் கொண்டிருக்கையில் அவளது செல் ஒலித்தது!

தெளிவற்று மிதந்த எண்களை அலட்சியம் செய்து, ''யார்?'' என்று கேட்டால், பேசியவன் விக்கி!

என்ன இது? இப்போது இவன் எப்படி? அவள் யோசிக்கையிலேயே, ''என்னைத் தலையில் அடித்துவிட்டு, அந்தப்பெண் ஓடிவிட்டாள்! எனக்கு அவள் உடனே வேண்டும்! அவள் எங்கே?'' என்று அவன், அவளைக் கேட்டான்!

ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது அவளுக்கு! ஒரு வாரமாக, என்னமாகத் திட்டமிட்டு, எவ்வளவு ஏற்பாடுகள் செய்து, அவளை மனதிலும் உடலிலும் பலவீனப்படுத்தி, அவனிடம் சேர்த்திருக்கிறாள்! இனி வெற்றிதானே என்று சந்தோஷப்பட்டால், இவன் என்ன இப்படி உளறுகிறான்?

''என்ன உளறுகிறாய்?'' என்றுதான் அவனையும் கேட்டாள்.

''நான் ஒன்றும் உளறவில்லை. ஒற்றைக் கையால் இழுத்துப் போய்ப் படுக்கையில் போட்ட வேகத்தில், உருண்டு அந்தப் பக்கம் விழுந்தாள். தூக்கிப் போடலாம் என்று போனால், அதற்குள் எழுந்து எப்படியோ பின்பக்கமாக வந்து தலையில் அடித்துவிட்டாள். கொஞ்சம் கண்ணை இருட்டியதைச் சமாளித்துப் பார்த்தால், ஆளைக் காணோம். எனக்கு இப்போது...''

ஆத்திரத்துடன் கிறீச்சிட்டாள் அவள். ''அரட்டி மிரட்டி அரை உயிராக்கி, ஒரு பெண்ணை உன்



**SMS**

''எல்லாரும் வாக்கிங் போங்கன்னு தலைவர் சம்பந்தமில்லாம மேடையில உளர்றாரே...''

''இதுதான் அவரோட 'வாக்'குறுதியாம்!''

னிடம் கொண்டு சேர்த்தால், அவள் உன்னை அடித்துப் போட்டுவிட்டு ஓடிவிட்டதாகச் சொல்லுகிறாய்! நீ எல்லாம் என்ன ஆண்பிள்ளை?''

அவனுள்ளும் கோபம் கொதிக்க, "நான் என்ன மாதிரி என்று நம் கும்பலில் எல்லாப் பெண்களுக்கும் தெரியும். நீ உள்பட! ஆனால் அவளைப் பார்த்த பின், நீங்கள் எல்லோரும் எனக்குக் குரங்குகளாகத்தான் தெரிகிறது! எனக்கு அவள் வேண்டும். அவளை எப்படிப் பிடித்து இழுத்து வருவது? அதை மட்டும் சொல்லு, போதும்!'' என்றான் சுள்ளென்று.

குரங்கா? அவளையே ஒருவன் குரங்கு என்பதா? அதுவும் அந்தத் தையல்காரியோடு ஒப்பிட்டு? தாலி கட்டியவனும் இப்படித்தான் நினைத்திருப்பானோ என்று தோன்றவும் அவளுக்கு வெறியே பிடித்தது!

அவனோடு சேர்த்து, இவனையும் பழி வாங்க வேண்டும். அதோடு, காரியமும் முடிய வேண்டும்!

எப்படி?

அதற்குள் விக்கி பொறுமையற்றுப் பரபரத்தான். "அவள் எங்கே போவாள்? எங்கே இருப்பாள்? அவளைப் பற்றி உனக்குத்தானே தெரியும்? சொல்லு. சொல்லுடீ! சீக்கிரமாகச் சொல்லு!'' என்று கத்தினான்.


**43 ஆண்டுகளாக**
**காது கேளாதவர்களுக்கும் ஊமைத்தன்மை உள்ளவர்களுக்கும் சிகிச்சை அளிக்கிறார்!**



**டாக்டர்.சாமிகிரி சித்தர்**

காதில் வலியா? காதில் நரம்புத் தளர்ச்சியா?
சீழ் வடிகிறதா? சரியாக காது கேட்கவில்லையா? இரைச்சலா?

**காதுக்கருவி இல்லாமல் அறுவை சிகிச்சை இல்லாமல் 3 மணி நேரத்தில் காது கேளாதவர்களை காது கேட்கச் செய்கிறார்!**

ஊமைத் தன்மையுள்ள 7 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு 3½ வருட சிகிச்சையில் காது கேட்கச் செய்கிறார். வாயும் பேச வைக்கிறார். பரிசோதித்த பிறகு சிகிச்சைக்கு ஏற்கப்படுவர். ஊமைத்தன்மை உள்ளவர்களுக்கு சிகிச்சை பெற்ற உடனே முன்னேற்றம் தெரியும். இதுவரை பேசாத சில வார்த்தைகளை உடனே பேசுவார்கள்.

**டாக்டர் சாமிகிரி சித்தர்**
**காதொலி நிலைய சித்த மருத்துவமனை,**
சித்த மருத்துவர்கள்: S.கிரிவாசன் S.கிரிராஜன் S.அருணகிரி
(401), 383, கிராஸ்கட் ரோடு, காந்திபுரம், கோயமுத்தூர் – 641 012
போன்: 0422-4370303, 98942 58007,98422 22007

முன்பதிவு செய்யவும்
**பரிசோதனை நேரம்: மதியம் 2.00 to 4.00**


Dr.கிரிவாசன்


Dr.கிரிராஜன்


Dr.அருணகிரி

செல்லை ஓங்கி வீசத் தூக்கிய கையை நிறுத்தி, அவள் யோசித்தாள். அவளுக்கும் இப்போது வேலை நடக்க வேண்டும். அதன் பிறகு, இந்த விக்கி என்ன கதை ஆனாலும், அவளுக்கு ஒன்றுமில்லை.

சைதன்யாவை அழித்த பின், இவனை போலீசில் மாட்டி வைக்க பூபால் உதவுவான்...

"செக்யூரிட்டியைத் தாண்டி, எங்கே ஓடிவிடுவாள்? அந்த எல்லைக்குள்ளேதானே, எங்கேயும் அலைந்து கொண்டு இருப்பாள்? ஆட்டோ கிட்டே போய் விடாமல் கவனி. நாலுபேரைக் கூட்டிப் போய் பிடி. அதற்குமுன், அவள் முதுகெலும்பை, அதுதான், அவளுக்குத் துணை வந்தானே, அந்த பூபாலனை உடை! அவனுக்கு ஒன்று என்றால்தான், அவள் பணிந்து வருவாள். அவன் நினைவிழக்கும் வரை, நன்றாக அடி. குடித்துவிட்டு, உள்ளே வந்த காரில் விழுந்து விட்டதாகச் சொல்லி, அதுகள் வந்த ஆட்டோவிலேயே ஏற்றி அனுப்பு! அப்புறம் அவளைப் பிடித்து... எல்லாம் நான்தான் சொல்ல வேண்டுமா?''

மோப்பம் பிடித்தபின் விக்கி விடமாட்டான். தையல்காரி அப்படி ஒன்றும், அங்கிருந்து தப்பி விட முடியாது! வழி கேட்டுக் கொண்டே உள்ளே வந்த மாதிரி, வெளியே போவது எளிதில்லை. கேட் தாண்டவே முடியாது! கட்டாயம் விக்கியிடம் மாட்டிக் கொண்டு நாசமாவாள்!

ஒரு பலவந்தத்தில் இப்போது யார் வாழ்வும் அழிவது இல்லை என்றாலும், காதலனுக்காக மூன்று ஆண்டுகளுக்கும் மேலாகக் கன்னி விரதம் காக்கும் அவள் நிச்சயமாக உடைந்துதான் போவாள்! காதலியையே நினைத்து, மனைவியிடம் அடிபணியாது வாழும் அவள் கணவனும்!

அவளைக் குரங்கு என்ற இந்த நாயும், பூபாலனை அடித்ததற்கும் பெண்ணைக் கெடுத்ததற்காகவும் களி தின்னட்டும்!

அழியட்டும்! எல்லோரும் அழியட்டும்! ஒரே கல்லில் எத்தனை மாங்காய்!

கெட்டிக்காரத்தனமாகத் தனக்குப் பிடிக்காத அத்தனை பேரையும், ஒட்டுமொத்தமாகப் பழிவாங்கிவிடப் போகும் திருப்தியோடு, மறுபடியும் படுக்கையில் சாய்ந்தாள் அவள்!

(தொடரும்)



**SMS**

''மன்னர் தலைக்கனம் இல்லாதவர்னு எப்படிச் சொல்றே..?''

''கிரீடத்தைத்தான் அடகு வச்சிட்டாரே..!''

- சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.

# கண்ட நாள் முதலாய்...

இன்னமும் உடம்பு நடுங்கியது சைதன்யாவுக்கு! அடியோடு நம்பிக்கை இழந்துவிட்ட அந்த பயங்கரமான நிலைமையிலிருந்து மீண்டு வெளியே வந்துவிட்டதை, இன்னமும்கூட அவளால் முழுதாக நம்ப முடியவில்லை!

நீதாவுடைய தோழமைக் கும்பலின் பேய்க்கரங்களிலிருந்து தப்புவதற்காக ஓடியவள், ஒரு பேயனிடமே சிக்கிக் கொண்டாள். தெரியாத பூதம் என்று அவள் எண்ணியதே சரியாக, அவனும் பிசாசாகத்தான் இருந்தான்! இப்படியெல்லாம் ஆபத்து வரக்கூடும் என்றுதான், 'வராதே... வராதே...' என்று மனு அவ்வளவு சொன்னான் போலும்!

ஆனாலும், அவன் மனைவி இவ்வளவு மோசமா? இவளிடம், அவளுடைய மனு என்ன பாடுபட்டானோ? அன்றைக்கு, அப்படி இறுகிப் போனானே!

ஆனால் அதைப் பற்றியெல்லாம் அரை வினாடி நேரத்துக்கு மேலாக, அவளால் நினைக்கக்கூட முடியவில்லை! காட்டெருமை மாதிரி அந்தத் 'தெரியாத பூதம்' விரட்டியது!

சைதன்யா தைரியசாலிதான்... உடலில் வலுவும் இல்லாதவள் அல்ல! ஆனால் சற்றுமுன் நேர்ந்த அனுபவத்தால், அவள் வெடவெடத்துப் போயிருந்தாள். அச்சத்தால் உடலும் மனமும் பலவீனப்பட்டுப் போயிருந்த நிலையில், முட்டு மாடாகத் துரத்தியவனிடம் இருந்து தப்பிப்பது அவளால் இயலாத காரியமாக இருந்தது!

மனம் மயக்கும் மலர் தொடர் **23** **ரமணிசந்திரன்**

அப்படி அவள் பலமிழந்து போகவேண்டும் என்பதற்காகத்தான் அந்தக் கூட்டம் அப்படிப் பேயாட்டம் போட்டதா? இதைத் திட்டமிட்டவள் எவ்வளவு வக்கிரம் பிடித்தவளாக இருக்க வேண்டும்? பாவம் மனு! மீண்டும் மானபரனுக்காக இரங்கியவள், தானே இரக்கப்படும்படியான நிலையில் மாட்டினாள்.

கையில் பிடிபட்டுவிட்டவளைக் கெக்கலி கொட்டியவாறு அவன் தூக்கிப் போட்ட வேகத்தில், உருண்டுபோய் மறுபுறம் விழுந்தாள் அவள். பதறி, உதறிய கைகால்களைக் கட்டுப்படுத்தி, மனதின் பிடிவாதத்தினாலேயே எழுந்து பார்த்தால், முட்டிமாடு தள்ளாடி விழுந்து கொண்டிருந்தான்!

அவன் பின்னால்... அவளுடைய மனு!

தன் கண்களையே நம்ப முடியாமல், அவளுமே தள்ளாடி விழத்தான் போனாள்! கையிலிருந்த கட்டையை வீசிவிட்டு, ஒரே தாவலில் வந்து அவளைத் தாங்கிப் பிடித்தான் மானபரன்.

ஆனால், அவளை ஆசுவாசப்படுத்திக் கொண்டிருக்கவில்லை. லேசாகக் கன்னத்தைத் தட்டி விழிப்புணர்வை ஏற்படுத்தி, "பார் சது, இது மோசமான இடம்! யாருக்கும் சந்தேகம் வருமுன் நாம் இங்கிருந்து தப்பியாக வேண்டும். இந்தக் காட்டான் கூட சீக்கிரமே விழித்துவிடக் கூடும். அதனால் சத்தமின்றி என்னோடு வா... முடிந்த வரை வேகமாக!" என்றவாறு கீழே கிடந்த அவளது கைப்பை, ஃபோல்டரை எடுத்துக்கொண்டு, அவளை வழிநடத்திக் கட்டிடத்தின் பின்புறமாகக் கூட்டிச் சென்றான்.

செடிகொடிகளின் நடுவே வேகமாக அழைத்துப் போனவன், "ஏதாவது சலசலப்பு தெரிந்தால்கூட சத்தம் எழுப்பிவிடாதே, சது! யாரிடம் என்ன மாதிரி எச்சரித்து வைத்திருக்கக்கூடும் என்று தெரியாது. அதனால் ஓசையே கூடாது, ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தான்.

எலியோ, பாம்போ, ஏதேதோ விலகிப் போவது போல அரவம் தெரிந்தபோதும், அவர்கள் சற்றும் தயங்கி நிற்கவில்லை! பாம்பை விடக் கொடியது, கட்டிடத்தில் இருந்ததே! தாவரங்களின் மறைவிலேயே சில நிமிஷங்கள் விரைந்து சென்ற பின், எதிரே உயரமான சுற்று மதிலைக் காணவும் சைதன்யா கலங்கிப் போனாள். இதை எப்படித் தாண்டுவது? மன

**SMS**

‘‘இவர் மெகா சீரியல் தயாரிப்பாளராம்னு சந்தேகமா இருக்கு...’’

‘‘ஏன் சார்..?’’

‘‘கதையை ரெண்டு வரியில சொல்லச் சொல்றாரே!’’



தில் நம்பிக்கை சிறிதளவும் தோன்ற மறுத்தது! மாட்டிக் கொள்ளத்தான் போகிறோம் என்று ஓய்ந்து, தொய்ந்தாள் அவள்.

ஆனால், அவளது கரத்தைப் பற்றி அவன் சொன்னான்... "இப்போதைய நிலையில் உன்னால் இதில் ஏற முடியாது. தெரியும். நான் உதவி செய்கிறேன்" என்றபடி, அருகிருந்த சிறுமரத்தின் மூலமாக மதிலில் ஏறி, அவளுக்குக் கை கொடுத்து ஏற்றி, மறுபுறம் இறக்கியும் விட்டான்.

''இது வேறு ஒருவரின் சவுக்குத் தோப்பு. இதற்கு வெளியேதான் நம் கார் நிற்கிறது. அங்கத்தினர் சொல்லாமல் அங்கே யாரையும் உள்ளே விட மாட்டார்கள். விட்டாலும், உன்னை மறைத்துக் கூட்டிச் செல்வது கடினம் என்பதால்தான் இந்தப் பக்கமாக..." என்று விளக்கியவாறு அவளைக் கூட்டிப் போய்க் காரில் ஏற்றினான்.

**கா**ரை சற்று நேரம் ஓட்டி, பெரிய சாலையிலும் ஏறிச் செல்லத் தொடங்கவும், சைதன்யா விறைப்புற்று நிமிர்ந்தாள்.

"என்ன?"

"பூபால்... எனக்குத் துணையாக வந்து, அவன் அங்கே மாட்டிக் கொண்டானே!'' என்றாள் குரல் பதற.



''பைனாகுலரை வச்சிக்கிட்டு உங்க அம்மா என்னடா பாக்கறாங்க..?''
''எட்டு மைல் தூரத்துல ஒரு அழகான பொண்ணு இருக்குன்னு தரகர் சொல்லிட்டுப் போனாராம்!''

SMS

"அவனுக்காக இப்போது திரும்பிச் சென்று, உன்னை பலி கொடுக்க முடியாது, சைதன்யா! பூபாலனுக்கு எதுவும் ஆகாது. உனக்கு உதவிக்கு வர முடியாமல், ஏதேனும் கொடுத்து மயங்க வைத்திருப்பார்கள். உங்கள் வழக்கமான ஆட்டோவில் தானே வந்தீர்கள்? உங்கள் ஆட்டோ ஓட்டுனருக்குத் தெரியும் என்பதே பூபாலுக்குப் பாதுகாப்பு! பயப்படாதே..!" என்றான் மானபரன்.

சற்று இறுக்கம் தளர்ந்து சாய்ந்தால், கைப்பையுள் அவளது செல் ஒலியெழுப்பி, அவளை மறுபடியும் விறைப்புற்று நிமிர வைத்தது. தயக்கத்துடன் செல்லை எடுத்துப் பார்த்துவிட்டு, "தெரியாத எண்...'' என்றாள் சைதன்யா.

''செல்லை அணைத்து வைத்துவிடு. அவர்களாகத்தான் இருக்கும். ஏதாவது பொய் சொல்லி, உன்னைத் திரும்பப் பிடிப்பதற்கான முயற்சி!" என்று மானபரன் கூறவும், தீச்சுட்டது போல செல்லை உடனே அணைத்துக் கைப்பையுள் போட்டாள் அவள்.

தன்னையறியாமல், அவனை நெருங்கி அவள் அமர, காரை ஓரமாக ஒதுக்கி

நிறுத்தினான் மானபரன். சற்று நேரம் எதிரே வெறித்தவன், திடுமென, "என்ன மடத்தனம் செய்தாய், சது?" என்று தணிந்த குரலில் வினவினான்.

அவள் திடுக்குற்று நோக்கவும், திரும்பி, "எனக்கு எல்லாம் தெரியும். அப்போதே கூட சந்தேகப்பட்டு, உன்னிடம் கேட்டேனே! எனக்காகத் தியாகம் செய்வதாக எண்ணுகிறாயா, அப்படி நினைத்துப் பேசாதே என்றெல்லாம் சொன்னேனே! மறுத்து, என்னென்னவோ சொல்லி, இருவர் வாழ்வையும் வீணாக்கி விட்டாயே!" என்றான் வருத்தத்துடன்.

உண்மைதான். என்னென்னவோ சொன்னாள்தான். பெயருக்கேற்றபடி மானரோஷம் அதிகம் உள்ளவனிடம், 'இவ்வளவு நாள், கடுகையும் சீரகத்தையும் எண்ணிப் போட்டு சமைக்கிற வாழ்வு வாழ்ந்துவிட்டேன். இனியாவது நல்ல வாழ்வு வாழலாம் என்று நினைத்து உங்களோடு பழகினால், இப்படி வந்து நிற்கிறீர்களே! நாம் இருவரும் பிரிந்து, அவரவர் வாழ்வை உயர்த்திக் கொள்வதுதான் மேல்!' என்று நேரடியாக அவனிடம் சொன்னாள்தான்!

ஆனால், அவள் அப்படிச் சொன்னதன் காரணம்,

**SMS**

''உங்க டேபிள்ல இருந்த இந்த டானிக் ரொம்ப காரமா இருக்கு டாக்டர்...''

''யோவ்... அது நான் சாப்பிடறதுக்காக வச்சிருக்கற ஊறுகாய்யா...!''

**- ஏ.நாகராஜன், சென்னை-75.**



அவன் முதலில் ஊகித்தது போல, அவனுக்காகவே தான்!

'தொழிலில் ஒரு சிறு சரிவுக்காக, ரொம்பப் பணக்காரப் பெண்ணை மணக்கும்படி என் வீட்டில் பேச்சு வருகிறது. வீட்டை விட்டு வந்துவிடுகிறேன். நாம் மணந்துகொண்டு, அப்புறமாக உழைத்து, என் பெற்றோர் நிலையை உயர்த்தலாம்' என்று அவளை நாடி அவன் வந்தபோது, சைதன்யா அப்படிச் சொன்னது, அவனை ரொம்பவே பாதித்துவிட்டது. முதலில் அவளது பேச்சை நம்பாவிட்டாலும், அவள் அலுப்புக் காட்டி, அழுத்திச் சொன்ன விதம், அவனை நம்ப வைத்தது. பலனும், அவள் எதிர்பார்த்தபடிதான்!

நிலையிறங்கி வந்ததால் வேண்டாம் என்கிறாள் என்ற உறுதியாகத் தோன்றும்படி அவள் கூறியது வலிக்க, அந்த ரோஷத்தோடு சென்று பெற்றோர் சொன்ன பெண்ணை மணந்துகொண்டான். அவனது பொருளாதார நிலையும் மோசமாகாது; 'மஞ்சள் கயிறு மேஜிக்'கில் வாழ்க்கையும் நன்றாகிவிடும் என்று எண்ணினாள்.

ஆனால், அவள் எதிர்

பார்த்த மாதிரி அவன் நன்றாக இருக்கவில்லை என்பதுதான் சோகம்! நீதா இப்படி இருப்பாள் என்றும் அவள் நினைத்ததில்லை! நீதா போன்ற ஒரு மனைவியோடு அவன் துன்புற, அவளல்லவா காரணமாக இருந்துவிட்டாள்!

ஆனால் இது நடிப்பதற்கான நேரம் அல்ல!

''எல்லா சுகங்களையும் இழந்து, நீங்கள் ரொம்பக் கஷ்டப்படப் போகிறீர்கள் என்று தெரிந்ததால், அது தாங்காமல்...''

''என்ன கஷ்டம்? எது கஷ்டம்? சுவரை விற்று யாரேனும் சித்திரம் வாங்குவார்களா? நீ இல்லாமல் இந்த உலகமே கிடைத்தாலும் எனக்கு என்ன பயன், சொல்லு? ஆனால், நீ நினைத்த அளவு சரிவும் கிடையாது! இதில் பெரியவர்களின் சூழ்ச்சியும் இருக்கிறது! என்னைப் பிடித்திருப்பதாக மகள் சொன்னாள் என்று, நீதாவுடைய தந்தை என் பெற்றோரை நெருங்கியிருக்கிறார். தொழிலில் சிறு சரிவு நேரம் அது. நீதா வீட்டுப் பணமும் செல்வாக்கும் சரிவைச் சீர் செய்துவிடுமே என்பது என் பெற்றோருக்கு! இரு வீட்டுப் பெரியவர்களுமாகத் துரும்பைத் தூணாக்கி, நான் நடுத்தெருவில் நிற்கப் போவது போல உனக்குக் காட்டி, உன்னை மருட்டிவிட்டார்கள். ஆனால் அதற்காக என் பெற்றோர், நீதாவிடம் நன்றாகவே அனுபவித்தும் விட்டார்கள். உன் வாழ்வையும் கெடுத்து, எங்களுக்கும் கேவலத்தைத் தேடிக் கொண்டோமே என்று இப்போது வேதனைப்படுகிறார்கள். காலம் கடந்த ஞானோதயம்..!'' என்றான் அவன் கசந்த குரலில்.

இப்போது என்றால்.... மனு, பெற்றோரிடம்தான் போயிருந்தானா?

''நீங்கள் ஊரில் இல்லை என்று அனுசூயா ஆன்ட்டி சொன்னார்கள்...''

''ஆமாம். சும்மாவே சந்தேகம். அன்று பூபாலனை மணப்பதற்கு இல்லை என்று காரணம் சொன்னாய் அல்லவா? தெளிவாகிவிட்டது. பின்னணியில் என்ன நடந்து, நீ விலகினாய் என்று விவரம் தெரிந்து கொள்ளத்தான் அப்பாவிடம் போயிருந்தேன். அவர்கள் வருத்தப்படுவது தாங்காமல் கூடுதலாகச் சில நாட்கள் தாங்கினேன்...''

''எப்படியோ சமயத்தில் வந்தீர்களே!'' என்று உடல் சிலிர்த்தாள் சைதன்யா.

''நானாக எங்கே



''குத்துப்பாட்டு தெரியும்... இது என்ன 'கொத்து' பாட்டு?''
''புலவர் இதற்குமுன் புரோட்டா கடையில் மாஸ்டராக இருந்தவர் மன்னா...!''
- பிரியதர்ஷன், சேலம்.

SMS

வந்தேன்? ஆன்ட்டி... நீதாவு டைய தாயார் கூப்பிட்டு, 'இந்த மாதிரி நீதா அழைத்திருக்கிறாள், இவர்களும் நம்பிப் போகிறார்கள். பயமாக இருக்கிறது' என்று உடனே வரச் சொன்னார்கள். மகளின் மூர்க்கம் பற்றித் தெரிந்தவர்கள். ஏதோ கெடுதல் செய்யப் போகிறாள் என்று ஊகம்! அவர்களுக்குக்கூட நீதா இந்த அளவு மோசம் என்று தெரியாது! எனக்கு ஓரளவு தெரியும் என்றாலும், அவர்களிடம் சொல்லவில்லை. சும்மாவே நொந்து போயிருப்பவர்கள். இது வேறு ஏன் அதிகப்படித் துன்பம் என்று நினைத்து விடுத்தேன்! தன் மகளால் எனக்குத் துன்பம் என்று, ஆன்ட்டிக்கு எப்போதுமே என் மேல் பரிவு, பாசம்!"

யோசனையோடு அவன் முகத்தைப் பார்த்தாள் சைதன்யா. "மனு..." என்று மெல்ல அழைத்து, "ஒரு வேளை... ஒருவேளை, நாம் ஒருவரை ஒருவர் அறியாமல் இருந்திருந்தால், நீதாவை சமாளித்து... நீதாவோடு நல்லபடியாக வாழ்ந்திருப்பீர்களோ என்று... அப்படித் தோன்றுகிறது, மனு" என்றாள் சின்னக் குரலில்.

லேசாகத் தோளைக் குலுக்கினான் மானபரன். "நானும் கூட இதுபோல நினைத்ததுண்டு, சது. நினைத்து, முயற்சி செய்ததும் உண்டு! ஆனால் தன் மானம் உள்ள எவனாலும், அவளைச் சகித்து வாழ முடியாது சைதன்யா. உச்சி முதல் உள்ளங்கால் வரை ஒரே வக்கிரம்! உன்னைத் தேடிக் கண்டுபிடித்திருப்பதைப் பாரேன்! நான் குளித்து வருகிற நேரம், என் அறைக்கு உன்னை அனுப்பியது. அளவெடுக்கச் சொன்னது... நீ தைத்து வந்த ஷர்ட் எவ்வளவு அழகாக இருந்தது! பிடித்ததாகச் சொன்னால் நாசப்படுத்தி விடுவாளோ என்றுதான், 'பிடிக்கவில்லை' என்றேன். ஆனால், அதையும் கண்டுகொண்டு என்ன செய்தாள், பார்! இன்னும்..."

அவனது உதடுகளின் மீது விரலை வைத்து, "போதும், மனு!" என்றாள் அவள். "இந்த மாதிரி வாழ்வுக்குள் உங்களை விரட்டினேனே! அதுதான் வேதனையாக இருக்கிறது... ஆனால், அவளுக்கும் ஏதோ உடம்பு சரியில்லை என்று தோன்றுகிறது மனு. ஆன்ட்டி மூலமாகவேனும் சொல்லிப் பாருங்கள். ரொம்ப மெலிந்துகொண்டே போகிறாள்..."

"ஏதோ உடம்பு சரி

**SMS**

''சார்வா... என்னப்பா பூரி இப்படி இருக்கு..?''
''நீங்க நேத்தே சாப்பிட வராதது உங்களோட தப்பு... அதுக்கு நான் என்ன சார் பண்றது?''

**- டி.வி.ரமா, செங்கை.**



யில்லை. வைத்தியரிடம் போகிறாள் என்கிறவரை எனக்குத் தெரியும்... ஆன்ட்டிக்கும்! ஆனால் அவள் யார் சொல்லியும் கேட்கிற ரகம் இல்லை... என்ன என்று கேட்டால், சொல்கிற தினுசும் கிடையாது! தன்னலம் மிக அதிகம் என்பதால், தன்னைப் பார்த்துக் கொள்வாள் என்பது தான் எங்கள் கருத்து. ஆனால் இந்த அளவுக்கு உன்னிடம் நடந்தாளே என்பதுதான் ஆ...த்திரமாக... போகட்டும். இனி அவள் உன்னை நெருங்காமல், பார்த்துக் கொள்கிறேன். ஆனால், நீயும் எச்சரிக்கையுடனேயே இரு! இந்த மாதிரி அவசரப்பட்டுத் தெரியாத எங்கேயும் செல்ல வேண்டாம். நினைவிருக்கும்தானே? என்ன?'' என்று கேட்டான் மானபரன்.

கண்களில் நீர் மல்கத் தலையாட்டினாள் சைதன்யா. இந்த அக்கறைக்குக் கொடுத்து வைத்திருந்தும், மேதாவி போலக் கெடுத்துக் கொண்டாளே! இனி கொடும் பாலை வாழ்வு என்று முன்னே நினைத்ததெல்லாம் நினைவு வந்தன.

மானபரனுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு, அவனது காரின் பின்புறச் சிவப்பு விளக்குகள் கண்ணுக்கு மறையும் மட்டும் பார்த்துக் கொண்டு நின்றாள் அவள்.

யாரோ செல்லில் உரக்கப் பேசிச் செல்வது கேட்டது. அவளது செல்லை அணைத்துவிட்டிருந்தாளே! யாராவது, ஏதேனும் முக்கிய விஷயத்துக்காக போன் செய்தால்? மனுவே எதற்காகவேனும் அவளை அழைத்தால்? அவசரமாக செல்லை உயிர்ப்பித்தாள்.

அதற்காகவே காத்திருந்தது போல, செல் பாடத் தொடங்கியது. தயக்கத்துடனேயே எடுத்துப் பார்த்தால், அவர்கள் அன்று பயன்படுத்திய ஆட்டோவின் ஓட்டுனர்! பூபாலன் அடிபட்டு மருத்துவமனையில் கிடக்கிறான் என்றார் அவர்.

மருத்துவமனையின் பெயரைச் சொல்லிவிட்டு, "கொஞ்சம் பணம் எடுத்துக்கிட்டுச் சீக்கிரமாக வாங்கம்மா. அடி ரொம்பப் பலம்னு டாக்டர் சொல்றாரு!'' என்றார் அவர்.

ஓடிப்போய்த் தந்தையிடம் சொல்லிவிட்டு, வீட்டில் இருந்த பணத்தை எடுத்துப் பைக்குள் வைத்தபடியே படியிறங்கிய சைதன்யா சட்டென நின்றாள்.

மனு அவளை எச்சரிக்கையோடு இருக்கச் சொல்லவில்லை..?

(தொடரும்)

**SMS**

''என் வீட்ல மனைவிதான் துவைப்பா, சமைப்பா, பாத்திரம் கழுவுவா... உன் வீட்ல?''
''உன்னை மாதிரி நான் போய் சொல்ல விரும்பலை...''
- ஆ.பேச்சியப்பன், ராஜபாளையம்.

சைதன்யா தயங்கி நின்றது சில கணங்களே.

ஆட்டோ ஓட்டுனர் பொய் சொல்வதற்கு இல்லைதான்... நல்லவரும் கூட! என்றாலும் அன்றைய அனுபவங்களின் காரணமாக, அவளால் யாரையும் முழுமையாக நம்ப முடியவில்லை. எப்படி நம்புவது? திரைப்படங்களில் வருகிற மாதிரி, ஆட்டோகாரரையே கழுத்தில் கத்தியை வைத்து மிரட்டி, இப்படிச் சொல்ல வைத்திருந்தால்? எவ்வளவு நல்லவரானாலும், அந்த நேரத்தில் ஏவியதைச் செய்யத் தானே வேண்டியிருக்கும்?

சாதாரணமாக அவள் இது போலெல்லாம் கற்பனை செய்வது இல்லைதான். ஆனால், அன்று நம்பக்கூடாத பயங்கரம் என்று, உலகில் எதுவும் இல்லை என்பது போன்ற உணர்வு அவளுக்கு! ஆனால் பூபாலனுக்கு அடிபட்டிருந்தால், அவனுக்குத் தேவையானதைச் செய்யாமல் அவளால் இருக்க முடியாது... கூடாது! அதோடு அந்த அடியே, அவள் காரணமாகவேகூடப் பட்டிருக்கலாம்!

அவசரமாக யோசித்து, ஆட்டோ ஓட்டுனர் சொன்ன மருத்துவமனையைத் தொடர்பு கொண்டு விசாரித்தாள். பூபாலன் என்கிற ஓர் இளைஞன்



ஆபத்தான நிலையில் அங்கே சிகிச்சைக்காகச் சேர்க்கப்பட்டிருப்பது உறுதியாயிற்று.

போய்த்தான் ஆக வேண்டும். ஆனால் பூபாலனின் நிலைமை பற்றி அங்கே சொன்ன விவரம், கையில் இருந்த பணம் போதுமா என்ற ஐயத்தைக் கிளப்பியது! உடனே இலியாசை அழைத்து விவரம் தெரிவித்தாள். அவனிடம் இருந்த பணத்தோடு, அவனும் கிளம்பி வர, இருவருமாக மருத்துவமனையை நாடி விரைந்தனர்.

**ஆ**ட்டோ ஓட்டுனர் பாவம்... பூபாலனுக்காக மருத்துவமனையிலேயே காத்துக் கிடந்தார்.

''குடிகாரப் பசங்க, சார். அவனுங்களால நேரே நிற்கக் கூட முடியலை! இவரைக் கொண்டுவந்து ஆட்டோவிலே போட்டுவிட்டு, பூபால் தம்பி குடித்துவிட்டுக் காரிலே விழுந்துவிட்டதா சொன்னானுங்க. பொய்! நம்ப தம்பியை எனக்குத் தெரியாதா? ஏதோ சண்டையிலே அடித்துவிட்டு, இப்படி மாத்திச் சொல்கிறாங்கன்னு தெரிஞ்சுது! 'யாருடா குடித்திருக்கிறது'ன்னு சண்டை போடலாம்னு பார்த்தேன். ஆனா அவங்க நாலைந்துபேர். குடிவெறி வேறே! அதோட, பூபால் தம்பிக்கு ரத்தமா கொட்டுது. முதலிலே ஆஸ்பத்திரியில சேர்க்கணும்னு கூட்டியாந்தேன். இங்கே உள்ள ஒரு டாக்டரு தெரியும். 'பணத்தை எப்படியும் கட்டிவிடுவாங்க'ன்னு சொல்லி வைத்தியம் செய்யச் சொன்னேன்!" என்றார் அவர்.

அவரது கையைப் பற்றி நன்றி சொல்லிவிட்டுப் பணத்தைக் கட்டப் போனான் இலியாஸ்.

"என்னம்மா ஆச்சுது? ரெண்டு பேருமா வந்தீங்களே, உன்னியக் காணோமேன்னு... அது வேறே கவலை எனக்கு! அதான் முதலிலே உனக்கு போன் போட்டுப் பார்த்தேன்..."

செய்தி ருக்கிற பேருதவிக்கு, ஓரளவேனும் விவரம் சொல்லித்தான் ஆக வேண்டும்!

"நீங்களே சொன்னீர்களே, ஆட்டோகாரர்! அது ரொம்ப மோசமான குடிகாரக் கும்பல். குடிவெறியிலே தகராறு பண்ணினார்கள். ஆளுக்கொரு பக்கம் போனதில், நான் தப்பிவிட்டேன். பாவம், பூபால் மாட்டிக் கொண்டான் போல! அவனைக் கூட்டிவந்து இந்த மருத்துவமனையில் சேர்த்ததற்கு நன்றி, ஆட்டோகாரர்!" என்றாள் சைதன்யா.

"எனக்கு இன்னாத்துக்கும்மா நன்றியெல்லாம்! ஏதோ மனுஷாளுக்கு மனுஷாள் நம்மாலான உதவி... என்னா மாதிரி பாடுபட்டு

''**உ**ங்க வீட்டுக்காரர் சாப்பாட்டு விஷயத்துல ரொம்ப கண்டிப்பானவராமே..?''

''அதை ஏன் கேக்கறே... காக்காய்க்கு சோறு வைக்கும்போதுகூட, அதுகிட்ட டோக்கன் கேக்கறாரு!''



SMS

உழைக்கிறீங்கன்னு, நானும் பார்த்துகிட்டுத்தானேம்மா இருக்கேன். நல்ல பிள்ளை! இந்தத் தம்பியைப் போய் அடித்துப் போட்டு விட்டானுகளே! கீழே விழுந்து கிடந்த புள்ளையை, பூட்சு காலாலே உதைச்சிருக்கானுங்களாம்! அதிலே நெஞ்சாங்குழி எலும்பு ரெண்டு உடைஞ்சிட்டதாம்! 'அடி பலம்தான்னாலும், உசிரைக் காப்பாத்திரலாம்'னு நம்ம டாக்டரு சொன்னாரு. அவரு புள்ளைங்களை நான்தாம்மா இஸ்கூலுக்குக் கூட்டிப் போய் இட்டாரேன்! அதான் இங்கிட்டுக் கூட்டி வந்தேன்! இல்லாட்டி ஆஸ்பத்திரியிலே அடிதடி கேசுகளைப் பாக்க மாட்டேன்னு சொல்வாங்களாமே!"

ஆமாம்... அதுவும் உண்மைதான்! ஆனாலும் உதவி எங்கெங்கிருந்து, எப்படியெப்படி வருகிறது! இந்த ஆட்டோ ஓட்டுனர் மட்டும் சரியாக யோசித்துச் சட்டெனச் செயல்படவில்லை என்றால், பூபாலனின் நிலைமை என்ன ஆகியிருக்கும்? எண்ணிப் பார்க்கக்கூடச் சைதன்யாவுக்கு அச்சமாக இருந்தது!

**ப**ணத்தைக் கட்டிவிட்டு இலியாஸ் வர, ஆட்டோ ஓட்டுனருக்கு மறுபடியும் நன்றி கூறி அனுப்பிவிட்டு, இருவருமாகப் பூபாலனைப் பார்க்கப் போனார்கள். முகம், உடலெங்கும் கட்டுகளோடு, ஒருபுறம் ரத்தம் இறங்க, அவனைப் பார்க்கவே பயமாக இருந்தது! மிகவும் கவலையாகவும்...

ஆட்டோகாரர் சொன்னது போல மார்பு எலும்புகள் இரண்டு உடைந்திருந்தபோதும், இதயத்துக்கு எந்தவிதப் பாதிப்பும் இல்லாததால் பிழைத்திருக்கிறானாம்!

இரக்கமற்ற பாவிகள்... இவர்களில் நீதாவும் ஒருத்தி என்றால்? 'கடவுளே' என்று மனுவைப் பற்றிக் கவலைப்படத் தொடங்கினாள் சைதன்யா!

"நல்லவேளை... பூபாலுக்குப் பெற்றோர் இல்லை. அவர்கள் உயிருடன் இருந்து இப்போது பார்த்தால், தாங்கிக் கொள்ளமாட்டார்கள்!" என்றான் இலியாஸ்.

"ஆமாம்ப்பா!" என்று வேதனையோடு மனம்உருகி நின்ற அப்போது, சைதன்யாவுக்கு ஒன்று தோன்றியது!

பெற்றோர் மட்டும்தானா தாங்க மாட்டார்கள்? இலியாஸ் பூபாலிடம் அமர்ந்திருக்க, அவள் வெளியே போய் மனோகரிக்கு போன் செய்தாள்.

"எனக்கு ஓர் உதவி செய், மனோகரி. பரிமளாக்காவின்

''**அ**மைச்சரே... நம் யானை ஏன் நூல்கண்டு விற்கும் கடைகளைக் கண்டால் நின்றுவிடுகிறது?''

''என்ன செய்வது மன்னா... அதுதான் 'பட்டத்து' யானை ஆயிற்றே!''

**- பி.என்.நரசிம்மமூர்த்தி, சென்னை-33.**

**SMS**

செல் தொடர்பு எனக்குக் கிடைக்கவில்லை. நின்று, நிதானமாக முயற்சி செய்துகொண்டிருக்கவும் எனக்கு நேரம் இல்லை. இங்கே பெரிய விபத்து! அக்காவுக்கு போன் செய்து, இந்த விவரம் சொல்லி விடுகிறாயா? பூபாலுக்கு பெரிதாக அடிபட்டிருக்கிறது. எலும்பு முறிவு, காயம் எல்லாம்! சுய நினைவற்றுக் கிடக்கிறான்...” என்று மருத்துவமனையின் பெயர், இருப்பிடம் சொல்லிவிட்டுச் சட்டெனப் பேச்சைக் கத்தரித்தாள்.

> ‘‘கபாலி இந்திப்படத்துல ஒரு சீன்ல நடிக்கறானாம்...’’
> ‘‘அதுக்காக அவன் வீட்டுக்கு முன்னால, ‘கபாலி வுட்’னு போர்டு வைக்கறது ரொம்ப ஓவர்!’’
> **- சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.**
> **SMS**



‘அந்த மாதிரி’ அன்பு இல்லையாமா? அது இருப்பதும் இல்லாததும் இப்போது தெரிந்து விடும்! அதிக நேரம் வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருக்க நேராமல், சைதன்யா எதிர்பார்த்ததை விடவும் சீக்கிரமாகவே மனோகரி வந்துவிட்டாள்! எப்போதுமே அலங்காரம் என்று மனோகரி பெரிதாக எதுவும் செய்கிறவள் அல்ல. இப்போது படு சுத்தம்! தூங்குவதற்காகப் படுத்திருந்தாளோ என்னவோ? அதனால் கலைந்திருந்த கூந்தலைக்கூட அவள் வாரி விட்டிருக்கவில்லை!

நைட்டியை மட்டும் அவசரமாக மாற்றியிருக்கிறாள்... மிக அவசரமாக! சல்வார் செட்டில் ஒன்றுமே, மற்ற எதற்கும் பொருத்தமாக இருக்கவில்லை. கைக்குக் கிடைத்ததை எடுத்து அணிந்துகொண்டு ஓடி வந்திருக்கிறாள்!

ஜன்னல் வழியே பார்த்துக்கொண்டிருந்ததால், மனோகரி ஆட்டோவிலிருந்து இறங்கி உள்ளே வரும் முன்பாகவே சைதன்யா வெளியே வரவேற்பு ஹாலுக்குப் போய்விட்டாள். சைதன்யாவைப் பார்த்ததும், அலையக் குலைய அவளிடம் ஓடி வந்தாள் மனோகரி.

“அ... அவருக்கு எப்படி இருக்கிறது?” என்று மூச்சு வாங்கப் பேசினாள் அவள்.

அவளை ஆச்சரியமாக நோக்கி, “யாருக்கு? ஆனால், நீ இங்கே எங்கே வந்தாய்? நீ இங்கே என்ன செய்கிறாய் மனோகரி?'' என்று வியந்த குரலில் கேட்டாள் சைதன்யா.

“அக்கா, ப்ளீஸ்..! முதலில் அவருக்கு எப்படி இருக்கிறது என்று சொல்லுங்கள்... அப்புறம் என்ன வேண்டுமானாலும் கேளுங்கள்!” என்று இறைஞ்சினாள் மனோகரி.

“யாருக்கு?”

“அவர்தான்... பூபாலுக்கு!” என்றாள் மற்றவள். “அவருக்கு விபத்து என்றீர்களே! ரொம்ப

ஆபத்தாமா? கண்ணைத் திறந்தாரா? ஏதாவது பேசினாரா? ஐயோ, அவருக்கு என்ன?"

"அது... அவனுக்கு விபத்துதான்! பெரிய விபத்து. ஆனால், அதுபற்றிக் கேட்கவா இந்த இரவில் இங்கே வந்தாய்? ஏன்? அவனைப் பற்றிப் உனக்கு என்ன? அல்லது வேறே யாரையாவது..." என்று அதே வியந்த குரலிலேயே சைதன்யா தொடர்ந்து கேட்கவும், மனோகரி சட்டென உடைந்தாள்!

சைதன்யாவின் கைகளைப் பற்றி, "ஐயோ அக்கா, வேண்டாம்! அவர் எப்படி இருக்கிறார் என்று மட்டும் சொல்லுங்கள். பூபாலனைத்தான் சொல்லுகிறேன்! டாக்டர் என்ன சொல்கிறார்? பிழைத்து விடுவார்தானே?" என்று கண்ணில் உயிரை வைத்துக் கொண்டு கெஞ்சினாள்.

சைதன்யாவுக்குப் பாவமாகத்தான் இருந்தது. ஆனால் மனோகரியின் மறுப்பைச் சொன்னபோது பூபாலனின் குரலில் இருந்த வலி நினைவு வர, அந்த இளக்கம் மறைந்தது!

கையை உதறிக்கொண்டு, "ரொம்பத்தான் அக்கறை மாதிரி கேட்கிறாய்? பூபால் பிழைத்தாலும் இல்லாவிட்டாலும், அது பற்றி உனக்கு என்னம்மா? அவன் யாரோ அன்னியன்! உனக்கும் உன் பிள்ளைக்கும் வேண்டாதவன்!" என்றாள் காரமாக.

"இல்லை" என்று வீறிட்டாள் மனோகரி.

யாரோ எட்டிப் பார்க்கவும், குரலைத் தணித்து, "அவர் அன்னியர் இல்லை சைதன்யா! எனக்கு எல்லாமே அவர்தான்! பூபால் இல்லாமல் நான் உயிரோடேயே இருக்கமாட்டேன். அவருக்கு ஏதாவது என்றால், அவரோடு நானும் செத்துப் போவேன்!" என்று அழுது கொண்டே சொன்னாள் அவள்.

"ஒருத்தரும் சாக வேண்டாம்!" என்றாள் சைதன்யா தெளிவாக... "அடி பலம்தான் என்றாலும், அனேகமாக பூபால் பிழைத்துவிடுவான். சற்று முன்தான் டாக்டர் வந்து சொன்னார். போய்ப் பார்க்கலாம்... வா!" – மனோகரியின் கையைப் பற்றி அழைத்துச் சென்றாள்.

செல்லும்போதே, "மனதில் இவ்வளவு அன்பை வைத்துக் கொண்டு, அவனிடம் இல்லவே இல்லை என்றாயாக்கும்? அதைச் சொல்லும்போது, பூபால் அழாத குறை! எப்போது பார்த்தாலும் அவனிடம் சிடுசிடுத்து, அவனை முகம் வாட வைத்துக்கொண்டு...

---

"**நே**த்து ராத்திரி படிச்சேன்னு சொல்றே... ஆனா உன் ரூம்ல லைட்டே எரியலையே?"

"படிக்கற இன்ட்ரஸ்ட்ல அதையெல்லாம் கவனிக்கலைப்பா!"

- முத்துகுமார், சேலம்.

**SMS**

---

நியாயமா?" என்று, கிடைத்த வாய்ப்பை விடாமல், மனோகரியை அதட்டி, பூபாலனின் அன்பை அவளுக்குப் புரிய வைத்தாள்.

தன்னதுதான் எப்படியோ கெட்டுவிட்டது. இவர்களாவது நன்றாக இருக்கட்டுமே என்பது, சைதன்யாவுக்கு. வலியில் கிடைக்கும் குழந்தைச் செல்வம் போல, இந்தத் துன்பம் இவர்களுக்கு நல்லதாக முடியட்டும் என்று தன்னாலானது சொன்னாள்!

"நான்... நான், சின்னுவுக்கு நல்லதில்லையோ என்று பயந்தேன், சைது! எப்படியும் வேறு ரத்தம் எனும்போது ஒட்டாது என்று..." என காரணம் சொன்னாள் மனோகரி.

"குழந்தையும் தெய்வமும் ஒன்று என்பார்கள். பூபாலுக்குச் சின்னு என்றால் உயிர்! சின்னுவோ, பூபாலைத் தன்னுடையவனாகவே ஏற்றுக் கொண்டான். நீ பெரியவள் இல்லையா? உன்னையும் குழப்பி, பூபாலையும் வீணாக வருத்திவிட்டாய்..." என்று சைதன்யா சொல்லிக் கொண்டிருக்கும்போதே, பூபாலன் படுத்திருந்த அறை வந்துவிட, இருவரும் உள்ளே போனார்கள்.

பூபாலனுக்கு நன்றாக நினைவு வந்திருந்தது! மனோகரியைப் பார்த்ததும், வலியை மீறி அவனது முகம் மலர்ந்த விதத்தில், மனோகரியும் தன்னை மறந்து அவனிடம் ஓடிச் சென்றாள். அறையில் மற்றவர்கள் இருக்கிறார்கள் என்ற எண்ணமே இல்லை!

"கட்டுப் போட்ட இடம் பத்திரம்ப்பா!" என்ற எச்சரிக்கையோடு இலியாசும் சைதன்யாவும் அங்கிருந்து வெளியேறினர்.

**பூ**பால் பிழைத்துவிடுவான் என்பதோடு, மனோகரிக்கும் அவனுக்கும் இடையே இருந்த பிரச்னை நல்லவிதமாகத் தீர்ந்ததில் இருவருக்குமே சந்தோஷமாக இருந்தது. "இங்கே இந்த நேரத்தில் காபி கிடைக்குமா என்று பார்க்கலாம். கிடைத்தால் நாமும் குடித்துவிட்டு, மனோகரிக்கும் வாங்கி வரலாம்..." என்று பேசியபடி வரவேற்பு ஹாலுக்குள் சென்ற இருவரும், அங்கிருந்த வேறுபட்ட சூழ்நிலையில் சற்றுத் திகைத்து நின்றனர்!

அரைத் தூக்கத்தை விரட்டியபடி ஏதோ புத்தகத்தைப் படித்தவாறு உட்கார்ந்திருந்த வரவேற்புப் பெண், கண்ணில் மிரட்சியுடன் நிமிர்ந்து நின்றாள். அந்த நேரத்திலும் மிடுக்கு குறையாமல் நின்று, அவளிடம் ஏதோ விசாரித்துக்

"**ச**மையலில் மகாராணிக்கு மன்னர் உதவி புரிவார் என்று எதை வைத்து சொல்கிறீர்கள்..?"

"அரியணைக்குக் கீழே அரிவாள்மனை இருந்ததே..!"

- பத்மினி, சென்னை.



கொண்டிருந்தவர், காவல்துறையின் ஓர் உயர் அதிகாரி!

பூபாலின் 'விபத்து' பற்றிய விவரம் ஏதும் வெளிவந்திருக்குமா? அதுபற்றி அவர்கள் கேட்டால், யாரைக் கை காட்டுவது?

நடந்த கதையை இயக்கியவள் நீதாவே என்றபோதும், அவள் அந்த இடத்தில் இல்லை! இல்லாதவளை எப்படிக் கை காட்டுவது? இருந்திருந்தாலுமே, மனுவுடைய மனைவி மீது, எப்படிக் குற்றம் சுமத்துவது? அதோடு, நடந்ததை நேரடியாகப் பார்த்த சாட்சி என்று, அவர்களுக்கு யாரும் கிடையாது எனும் போது...

யோசனையோடு பார்த்துக்கொண்டு நின்றபோது, "அதோ அவர்கள்தான் சார்! இன்று வந்து சேர்ந்த ஒரு கேசுக்காக வந்தார்கள். பணம் கட்ட..." என்று கூறியவளை காவல் அதிகாரி இடைமறித்து, ''போதும். இதற்கு மேல் நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்!" என்று சைதன்யா, இலியாஸின் அருகில் வந்தார்.

''உன் பெயர்தான் சைதன்யாவா?'' என்று கேட்டார்.

பூபால் விஷயம்தான் என்று நிச்சயமாகத் தோன்றிவிட, இலியாசை ஒரு தரம் பார்த்துவிட்டு, "ஆ...மாம்'' என்று தயக்கத்துடன் பதில் சொன்னாள் அவள்.

''டாக்டர்... எனக்கு கேஸ் டிரபுள் மட்டும்தான் இருக்கு! எதுக்கு ஆபரேஷன் பண்ணணும்னு சொல்றீங்க?''

''எனக்கு 'கேஷ் டிரபுள்' இருக்கே..!''

**- எஸ்.கோபாலன், சென்னை-61.**

**SMS**



"அப்படியானால், என்னோடு காவல் நிலையத்துக்கு வா" என்று உடன் அழைத்து வந்திருந்த பெண் காவலர்களை அழைத்தார் அவர். அவர்கள் நெருங்கி வந்த விதத்தில், வயிற்றுக்குள் என்னவோ பிசைய, "ஏ... ஏன்?'' என்று கேட்டாள் அவள்.

இலியாகம் முன்னே வந்து, "சார், தொழில் பங்குதாரருக்கு உடம்பு சரியில்லை என்று பார்க்க வந்திருக்கிறாள். குடும்பப் பெண். இந்த நேரத்தில் எதற்காகக் காவல் நிலையத்துக்குக் கூப்பிடுகிறீர்கள்?'' என்று கேட்டான்.

''மிஸ்டர், நீ ஒதுங்கிக் கொள். இந்தப் பெண் மீது தான் புகார். அவளாக வராவிட்டால் கைது செய்து அழைத்துப் போக வேண்டியிருக்கும். அவள் செய்திருப்பது பெரிய குற்றம்... கொலை!'' என்றார் அதிகாரி.

கொலை... கொலையா? அவளா? ஒன்றும் புரியாமல், இரண்டு பேருமே திகைத்து விழித்தார்கள். ஆனால், கொலை செய்யப்பட்டது யார் என்று அறிந்தபோதுதான், சைதன்யா ஒரேயடியாக நிலைகுலைந்து நடுங்கிவிட்டாள். கடவுளே! இது இப்படியா முடிந்தது?

(தொடரும்)



# கண்ட நாள் முதலாய்...

சைதன்யாவை அவளது வீட்டில் இறக்கி விட்டுவிட்டுச் சென்ற மானபரனின் உள்ளம், உலைக்களமாக எரிந்து கொண்டிருந்தது!

என்ன மாதிரியாக இருந்திருக்க வேண்டிய வாழ்வு..! சரி, போகட்டும்... எல்லோர் மேலும் – பெரும்பாலும் பழிக்குரியவர் நீதாவுடைய தந்தைதான் என்றாலும், அவருடைய திட்டத்தை ஏற்று, அதில் பங்கேற்ற அவனுடைய பெற்றோர், அவர்களது நாடகங்களை நம்பிச் செயல்பட்ட சைதன்யா, அப்போதே அடி முதல் தோண்டிக் கண்டுபிடிக்காமல், சைதன்யாவின் பேச்சில் விறைத்துக்கொண்டு ரோஷத்துடன் வந்து, நீதா கழுத்தில் தாலி கட்டிய தான், அனைவருக்கும் முதலாக, இவளை மணப்பேன் என்று அவனைக் காட்டிய நீதா –

இப்படி அத்தனை பேரிடமும் குற்றம் இருந்தது.

செய்த பிழைக்கு அவரவர் அனுபவித்தும் தீர்த்துக் கொண்டிருந்தனர். நீதாவின் தந்தை மோசமாக அடிபட்டு இறந்தே போனார். மற்றவர்களும் படவேண்டிய விதத்தில் பட்டுத்தீர்த்துக் கொண்டிருந்தனர். அவன் உள்பட.




மாற்ற முடியாத விதி என்று, அதுவே ஓரளவு பழகியும் போயிற்று! அதோடு விட்டுவிட வேண்டியதுதானே? அதை விட்டுப் பழசையெல்லாம் தோண்டியெடுத்து, தியாகம் என்ற பெயரில் ஒரே ஒரு முட்டாள்தனம் மட்டுமே செய்த சைதன்யாவை அழிப்பதற்கு இந்த நீதா எப்படி முயற்சிக்கலாம்?

அவளுடைய தாயாக இருந்தும், சரியான சமயத்தில் அனுசுயா ஆன்ட்டி கொடுத்த தகவலால் அல்லவா, சைதன்யாவைக் காப்பாற்ற முடிந்தது! இல்லாவிட்டால், அந்த நல்ல பெண் என்ன கதியாகியிருப்பாள்? சைதன்யாவுக்கு, நீதா நிர்ணயித்து வைத்திருந்த கொடுமைதான், மானபரனை அவ்வளவு கொதிக்க வைத்தது!

இவளுக்குக் காலை நக்குகிற நாய் வேண்டும். அது இல்லை என்றால், மற்றவளை நாய் நக்குகிற பண்டமாக ஆக்குவாளாமா? அதுவும் சைதன்யா மாதிரி ஒரு தேவதையை! சீ... இவளுக்கெல்லாம் பெண் என்று பெயர்!

செல்லச் செல்ல, அவனுக்குச் சீற்றம் ஏறிக்கொண்டே போயிற்று! ஒரு வழியாக வீட்டை அடைந்தபோது, மானபரன் கொதிநிலையில் இருந்தான்.

அந்த ஆத்திரத்தோடு நீதாவைத் தேடிப் போனால், அவன் ஹம்சதூளிகா மஞ்சத்தில் ஆசுவாசமாகச் சாய்ந்திருந்தாள். ஓர் அபலைப் பெண்ணை அழிப்பதற்குத் திட்டம் போட்டதிலேயே, அம்மையார் களைத்துவிட்டாள் போல!

அவளைத் தொட்டு எழுப்பப் பிரியமற்று, அருகில் போய், "நீதா! நீ...தா..!" என்று அதட்டிக் கூப்பிட்டான்.

மெல்ல அரைக்கண் திறந்து நீதா அவனைப் பார்க்கவும், "இதோ பார்! இனி ஒரு தரம் சைதன்யா பக்கம் நீ திரும்பிப் பார்த்தாய் என்று தெரிந்தால், தொலைத்துக்கட்டி விடுவேன். ஜாக்கிரதை!" என்று கடுமையான குரலில் எச்சரித்தான்.

தூக்கம் கலைந்து, அவளது கண்கள் மெல்ல விரிந்தன. அப்போதும், "மனைவியிடமே இன்

னொருத்திக்காகப் பேசுகிறாயே! உனக்கு வெட்கமாக இல்லை?" என்றுதான் அவள் கேட்டாள்.

ஏளனமாக உதட்டைப் பிதுக்கினான் மானபரன். "மனைவியா... நீயா?"

''ம்ம்ம்...'' என்று ஏதோ சொல்ல முயற்சிக்கும்போதே, நீதாவின் கண் மூடி, தலை ஒரு புறமாகச் சாய்ந்தது!

"நீதா... ஏய், நீதா..." என்று அழைத்தவன், அவளிடம் பதில் இல்லாது போகவும், சற்றுத் திகைத்தான்.

சற்று யோசித்து, தயக்கத்தை உதறி, அவளது தோளைப் பற்றி, லேசாகக் குலுக்கி, மறுபடியும் அவளை அழைத்தான். பதிலின்றிப் போகவும், அவளை விட்டுவிட்டு, அருகில் இருந்த ஜக்கில் இருந்த தண்ணீரை எடுத்து, அவள் முகத்தில் லேசாகத் தெளித்தான்.

மீண்டும் அவள் மெல்லக் கண் திறந்து, ''எ... எ...ன்ன?" என்று கேட்டாள். "இதோ பார். நீ பிறர் சொல்லக் கேட்பவள் அல்ல! என்றாலும், தாலி கட்டிய கடமைக்காகச் சொல்கிறேன்! உன்... உன் பழக்க வழக்கங்களைக் கொஞ்சமேனும் மாற்றிக்கொள். ஒல்லியாக இருப்பது அழகு என்று எண்ணிப் பசியை மறக்கடிக்க, கண்டதையும் தின்று உடம்பை இன்னமும் கெடுத்துக்கொள்ளாதே! ஏதாவது பெரிதாக வந்து சேரும்! கூடவே, உன் மற்ற கெட்ட பழக்கங்களை விட்டுவிட்டு, உடம்பை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ள முயற்சி செய்" என்று வேகமாகச் சொல்லி முடித்தான்.

அவ்வளவு நேரம் அந்த அறைக்குள் நின்றதே, அவனுக்கு மூச்சு முட்டியது. அவசரமாக வெளியே செல்லத் திரும்பியவனைக் கூப்பிட்டு, அவள் பேசினாள்.

அவனைக் கோணலாகப் பார்த்து, "நான் சாப்பிட்டுக் குண்டானால், பக்கத்தில் வந்து தொடுவாயோ?'' என்று உதட்டைச் சுழித்துக் கேட்டாள்.

அருவருப்பாக நோக்கி, ''அவசியம் என்ன? அதற்குத்தான் உனக்கு எத்தனையோ பேர் இருக்கிறார்களே!" என்றான் வெறுப்புடன் அவன்.

முகம் கன்றிக் கறுக்க அவள் கத்தினாள்... ''ஏன், உனக்கு இல்லை? நீ மட்டும் மகா உத்தமனா? அந்தத் தையல்காரியோடு, எப்படி எப்படி இருந்திருப்பாய்



என்று எனக்குத் தெரியாதா? அளவு எடுக்காமலே, அவ்வளவு சரியாகத் தைத்துக் கொணர்ந்தாளே! கட்டிப்பிடித்துப் பழகாமலா...”

“சீச்சீ, வாயைக் கழுவு! அவளைப் பற்றி நல்லவிதமாகப் பேசக்கூட உனக்கு அருகதை கிடையாது. நீ இப்படிப் பேசுகிறாயா? தையல்காரி என்றால் இளப்பம் என்று எண்ணினாயா? தைப்பது மானம் காக்கிற தொழில்! ஒப்பிட்டுப் பார்த்தால், அவள் கால் தூசி நீ பெற மாட்டாய். தெரிந்துகொள்! ஆனால், உன் நாசகாரச் சின்னப் புத்திக்கு அது எங்கே புரியப் போகிறது? என்ன சொன்னாலும், கெட்டதையே நினைக்கிற அந்த மண்டைக்குள் இதெல்லாம் கொஞ்சமும் ஏறாது! ஆனால், இது ஒன்று மட்டும் நினைவில் வை! இனிமேல் சைதன்யா பக்கமாக நீயோ, உன் கும்பலோ, ஒரு விரலை நீட்டினால்கூட, உங்கள் அத்தனை பேரையும், உள்ளே தள்ளி விடுவேன். உங்கள் கூட்டம் எப்படியான ஆட்கள் என்று எனக்குத் தெரியும்! கஞ்சா கேசில் உள்ளே போனால், வெளியே வரவே முடியாது! அப்புறம் வாழ்க்கை முழுவதும், உள்ளேதான் கிடக்க வேண்டும். அத்தைக்காகக்கூடப் பார்க்க மாட்டேன்” என்று கடுங்குரலில் எச்சரித்தான்.




இவனை மரக்கட்டை, முட்டாள், உச்சந்தலையில் அடித்துச் சொன்னால்கூட ஒன்றும் புரியாத மூடம் என்று என்னென்னமோ நினைத்தாளே... அப்படியில்லை போலிருக்கிறதே! நிறையத் தெரிந்திருக்கும் போல! இவன் பேச்சை எப்படி அடக்குவது?

பதிலை எதிர்பாராமல், அவன் தொடர்ந்து பேசினான். “இதுவரை உன் எத்தனையோ சின்னத்தனங்களை நான் பொறுத்தேன். ஆனால், இன்று நீ ரொம்பவே எல்லை மீறிவிட்டாய். பொறுக்க முடியாத அளவுக்கு! இனி நீ இருக்கும் இடத்தில் என்னால் இருக்க முடியாது. உன் தாயாருக்காகக் கூட! அதனால், இப்போதே இந்த வீட்டிலிருந்து நான் வெளியேறுகிறேன். ஆனால், என் எச்சரிக்கை மட்டும், எப்போதும் நினைவிருக்கட்டும். மீறினால், வாழ்நாள் முழுவதும் சிறைக்கு உள்ளேதான் கிடப்பாய், அதுவும் நினைவிருக்கட்டும்” என்று மிரட்டலாக மொழிந்தவன், அதற்கு மேல் நில்லாமல், நின்று பாராமல் வெளியே போய்விட்டான்.

அவளது நல்ல நேரம், நீதா

வின் முகம் மாறிய விதத்தை அவன் பார்க்கவில்லை!

அல்லது, இன்னொருவரின் பொல்லாத நேரமா? யாருக்குத் தெரியும்?

**மா**னபரன் அவளை மிரட்டி விட்டுப் போன பிறகு வெகுநேரம் நீதா அப்படியேதான் படுத்துக் கிடந்தாள். அவன் வீட்டை விட்டுப் போவது, அதிர்ச்சியாக இருந்தது! அவளை விட்டு, அவன் போகிறான் என்றால், எல்லோரும் அவளை அல்லவா தப்பாக நினைப்பார்கள்! கேவலமாக!

இத்தனைக்கும் தப்பு அவனுடையது! பேசப் பேச, அவள் படுத்தே கிடக்கிறாளே, உடம்பு ஏதும் சரியில்லையோ என்று யோசித்தானா? யோசித்து அருகில் வந்து அமர்ந்து, கூந்தல் தடவி, கன்னம் வருடிக் கொஞ்சிக் கெஞ்சி, விசாரித்திருக்க வேண்டாம்?

அப்படி அன்பான கணவனாக அவன் இருந்திருந்தால், இந்த அவல நிலை அவளுக்கு எப்படி வரும்? எழுந்து, அவனது சிகையைப் பிடித்து உலுக்கக் கூட முடியாமல், படுத்துக் கிடக்க நேருமா என்ன?

முன்னெப்போதையும் விட, தன் நிலைமைக்குக் கணவனே காரணம் என்ற எண்ணம் அவளுக்கு நிச்சயமாக உறுதிப்பட்டது... நூறு சதவிகிதமாக!

இந்த லட்சணத்தில், தப்பு முழுவதையும் தன்னிடம் வைத்துக்கொண்டு, அவளை மிரட்டுகிறானா? உள்...ளே தள்...ளி விடுவானாம். வாழ்நாள் முழுதுக்கும் உள்ளேயே கிடக்கும்படிச் செய்வானாம்!

அவ்வளவு பெரிய வீட்டிலேயே, இரண்டு நாள் சேர்ந்தாற் போல வீட்டுக்குள் இருப்பதற்கு அவளுக்குப் பிடிக்காது! ஊர் சுற்றியாக வேண்டும். அவள் சிறைக்குள்ளே கிடப்பாளாமா? பத்துக்குப் பத்து அறையா? அல்லது, அதிலேயும் பலபேர் இருப்பார்களா?

மகாராணியாக வாழ்கிறவளை, இப்படிச் சொல்ல நா கூசவில்லையே, அவனுக்கு! தாயாருக்காகக் கூடப் பாராமல், அவளை உள்ளே தள்ளி விடுவானாமா? மனைவியிடமே இப்படிப் பேச அவனுக்கு எவ்வளவு திமிர் இருக்க வேண்டும்? இந்தத் திமிருக்கு இவன் பதில் சொல்லியாக வேண்டாம்?

மனைவியைச் சிறைக்குள்ளே தள்ளிவிட்டு, வெளியே



அவனோடு... அந்தக் கழுதையோடு உல்லாசமாக இருக்கத் திட்டமாக்கும்? அதற்கு, அவனுடைய மனைவி விட்டுவிடுவாளா என்று யோசிக்கத் தெரியவில்லையே!

அதற்குள்ளாக, அந்தச் சிறைக்குள்ளே, அவனையே அவள் தள்ளிவிட மாட்டாளா?

இல்லை! அது அவனுக்குச் சரியான தண்டனையில்லை. அவன் நிறைய சகிப்புத்தன்மை உள்ளவன். இந்த மூன்று ஆண்டுகளாக, அவள் எவ்வளவோ ஆட்டம் காட்டியிருக்கிறாள்! ஆனால் அவன் வெளிப்படையாக ஒரு வார்த்தை கூடச் சொன்னதில்லை. ஏன், கண்டுகொண்டதாகவே காட்டிக் கொண்டதில்லை... இன்றுவரை!

அவள் என்ன செய்தாலும் கண்ணால் பாராமல், காதில் கேட்காமல், யாரிடமும், அதிலும் முக்கியமாக அவனிடம், அது பற்றிப் பேசவே இல்லாமல், காந்திஜியின் மூன்று குரங்குகளைப் போலச் சும்மா இருந்தவன் அவன். இந்தச் சிறையையும் சகித்துக் கொள்வான்!

அவள் கணவனுக்கு நேரடியாகத் தண்டனை கொடுத்துப் பயனில்லை! 'இங்கே கண்டினால் அங்கே வலிக்கும்' என்று ஏதோ சொல்வார்கள். அதுபோல, அவனுக்கு வலிக்க வேண்டுமானால், தண்டனையை அவளுக்குத்தான் கொடுக்க வேண்டும்!

அவ்வளவு தூரம் பொறுத்தவன், அந்தத் தையல்காரிக்கு ஒன்று என்றதும், மனைவியான அவளையே வந்து மிரட்டுகிறானே! அவளையா, உன்னே தள்ளுவான்! முடியுமா? எவ்வளவு கெட்டிக்காரத்தனமாக, அவளது ரகசியத்தைக் கண்டுபிடித்து, அவன் காதலியை இந்த அளவுக்கு ஆட்டி வைத்திருக்கிறான்?

முதல்நாள் அவள் விறைத்துக் கொண்டு போனபோது, அவள் வேறு நினைத்தாள். 'ஆள் நன்றாக இருக்கிறானே என்று ஆசைப்படாமல், கிழ்த்தட்டு நாய் எதையாவது மணந்திருக்க வேண்டும்; எலும்புத் துண்டுக்காகவேனும், வாலை ஆட்டிக்கொண்டு கிடந்திருக்கும்! கௌரவம் பார்த்து, ஒதுங்கிக்கொண்டது' என்று மட்டுமேதானே நினைத்தாள்!

அவளுடைய தாயார் மட்டும், காலில் விழாத குறையாக அவனிடம் கெஞ்சியிரா விட்டால், இந்த வீட்டைவிட்டு அப்போதே போயிருப்பான்! அவ்வளவு மானம்! ரோஷம்!



ரொம்...பப் பிறகு, கடைசியாகத்தானே அவள் ஆழமாக யோசித்தாள்! பணம் எப்படியோ போனாலும், அழகியான புதுமனைவி! அதிலேயே அவன் மயங்கிக் கிறங்கியிருக்க வேண்டாமா?

ஏன் மயங்கவில்லை? முதல்நாள் அவள் ஆட்டம் காட்டியதற்குப்பிறகு, அவனாக ஒரு தரம்கூட அவளை நெருங்க முயற்சிக்கவே இல்லையே! அவளாவது அவனைச் சீண்டிப் பணிய வைக்க, அவ்வப்போது முயற்சி செய்வதுதான். ஆனால், அவன்? அந்த மாதிரி... ஊகூம்! இது இயற்கைக்கு மாறுதானே?

'பையனை எப்படியும் சம்மதிக்க வைத்துவிடுவேன்' என்று தந்தைகூட, ஏதோ சொன்னாரே என்பதும் பிறகுதான் நினைவு வந்தது! அப்படியானால், தயங்கி இருக்கிறான் என்றுதானே அர்த்தம்? மறுத்தே இருக்கக்கூடும்!

அதை, ஏதோ செய்து, சரிப்படுத்திச் சம்மதிக்க வைத்திருக்கிறார்!

அவனை ஒருவன் மறுப்பதா? அழகு, பணம், அந்தஸ்து! அத்தனையும் ஓர் உருவான அவளை ஒருவன் மறுப்பதானால்... காரணம், இன்னொரு காதல் என்று ரொம்பத் தாமதமாகத்தானே அவளுக்குப் புரிந்தது!

புரிந்து, அவனைப் பழிவாங்குவதற்காக, அந்தக் காதலியைத் தேடிக் கண்டு பிடித்து, இருவரையும் அடியோடு பிரிக்க ஏற்பாடு செய்தால், அந்தப் பெண் இருபத்தைந்து லட்சத்தைக்கூட தூக்கி எறிந்துவிட்டானே!

அந்தத்தொடர்பு, இன்றும் தொடர்வது அவளுக்கு உறுதிப்பட்டதே அப்போதுதான்! அதற்குத் தக்கதான ஒரு தண்டனையை ஏற்பாடு செய்தால், அதிலிருந்து எப்படியோ தப்பிவிட்டாள்!

எப்படியோ என்ன? கணவன் தான் தப்புவித்திருக்க வேண்டும்! ஊருக்குப் போனவன், எப்படியோ வந்து காப்பாற்றியிருக்கிறான்!

ஆனால் இப்போது அவளுள் தோன்றியிருக்கும் திட்டத்தில், அது முடியாது! அவனைக் காப்பாற்ற முயற்சி செய்தால், அவனும் சேர்ந்து மாட்டிக் கொள்வானே தவிர, அவளைக் காப்பது முடியவே முடியாது! இது நிச்சயம்!

ஏனெனில், அவள் உயிரைக் கொடுத்தல்லவா, இந்த முயற்சி செய்யப் போகிறாள்!

(தொடரும்)

''டாக்டர்... என் வாயில தெர்மாமீட்டர் வச்சி பாத்தீங்களே, என்ன சொல்லுது?''
''உங்ககிட்ட ஆயிரம் ரூபாய் ஃபீஸ் வாங்கலாம்னு சொல்லுது...''
-அதிரை புகாரி, அதிராம்பட்டினம்.

**SMS**





இந்த முறை நீதா வெகு கவனமாகத் திட்டமிட்டான். ஏனென்றால், ஏதாவது ஓட்டையில் இந்த முறையும் சைதன்யா தப்பிவிட்டால், மறுபடியும் அவளை அழிப்பதற்காக திட்டத்தைத் தீட்ட, இவன் இந்த உலகத்திலேயே இருக்க மாட்டான்! அதனால் இந்தக் கடைசித் திட்டம், அவள் தப்பவே முடியாதபடி அமைய வேண்டும்! அமைந்தாக வேண்டும் என்று, தன்னால் இயன்ற வரை முனைந்து செயல் பட்டான்!

வரிசையாகத் தோற்றுப்போன திட்டங்களை நினைத்துப் பார்த்தான்...

துப்பறியும் நிறுவனத்தின் மூலம் சைதன்யாவைக் கண்டுபிடித்த பிறகும், கண்டுபிடிப்பு சரிதானா என்று சோதிக்க ஒரு திட்டம், அப்புறம் அவளைக் குண்டாக்கி அழகைக் கெடுக்க ஒரு திட்டம், அவள் பெயரைக் கெடுப்பதற்கு இன்னொரு திட்டம், அப்புறம் அவளைக் குடிகாரியாக்கிக் கேவலப்படுத்த முனைந்தது ஒன்று, பூபாலனை

# கண்டநாள் முதலாய்...

மனம் மயக்கும் மலர் தொடர் **26** ரமணிசந்திரன்

மணக்க பணத்தாசை காட்டியது. கடைசியாக, அவளை நாசப்படுத்தச் செய்த முயற்சியும் வீணாகித்தான் போயிற்று!

எல்லாம் ஏன் தோற்றன? ஒருவேளை அந்தந்த நேரத்துக்கு, அவள் இப்படித் திட்டங்களை மாற்றிக்கொண்டே இருந்ததுதான் தப்போ? ஒப்பற்றதாக ஒரே ஒரு திட்டம் தீட்டி, அதில் தீவிரமாக முயன்றிருக்க வேண்டுமோ?




போனதெல்லாம் போகட்டும்... இப்போது எந்தப் பிழையும் நேரக்கூடாது!

இன்னொரு தரம் மருந்து எடுத்தால், நன்றாகத்தான் இருக்கும்! ஆனால் யோசிக்கவே முடியாமல், எல்லாம்... மூளையும் சேர்ந்து மிதக்கத் தொடங்கி விடும்! அதனால் வேண்டாம்!

கெட்ட பழக்கங்களை விட்டுவிடச் சொன்ன கணவன் நினைவு வந்தது! அவளைப் பற்றிய அக்கறையாலா சொன்னான்? இல்லவே இல்லை! போதையில் பயம் அகன்று, அவனுடைய காதலியை இன்னும் கஷ்டப்படுத்தி விடுவானோ என்று, அந்தக் கவலையில் சொன்னது.

இருக்கட்டும்... இப்போது மருந்து எடுக்காமல் இருந்தால்தான் நன்றாக யோசிக்க முடியும். இருக்கட்டும்... அவனைக் காலி பண்ணுவதற்கான சதியைப் பக்காவாகத் தீட்டுவதற்கேனும், அவன் சொன்னபடி நடந்தாக வேண்டும்! இந்த ஒருவேளைக்கு மருந்து வேண்டாம்!

**சோ**ர்ந்த மூளையைக் கசக்கி யோசித்தாள்.

இப்போதைய திட்டத்துக்குத் தேவையான மாத்திரைகள், அலமாரியுள் இருக்கின்றன. ஒருநாள் இரவில், ரொம்பவும் உடம்பு படுத்திய பாடு தாங்காமல், ஒரேயடியாகப் போய்விடலாம் என்று எண்ணி வாங்கி வைத்தான். ஆனால் அவற்றைப் பயன்படுத்த, இதுவரை தைரியம் வந்தது இல்லை! என்றைக்காவது பயன்படுத்த நேர்ந்தால், பழியைக் கணவன், அவனுடைய காதலி மேல் போட்டுவிட வேண்டும் என்று அரைகுறையாக ஒரு யோசனையும் அப்போதே அவளுக்கு இருந்தது!

இப்போதுதான் அந்த மாத்திரைகளுக்குத் தேவை வந்திருக்கிறது! நெஞ்சில் திடமும்தான்! கூடவே, அந்தத் திட்டமும் முழுசாக உருப்பெற்றுவிட்டது! இனி தாமதிக்கத் தேவையில்லை.

உடல் வேதனையும் மிக அதிக

மாக இருக்கிறது! மருத்துவர் சொன்ன நாளுக்கு இன்னமும் சற்று அவகாசம் இருந்தபோதும், அவர் சொன்ன அறிவுரைகளைக் கடைப்பிடிக்காத காரணத்தால், அவர் கூறிய கடைசிகால அறிகுறிகள் இப்போதே தோன்றத் தொடங்கிவிட்டன! எனவே இதில், இப்படி தானாக முடிப்பதில், பெரிய இழப்பு ஒன்றுமில்லை! போகட்டும். அவர்களைப் பழிவாங்கிய திருப்தி கிடைத்தால் அது போதும்!

முதல் வேலை, சைதன்யா வாங்கி வந்து தந்த மருந்து பாட்டில்களில் ஒன்றில் உள்ள மாத்திரைகளைக் குப்பைத் தொட்டியில்... ஊகூம், அவை இருந்த அடையாளமே இருக்கக்கூடாது! அவற்றை டாய்லட்டில் கொட்டி, நீர் அடித்துவிடவேண்டும்.

உடலில் இருக்கும் பலத்தைக் கூட்டி, அந்த வேலையைச் செய்துவிட்டு வந்தாள். அதற்குள் வலு குறைந்து, நெஞ்சு வேகமாக அடித்துக்கொள்ள, உடம்பு தள்ளாடியது! எதிர்க்கோடி அலமாரி வரை இப்போது செல்ல இயலாது. அங்கேதான் இந்த பாட்டிலில் போட்டு வைக்க வேண்டிய, 'அந்த' மாத்திரைகள் இருக்கின்றன!

கொஞ்ச நேரம் படுத்து ஓய்வெடுத்துக் கொண்டுதான், அந்த வேலையைச் செய்ய வேண்டும்!

மொத்த மாத்திரைகளையும் இந்த பாட்டிலில் போட்டு வைத்த பின், அவற்றுள் இரண்டை விழுங்கிவிட்டால், எல்லாம் முடிந்தது! அவனும், கூடவே அந்தச் சைதன்யாவும், இன்னும் அவளுடைய அருமைப் புருஷனின் நிம்மதி, மகிழ்ச்சி எல்லாம்!

இல்லை! இதில் இன்னொரு முக்கியமான வேலையும் இருக்கிறது! சொல்லப் போனால், இந்த சூழ்ச்சியிலேயே அதுதான், அதி முக்கியமான பகுதி! அவளை எப்படி மாட்டி வைப்பது? மாத்திரையை விழுங்கிவிட்டு போனும் பண்ண வேண்டும்! அல்லது, மாற்றிச் செய்ய வேண்டுமா?

மாத்திரை எவ்வளவு நேரத்தில் வேலை செய்யும் என்று தெரியாது! சீக்கிரமாக ரத்தத்தில் கலந்து, சீக்கிரமே உயிரை எடுத்துவிடும் என்றுதான், பத்தாயிரம் ரூபாயை வாங்கிக்கொண்டு அந்த மாத்திரைகளைத் தந்த கடைக்காரர் சொன்னார்.

அவள், அதைச் சோதித்தும் பார்த்துவிட்டான். நாய் உணவோடு சேர்த்துப் போட்டதில், விழுங்கிச் சில நிமிஷங்களிலேயே 'டிங்கு' துள்ளி



எழுந்து, புரண்டு விழுந்து செத்தேவிட்டது!

மனித உடம்பில் மருந்து, இன்னும் ரொம்பச் சீக்கிரமாக வேலை செய்து, போன் பண்ணுமுன் அவளுக்கு என்னமும் ஆகிவிட்டால்? அதுவும், அவனது இந்தச் சீக்காளி உடலில் என்ன ஆகும் என்று எப்படிச் சொல்வது? இதற்கு யாரிடமும் சோதனை செய்து பார்க்கவில்லையே! பேசிவிட்டு, அப்புறமாக மாத்திரைகளைப் போட்டுக் கொள்வது மேல்!

படுக்கையில் தலையைச் சாய்த்து, வசதியாகக் கிடந்து பேசினால் போன் பேசுகிற நேரத்தில், உடம்புக்குத் தேவையான ஓய்வும் ஓரளவு கிடைத்துவிடும்! பிறகு எழுந்து நடந்துபோய், மாத்திரைகள் விஷயத்தைக் கவனிக்கவும் சக்தி இருக்கும்!

எண்ணமிட்டவாறு படுக்கையில் சாய்ந்துகொண்டு, இன்னொரு தரம் நன்கு யோசித்து, திட்டத்தில் எந்தவித குளறுபடியும் இல்லை என்று திருப்தியடைந்தவளாக, செல்லின் பட்டன்களைத் தட்டினான் அவன்!

**அ**வன் போனில் அழைத்தது, ஒரு காவல்துறை அதிகாரியை! அந்த அதிகாரியுடைய குடும்பத்தில் யாரோ, அவளுடைய நிறுவனங்கள் ஒன்றில் பணிபுரிவதாக அவளுக்கு ஞாபகம்! விக்கியின் உதவிக்காக ஒரு தரம் ஆள் தேடியபோது, இந்த எண் அவளுக்குக் கிடைத்திருந்தது! அப்போது விக்கியே சமாளித்துக் கொண்டதால், பயன்படுத்த நேரவில்லை.

ஆனால் அது இப்போது அவளுக்கே உதவியாகப் போகிறது... வேடிக்கைதான்! அவனுடைய உறவுக் குடும்பத்துக்குச் சோறு போடுகிறவளுக்கு ஒன்று என்றால், இந்தப் போலீஸ் அதிகாரி சும்மா விடுவானா? உண்டு இல்லை என்று, பின்னித் தீர்த்து விட மாட்டான்?

பட்டும்... சைதன்யா நன்றாகக் கஷ்டப்படட்டும்! அவளுக்கு அதுதானே வேண்டும்! அந்த ஆள் சபாபதி, உதவி கமிஷனரோ என்னவோ என்று சொன்னார்கள். அதற்குச் சரியாக, அதிகாரமும் அதிகம் இருக்கும்!

அவன் எதிர்பார்த்தபடி போலீஸ்காரனும் அதட்டலாகத்தான் பேசினான். ஆனால், "நீதா பேசுகிறேன்" என்றதும் புரிந்துகொள்ளாதது, அவளுக்கு எரிச்சலாகத்தான் இருந்தது! "நீதா எக்ஸ்போர்ட்ஸ் உரிமையாளர் நீதா!" என்றபோதும், அப்படி ஒன்றும் அவன் குரலில் வேறுபாடு



தெரியவில்லை!

இவனுக்கெல்லாம் யார் அடி முதல் விளக்கிக் கொண்டிருப்பது? உன் சொந்தக்காரன் என்னிடம் வேலை பார்க்கிறான் எனலாம் என்றால், அந்த உறவினன் பெயரே அவளுக்கு நினைவில்லை!

காவல்துறை ஆள் என்றால், எல்லாவற்றிலும் கவனம் இருக்க வேண்டாமா? அவனுக்கல்லவா அக்கறை இருந்து, நம் உறவுக்காரர்களில் யார் யார், எந்தெந்த நிறுவனங்களில் வேலை செய்கிறார்கள் என்று, தெரிந்து வைத்திருக்க வேண்டும்? போலீஸ் அதிகாரி கூழைக் கும்பிடு போடவில்லை என்றானதும், நீதா அடுத்த அம்பை எய்தாள். அவனது ராம பாணத்தை!

''என்னைக் கொ...லை... செய்துவிட்டார்கள்!'' என்றான் அழுத்தம் திருத்தமாக.

இதற்கு அந்த சபாபதி சொன்ன பதிலில், அவளுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்து கத்தினாள். "ஏய், என்னது? உளறுகிறேனா? பேசிக் கொண்டிருக்கிறேனா? முட்டாள், முட்டாள்! நான் சொல்வதை முழுதாகக் கேட்டுவிட்டு, அப்புறமாகப் பேசு! எனக்கு விஷம் கொடுத்துவிட்டார்கள்! நான் கொஞ்சம் கொஞ்சமாகச் செத்துக் கொண்டிருக்கிறேன்!




இது... இது, என் மரண வாக்குமூலம். என்னது, எங்கேயோ? சொல்லத் தானே போகிறேன்! முதலில் என் பேச்சைப் பதிவு செய்ய ஏற்பாடு செய்துவிட்டாயா? முதலில் அதைச் செய்! இல்லாவிட்டால், அந்தக் கொலையாளி... அந்த ராட்சசி எப்படியாவது தப்பிவிடுவாள்...''

தொடர்ந்த சில வினாடி தாமதம், அவளுக்கு வேறு எதையோ சொல்ல, "ஏ ஆபீசர், என்னைக் கண்டுபிடிப்பதில் நேரத்தை வீணாக்காதே! கண்டுபிடித்தாலும், என்னைக் காப்பாற்ற முடியாது. என் முகவரி, கடைசியில் நானே சொல்லுவேன். முதலில் நடந்ததைச் சொல்லுகிறேன். பதிவு பண்ணிக் கொள்!" என்று அதட்டினான்.

"சொல்லுங்கள்" என்றது அதிகாரியின் குரல். "சீக்கிரமாக. எதற்கும், உங்கள் முகவரியை முதலில் சொன்னால்..."

"சொல்ல முடியாது!" என்று கத்தினான் அவள். ''முதலில் என் பேச்சைக் கேள். என் திட்டப்படிதான், நான் சொல்லுவேன். இடையில் குறுக்கிட்டுப் பேசாதே. அப்புறம் சொல்ல அவகாசம் இல்லாமல் போய், செத்துவிடுவேன். குற்றவாளி தப்பி விடுவாள். அந்தக்

கொலைகாரி..!"

"ஓகே! ஓகே! இந்தத் தர்க்கத்தில் நேரத்தை வீணாக்க வேண்டாம். சொல்வதைச் சீக்கிரமாகச் சொல்லுங்கள். அடுத்து முகவரியையும்சொல்லுங்கள்'' என்று அவசரப்பட்டது அதிகாரியின் குரல்.




கூடவே ரிசிவரின் வாயைப் பொத்தியபடி, பேசுகிறவரின் முகவரியைக் கண்டு பிடிக்கும்படி மற்றவர்களுக்கு உத்தரவும் இட்டார் அவர்...

"நீதா எக்ஸ்போர்ட்ஸ் என்றான்... பாருங்கள்!"

நீதா தொடர்ந்து பேசினாள். "அவள் என் புருஷனுடைய சின்ன வீட்டுக்காரி! ரொம்பக் கெட்டவள்! இவர்களின் தொடர்பே, எனக்கு இப்போதுதான் தெரியும்! எனக்கு உடை தைக்கிற தையல்காரி மாதிரி வந்து, நைசாகப் பேசி என்னை ஏமாற்றிவிட்டாள்.

எனக்குக் கொஞ்சம் உடம்பு சரி கிடையாதா? அவளுக்கு வசதியாகிப் போயிற்று! என் மருந்து, மாத்திரைகள் எல்லாவற்றையும், சென்னையில் நம்பகமான மருந்துக்கடையில் இருந்து வாங்கி வந்து, தருவதாகச் சொன்னாளா? அதைப் போய், அப்படியே நம்பிவிட்டேன்... கேட்கிறீர்களா?"

கண்டுபிடித்த முகவரியைக் குறிப்புப் புத்தகத்தில் எழுதி, சபாபதியின் முன் வைத்தார் அடுத்த அதிகாரி.

''கேட்கிறேன், மேடம்'' என்று இவளுக்குப் பதில் உரைத்துவிட்டு, ரிசீவரைப் பொத்தி, ''இரண்டு பேரைக் கூட்டிக்கொண்டு சீக்கிரமாகப் போங்கள். டாக்டரையும் கூட்டிப் போங்கள்'' என்று உத்தரவு கொடுத்து அனுப்பிவிட்டு, "சொல்லுங்கள், மேடம்" என்றார் சபாபதி.

"என்ன கதையா சொல்லுகிறேன்? இடையிலே விட்டு விட்டு கேட்கிறாயே! நீயெல்லாம் என்ன போலீஸ் வேலை செய்து இந்த நாடு என்ன உருப்படப் போகிறது? என்னைக் கொலை செய்த இந்தக் கொலைகாரியையும், நீ நிச்சயம் விட்டுவிடத்தான் போகிறாய்! கொலையும் செய்துவிட்டு, அவள் ஜாலியாகச் சுற்றப் போகிறாள். ஐயையோ... நெஞ்சை அடைக்கிறதே!" என்று விசும்பினாள் அவள்.

"மேடம், அப்படி நடக்காது. நீங்கள் சொல்லுங்கள்..."

"நான் சொல்லுகிறேன். நீங்கள் எங்கேயாவது பராக்குப் பாராமல் கவனித்துக் கேளுங்கள் சார்! அந்தப் பாவி, மருந்து வாங்கி வருவ

தாகச் சொல்லி, என் மருந்து பாட்டிலில் உள்ள மாத்திரைகளைக் கொட்டிவிட்டு, பதிலுக்கு விஷ மாத்திரைகளைப் போட்டுக் கொண்டு வந்து தந்திருக்கிறாள்! அது தெரியாமல், என் மருந்து தான் என்று நினைத்து, வழக்கம் போல இரண்டு மாத்திரைகளை விழுங்கப் போ... விழுங்கிவிட்டேனா? எனக்கு நெஞ்செல்லாம் எரிகிறது! வயிறு கா...ந்துகிறது. கண் மங்...குகிற...து.! நான் சாகப்போ...கிறேன். அவளை விடாதீர்கள்! மருந்துக் கடையில் வேண்டுமானாலும், அவளைப் பற்றிக் கே...ளுங்கள்!

சகாயம் மருந்துக்கடை. அவன் பெயர் சைதன்யா, அவன் வீட்டு போன் எண் இது'' என்று எண்ணைச் சொன்னாள். "என்னது? அவன் வீடா? அது எங்கே என்று நீயே கண்டுபிடி. போனில் கேட்டுக் கொள்... அய்யோ! நான் சாகப் போகிறேன். இருபத்தாறு வயதில் என்னைக் கொ... கொ... கொன்று விட்டாளே..." என்றதோடு செல் தொடர்பைத் துண்டித்தான்.

இப்போது அவளுக்குச் சிரிப்பு வந்தது. சோர்வு மட்டும் இல்லையானால், கை கொட்டியே நகைக்கலாம்.

எதிரில் மானபரனை உருவகித்து, "என்னையாடா மிரட்டினாய்?'' என்று ஏளனமாகக் கேட்டாள். "பார், உன் காதலி என்ன கதி ஆகப் போகிறாள் என்று கண் குளிரப் பார்! இப்போது அலமாரியில் இருந்து மாத்திரைகளை எடுத்து, இந்தக் காலி பாட்டிலில் போடப் போகிறேன். அதில் இரண்டை விழுங்கப் போகிறேன்! அப்புறம்... நீயும், அவளும் பாடாய்ப் படுவதை, இருந்து பார்க்க ஆசை தான்! ஆனால் நான் இருந்தால், அவள் தப்பி விடுவாள்! அதனால், மா...த்திரையை முழுங்கித்தான் ஆக வே...ண்டும்! முடிந்தால் ஆ...வியாக மாறிப்...பார், பார்த்து ரசிப்...பேன்!''

முக்கிய வேலை முடிந்தது! இனி தாமதிப்பது தப்பு! ஒரு வேளை, போலீஸ்காரன் சீக்கிரமாக வந்து, அவன் நல்லபடியாக இருப்பதைப் பார்த்துவிட்டால், எல்லா ஏற்பாடும் வீணாகிப் போகும்! அதோடு, வாட்டி வதைக்கும் இந்த உடல் வேதனையைச் சகித்திருக்கவும் அவசியம் இல்லை!

கட்டிலில் இருந்து எழுந்து, நடுங்கிய கைகால்களைத் திடப்படுத்திக்கொண்டு, விஷ மாத்திரைகளை எடுக்கப் போனாள் நீதா!

(தொடரும்)

**SMS**

''எனக்கு நமீதா மாதிரி பொண்ணு வேணும்னு எங்க தாத்தாகிட்ட சொன்னது தப்பாப் போச்சு...''
''ஏன்... என்னாச்சு?''
''எனக்குப் பொண்ணு பாக்கற சாக்கில, நமீதா படத்தைக் கையிலயே வச்சிக்கிட்டு அலையறாரு!''
- ப.உமாமகேஸ்வரி, நெய்வேலி





# மனம் மயக்கும் மலர் தோடா

ரமணிசந்திரன்

27

கோலையுண்டது யார் என்று காவல் அதிகாரி தெரிவித்ததும், சைதன்யா அப்படியே நிலைகுலைந்து கலங்கிப் போனாள்.

இது எப்படி சாத்தியம்?

அன்று மாலையில்தான், அவளுக்கு நீதா அவ்வளவு துன்பங்களை ஏற்படுத்தினாள்... சொல்லொண்ணாத் துன்பம்! ஆனால், இப்போது அவனே இல்லை என்றால், எப்படி நம்புவது? அது மட்டுமில்லை... நீதாவை அவள்

கொலை செய்திருப்பதாக அல்லவா இந்த அதிகாரி சொல்லுகிறார்!

இதைப் போலவே, அதுவும்... நீதாவின் மரணச் சேதியும் உளற லாகவே இருக்குமா!

அதற்குள், ''சைது, உனக்கு யாராவது வக்கீல் தெரியுமா? இவர்களிடம் எப்படிப் பேசுவது என்று எனக்கு எதுவும் புரிய வில்லை'' என்று இலியாஸ் கேட் டான்.

''எனக்கும் அதே நிலைதான் இலியாஸ். இந்த அதிகாரியின் பேச்சுமே எனக்குப் புரியவில்லை முதலில்...'' என்று காவல் அதி காரியிடம் திரும்பினாள் அவள்.

கலக்கத்தையும் படபடப்பை யும் அடக்க முயன்றபடி, ''பாருங் கள் சார், நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லை!

''உன் மாமியாரோட செல்போனை எடுத்து, எதுக் காக வைப்ரேஷன் செட் பண்றே..?''

''அவங்களால ஒரு சின்ன அதிர்வைக்கூட தாங்கிக்கமுடி யாதுன்னு டாக்டர் சொல்லியி ருக்கார்... அதை டெஸ்ட் பண்ணலாமேன்னுதான்!''

- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.



SMS

திருமதி நீதாபரன், எ...ங்கள் வாடிக்கையாளர். சில உடைகள் தொடர்பாக மாலையில்தான் பார்த்தேன். இப்... இப்போது அவர்கள் இல்லை என்கிறீர்கள். இன்னும் ஏதேதோ சொல்கிறீர் கள். என்... என்னால், நம்பக் கூட முடியவில்லையே! என்ன சா...ர் நடந்தது? தயவு பண்ணிச் சொல்லுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டான்.

ஒரு தரம் அவனைக் கூர்ந்து நோக்கினார் சபாபதி.

பிறகு மெசாகத் தலையசைத்து, ''ஒன்று நீ கைதேர்ந்த நடிகை யாக இருக்க வேண்டும்! அல் லது... இல்லை. வேறுவிதமாக இருக்க வாய்ப்பில்லை. ஆனா லும், இப்படி மாட்டிக் கொள் வாய் என்று எதிர்பார்த்திருக்க மாட்டாய். எப்படி மாட்டிக் கொண்டாய் என்று வேண்டுமா னால் தெரிந்துகொள்!'' என்று நீதாவின் போன் விவரம் சொன் னார் அவர்.

நீதாவின் வஞ்சம் புரிய, அதிர்ந்து நின்றாள் சைதன்யா. ஆனாலும் அதில் இருந்த ஒரு முரண்பாடு, அவளுக்கு நம்பிக்கை அளித்தது.

என்னதான் அவளை மாட்டி வைக்க விரும்பினாலும், நீதா தற்கொலை வரையா போவாள்? எப்படியோ பிழைத்துவிட்டதாக, அடுத்த நாடகம் நடத்தித்தானே ஆக வேண்டும்! அதற்குள் உண் மையைக் கண்டுபிடித்துவிட்டால்,

என்ன செய்வான்?

உள் விஷயம் புரியாமல், ''எங்கோ தப்பு நடந்திருக்க வேண்டும் சார். சைதன்யா அப்படிப்பட்ட பெண் அல்ல'' என்று வாதாடிக் கொண்டிருந்த இலியாசை சைகை காட்டி நிறுத்திவிட்டு, ''ஏன் சார், உங்களைக் குறைவாகப் பேசுகிறேன் என்று நினைக்க வேண்டாம். ஆனால், இப்படியெல்லாம் ஒருவர் செல்லில் பேசினால், உண்மை என்று கைது பண்ண வந்துவிடுவீர்களா? ஒருவேளை எல்லாம் பொய்யாக இருந்தால் என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டான் சைதன்யா.

நேரில் போய்ப் பார்த்தால், நீதா கல்லுக்குண்டு போல... கொஞ்சம் நோயாளி போலத்தான் என்றாலும், உயிருக்கு ஒரு பழுதும் இல்லாமல் அவன் இருப்பதை, அவரும் பார்க்கலாம்தானே? அதை விசாரிக்காமல், கொலைகாரி என்று கைதே பண்ண வந்துவிட்டாரே இந்த அதிகாரி என்ற எரிச்சல் அவளுக்கு! எனவே குரலில் லேசாக ஏளனம் தலைகாட்டுவதை, அவளால் தவிர்க்க முடியவில்லை!

மீண்டும் ஒரு தரம் அவனை நேராகப் பார்த்த அதிகாரியின் கீழுதடு லேசாக மடிந்தது. "நீதா மேடம் பேசிக்கொண்டிருக்கும் போதே இடம் கண்டுபிடித்து, எங்கள் குழு அங்கே சென்றுவிட்டது! அங்கே, தரையில் அந்தப் பெண் இறந்து கிடந்தாள்! வேலையாட்களை அழைத்து, அது நீதாதான் என்றும் தெளிவுபடுத்திக் கொண்டாயிற்று'' என்று அவர் கூறவும், சைதன்யாவின் கண் முன்னே பூச்சி பறக்க, அப்படியே பிரமித்து நின்றாள்!

**இ**து எப்படி சாத்தியம்? நீதா எப்படிச் சாக முடியும்? அவன் இறந்தேவிட்ட பிறகு, இந்தக் கேள்வி முட்டாள்தனம்! ஆனால் சாகுமுன் நீதா ஏற்படுத்தி வைத்திருக்கும் இந்தச் சிக்கலில் இருந்து, இனி அவன் எப்படி மீள முடியும்? முடியாது போல் அல்லவா தெரிகிறது!

நீதாவின் வக்கிரம் தெரிந்தவன், 'வராதே... வராதே...' என்று எத்தனை முறை

**SMS**

''பத்தாம் நம்பர் பேஷன்ட் அபாய கட்டத்தைத் தாண்டிட்டார் டாக்டர்...''

''எப்படிச் சொல்றீங்க சிஸ்டர்?''

''ஆபரேஷன் வேண்டாம்னு சொல்லிட்டு, ஆஸ்பத்திரி கேட்டைத் தாண்டிட்டாரே..!''

*- அ.பேச்சியப்பன், ராஜபாளையம்.*

> **SMS**
>
> ''கபாலி பொக்கிஷமா சில விஷயங்களை சேகரிக்கிறான்னு சொல்றீங்களே... அப்படி என்ன சேகரிக்கிறான் ஏட்டய்யா?''
>
> ''லேடி கான்ஸ்டபிள்கள் யூஸ் பண்ண ஹேர்பின், வளையல் எல்லாம்தான்!''
>
> *- பெ.பாண்டியன், காரைக்குடி.*

சொன்னான்! மானபரனின் நினைவில் சைதன்யா ஒரு கணம் நிமிர்ந்தாள்.

உதவிக்கு அவனைக் கூப்பிடலாமே என்று நினைக்கும் முன்னே, அவளுக்கு அதன் மடத்தனம் புரிந்தது. இப்போது அவளுக்காக அவன் ஒரு விரலை அசைத்தாலே, அது அவனையும் சிக்கவைத்துவிடாதா? அவன் பெயரை எடுப்பதுகூடத் தவறு!

அவள் திகைத்து நிற்கவும், "மாட்டிக்கொள்ள மாட்டோம் என்று எண்ணித்தான் எல்லோரும் தப்பு செய்வது. ஆனால் அவர்கள் எதிர்பாராத வகையில், கட்டாயம் மாட்டிக் கொள்வதுதான் வழக்கம். இனியும் வாதாடிக் கொண்டிராமல், எங்களோடு வருகிறாயா?'' என்று அமைதியாகவே கேட்டார் காவல் அதிகாரி!

சட்டென உடலும் மனமும் ஒருங்கே பதறிப் போனாள் சைதன்யா.

காவல் நிலையத்தில், கொலைகாரி என்ற பெயரோடு அவளா? வக்கிரம் பிடித்த ஒரு பெண்ணின் சூழ்ச்சிக்குப் பலியாகி கேவலப்பட்டு நிற்பதா? இதிலிருந்து எப்படி...

ஒன்று தோன்ற, அவளைப் போலவே பதறி, "சார்... சார்..'' என்ற இலியாசிடம் திரும்பினாள். "உடனே அனுசூயா ஆன்ட்டிக்கு தகவல் தெரிவித்துவிடு இலியாஸ். அவர்களால் மட்டும்தான் ஏதாவது செய்து என்னைக் காப்பாற்ற முடியும். சார் சொன்னதை முழுதும் கேட்டாயல்லவா? அதனால் அவர்களிடம் மட்டும் சொல்லு!'' என்று, சொல்லில் ஒரு குறிப்பேற்றிக் கூறினாள்.

''யாரவள்? உனக்குக் கூட்டா..?'' என்று காவல் அதிகாரி புது கவனத்துடன் கேட்க, "இல்லை. நீதாவுடைய தாயார்...'' எனும்போதே சைதன்யாவின் மனம் சோர்ந்தது!

என்னதான் கருத்து வேறுபாடு இருந்தாலும், அப்போதுதான் இறந்துவிட்ட மகளுக்கு எதிராக, எந்தத் தாய் செயல்படுவாள்?

**அ**னுசூயாவின் பிரியமான பேச்சு, அன்பான பார்வை எல்லாம் நெஞ்சாழத்திலிருந்து வந்ததுதான்! அதுபற்றி சைதன்யாவுக்குச் சந்தேகமே கிடையாது. அவ்வப்

போது உதவி செய்யத் தயாராக இருப்பதாக அந்தத் தாய் குறிப்பிடுக் காட்டிப் பேசியதிலும், பொய்மை சிறிதும் கிடையாது என்பதும் நிச்சயம்!

ஆனால் ஒரே மகளை இழந்து நிற்கிறவளுக்கு, வேறு எதை எண்ணிப் பார்க்கத் தோன்றும்? அவளது குறைகளை நினைக்கவே தோன்றாதே! நினைவில் இல்லாத அந்தக் குறைகளுக்காக, அந்த மகளுக்கு எதிராக எப்படி ஒரு தாய் இவளுக்கு உதவி செய்வாள்?

எனவே, அனுருயாவின் உதவியை எதிர்பார்ப்பதே நியாயம் இல்லை என்று முடிவு செய்தாள் சைதன்யா. அவளது பிரச்னையை அவளேதான் தீர்த்துக் கொள்ள வேண்டும்! ஆனால் எப்படி?

நீதா உயிருடனேயே இல்லை எனும்போது, அவள் சொன்னதை எப்படி மாற்றுவது? பதிவே பண்ணி வைத்திருக்கிறார்களே! காவல் நிலையத்தில், நீதாவின் பேச்சை போட்டுக் காட்டிக் கேட்டதிலிருந்து, யோசித்து யோசித்து, சைதன்யாவுக்குப் பைத்தியம் பிடிக்காத குறைதான்!

நீதாவுக்கு அவள் மருந்து மாத்திரைகள் வாங்கிக் கொடுத்தது நிஜம்! ஆனால், அது நீதாவே கேட்டுக் கொண்டதால்தான் என்று எப்படி நிரூபிப்பது? அவற்றுள் ஒன்றில் இருக்க வேண்டிய மாத்திரைகளைக் கொட்டிவிட்டு, பதிலுக்கு விஷ மாத்திரைகளை அவள் மாற்றி வைக்கவில்லை என்றும்தான், எப்படித் தெளிவுபடுத்துவது?

எனக்கு இரண்டு கண்ணும் போனாலும் பரவாயில்லை, எதிரிக்கு ஒரு கண்ணாவது போக வேண்டும் என்று செயல்படுவார்கள் என்று வக்கிரம் பிடித்தவர்களைப் பற்றிக் கூறுவார்கள். நூறு சதவிகிதம் பொருத்தமான உதாரணமாக, சைதன்யாவை மாட்டி வைப்பதற்காக, நீதா உயிரையே அல்லவா விட்டுத் தொலைத்திருக்கிறாள்!

மீள வழி தெரியாத கவலை ஒருபுறம் என்றால், இதைப் பொறுத்திருக்க முடியாமல், மானபரனும் இதனுள்ளே வந்து மாட்டிக் கொள்வானோ என்று அது வேறு அவளுக்குப் பெரும் பயமாக இருந்தது.

நல்லவேளையாகத் தந்தை,

SMS

''நாளைக்கு வரும்போது வெறும் வயித்தோட வாங்க... டெஸ்ட் எடுக்கணும்!''

''போகும்போது டாக்டர்..?''

''வெறும் பாக்கெட்டோட போகலாம்!''

**- எஸ்.எஸ்.பூங்கதிர், வில்லியனூர்.**

நள்ளிரவு பஸ்ஸிலேயே அவரது வேலை விஷயமாக ஆந்திரா சென்றிருப்பார். விபத்தில் அடிபட்டுவிட்ட நண்பன் பூபாலனுக்கு உதவியாக, மருத்துவமனையில் மகள் இருக்கிறாள் என்று நினைத்துக் கொண்டிருப்பார். ஒரு வாரம் அப்படியே நினைத்துக்கொண்டு நிம்மதியாக இருக்கட்டும்.

ஒரு வாரம் கழித்து வந்த பிறகு... அதை, அப்புறம்தான் பார்க்க வேண்டும்!

இப்போதைக்குப் போலீஸ் வீடு வரை வந்து தேட நேராமல், மகள் இருக்கும் இடத்தைக் காவல் அதிகாரியிடம் தெரிவித்துவிட்டுப் போயிருக்கிறார்! பூபாலின் விபத்து தொடர்பான விசாரணை என்று எண்ணிச் சொல்லியிருப்பார் என்று ஊகித்தாள் மகள்!

ஆனால், விஷயம் இப்படி என்று தெரியும்போது... அதையும் அப்புறம்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். இப்போது...

இப்போது என்ன செய்வது என்று ஒன்றும் புரியாமல் நினைக்கும்போதுதான், 'கம்பி எண்ணுவது' என்றால் என்ன என்று அவளுக்குப் புரிந்தது.

அந்தச் சிறு அறையில் இருந்து வெளியுலகத் தொடர்பே, அந்த உறுதியான கம்பிக் கதவுதான். உள்ளே மாட்டிக் கொண்டவரின் பார்வை, அங்கே கதவில்தானே நிற்கும்? அந்தத் தவிப்பு என்னவென்று, நேரிடையாக அனுபவிக்கும்போதுதானே புரிகிறது!

கடவுளே... இந்தச் சிந்தனையாலும் இப்போது பயனில்லை. நேர விரயம்! இனியாகும் பரிமளாவும்கூடத் தலைகீழாக நிற்பது தவிர்த்து, எல்லா முயற்சிகளையும் செய்து கொண்டுதான் இருப்பார்கள்!

இந்த விஷயம் வெளியே பரவினால், வளர்ந்து வரும் அவர்களது தொழிலுக்கு நல்லதில்லையே என்ற கவலையும், சைதன்யாவுக்கு வந்தது.

எப்படியாவது சீக்கிரமாக, இந்தப் பிரச்னையில் இருந்து மீண்டுவிட்டால், எல்லாவற்றையும் சமாளித்து விடலாம்!

ஆனால், மீள வழியே தென்படவில்லையே என்று தொடங்கிய இடத்துக்கே மீண்டும் வந்து சேர்ந்தாள் சைதன்யா.

(தொடரும்)

**SMS**

''பொண்ணு பார்க்க வந்த மாப்பிள்ளை ஷாக் ஆகிட்டாரா... அப்படி என்ன சொன்னாங்க?''

''பொண்ணுக்கு சமைக்கத் தெரியும்னு சொன்னாங்களாம்...''

*- பிரியதர்ஷன், சேலம்.*



# முதலாய்...

மனம் மயக்கும் மலர் தோடா

ரமணிசந்திரன்

28

இதே சிந்தனையில் அன்று மிச்சமிருந்த இரவு முழுவதும் கழிந்ததைக்கூட சைதன்யா உணர்ந்தாளில்லை! ஆனால், அவள் எண்ணியதற்கெல்லாம் மாறாக, பொழுது பிரிந்து வெளிச்சம் வரும்போதே, ஒரு வக்கீலுடன் காவல் நிலையத்திற்குள் வந்த அனுகூயாவைப் பார்த்தபோது, தன்னிச்சையாக அவளது கண்களில் நீர் பொங்கி வழியலாயிற்று.

சைதன்யாவை ஜாமீனில் எடுக்க வேண்டும். அதற்காக, எந்த அடிப்படையில் அவளைக் கைது பண்ணியிருக்கிறார்கள் என்று அறிந்து போக வந்திருந்தாள், அந்த அன்னை!

உதவி கமிஷனர் சபாபதி தான் கைது செய்தது. இப்போதைக்கு விசாரணைக்காகவே காவல் நிலையத்தில் வைத்திருப்பதாகவும், மேல் விவரம் அந்த அதிகாரியிடம்தான் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று, அந்த மகளிர் காவல் நிலையத்தில் சொல்லிவிட, வக்கீலை ஆவன செய்யும்படிச் சொல்லிவிட்டு, அனுமதி கேட்டுக் கொண்டு சைதன்யாவிடம் வந்தார் அனுசூயா.

''ஆன்ட்டீ!'' என்று தன்னையறியாமல் கை கூப்பிய சைதன்யா, கண்களில் நீர் பொங்கி வழிவதையே உணரக் கூட இல்லை.

பெற்ற மகள் இறந்து கிடக்கிறாள். இந்த நேரத்திலும், தனக்காக ஒரு வக்கீலைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறாளே என்று, அது மட்டுமே மனதை நிறைக்க... கழிவிரக்கமும் நன்றியுமாகத் தானாகப் பெருகிய கண்ணீர் அது.

ஆனால், அவளது கண்ணீரைப் பார்த்ததும் பெரியவள் சற்றுப் பதறி வேகமாக அருகில் வந்து, "என்னம்மா? இங்கே உன்னை முரட்டுத்தனமாக ஏதும் நடத்தினார்களா?'' என்று தணிந்த குரலில் கவலையுடன் விசாரித்தாள்.

"இல்லையே ஆன்ட்டி. பெரிதாகக் கேள்வி கூடக் கேட்கவில்லையே'' என்றாள் சைதன்யா.

"பின்னே அழுகிறாயே?''

கண்களைத் தொட்டுப் பார்த்துக்கொண்ட பிறகுதான் சைதன்யாவுக்கு தான் அழுதிருப்பதே புரிந்தது! "தெரியவில்லை, ஆன்ட்டி, உள்ளூர பயந்துவிட்டேன் போல!'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டாள் அவள்.

"நீ தைரியசாலி என்று நினைத்திருந்தேன். நீயே பயப்படுவதா? வேண்டாம்மா. நீ தப்பு செய்யவில்லை என்று எனக்குத் தெரியும். அதனால், உனக்கு ஒன்றும் ஆகாது'' என்றாள் பெரியவள்.

இப்படிச் சொல்லும் தாயிடம், அவளுடைய மகள் செய்து வைத்திருக்கும் தீமை பற்றிய விவரம் எப்படிச் சொல்வது? அதுவும் என்ன மாதிரிக் குரூரமான பொய்!

ஒரு வேளை, இலியாஸ் சொல்லியிருப்பானோ என்று

**SMS**

**''புது மருமகளை வீட்டு வாசல்லயே நிக்க வச்சு எதுக்கு செக் பண்றாங்க..?''**

**''மாமியாருக்கு எதிரா ஆயுதங்கள் ஏதாவது கொண்டு வராளான்னு சோதனை போட றாங்களாம்!''**

*-என்.பர்வதவர்த்தினி, சென்னை-75.*



எண்ணிவிட்டு, உட னேயே இராது என்று முடிவு செய்தாள் சைதன்யா.

அவர்கள் நால்வரிலும், இலியாசுக்கு ரொம்பவே மென்மையான மனது. தைரியசாலி என்று கருதப்படும் தனக்கே தயக்கமாக இருக்கும்போது, நீதாவின் இறப்பு பற்றிச் சொல்லவே அவன் சங்கடப்பட்டிருப்பான். அவளது திரிசமன் பற்றி, அனுசூயாவிடம் தெரிவித்திருக்க அவனுக்கு வாய் வந்திராது!

'அநியாயமாக சைதன்யாவுக்கு இப்படி ஒரு பழி ஏற்பட்டிருக்கிறது. நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்' என்று வேண்டியிருப்பான்.

இந்தத் தாயும், மற்றதை ஒதுக்கி வைத்துவிட்டு, அங்கே விரைந்து வந்திருக்கிறாள். மகளது குரூரத்தைச் சொல்லி, இந்த நேரத்தில் அனுசூயாவைத் தலைகுனிய வைப்பதும், சைதன்யாவுக்கு ஒரு வகைக் குரூரமாகவே பட்டது!

இருக்கட்டும், இன்று பட்ட வேதனை, இன்னும் ஓரிரு நாட்கள் அனுபவிப்பது பெரிது அல்ல. அதற்குள், எப்படியும் ஆன்ட்டிக்கு உண்மை தெரிந்துவிடும். அவள் அறிந்தவரையில், அனுசூயா ஆன்ட்டியின் உதவி கட்டாயம் கிடைக்கும்!

ஆனால் அவளும்தான் என்ன உதவி செய்ய முடியும் என்று மனதுள் பரவிய நிராசையை மறைத்து, "ஆன்ட்டி, இப்போது உங்களுக்கு... இந்த நேரத்தில், உங்களுக்கு வீட்டில் எத்தனையோ வேலைகள் செய்ய வேண்டி இருக்கும்... அதைப் போய்ப் பார்த்துவிட்டு... இங்கே வேண்டியது வக்கீல் பார்க்கட்டும். நீங்கள் போங்கள்" என்றாள் மெதுவாக.

மறுப்பாக மெல்லத் தலையசைத்தாள் பெரியவள். "நீ சொல்வது புரிகிறது. ஆனால், இப்போது எதுவும் செய்வதற்கில்லையம்மா. அது போஸ்ட்... போஸ்ட்மார்ட்டம் முடிந்து, அவள் வந்த பிறகுதான்..." என்று உணர்ச்சி அடக்கி அனுசூயா சொன்ன தினுசில், சைதன்யா சட்டென உடைந்தாள்.

"ஐயோ, சாரி ஆன்ட்டி! சாரி... இப்படி நடந்து... இப்படி நடக்கக்கூடும் என்று கனவில் கூட எனக்குத் தோன்றியதில்லை ஆன்ட்டி! உங்களுக்கு எவ்வளவு வேதனையாக இருக்கும்? சாரி ஆன்ட்டி!" என்று கண்ணீருடன்



அரற்றினாள்.

"நீ எதற்கம்மா என்னிடம் வருத்தம் தெரிவிக்கிறாய்? அநியாயமாக, உன்னை இப்படி பொய்க்குற்றம் சுமத்தி மாட்டி வைத்திருக்கிறாளே, என் மகள்! அதற்காக நான் அல்லவா வருத்தப்பட வேண்டும்... கூடவே, வெட்கமும் வேதனையும் பட வேண்டும்!" என்று கசந்த குரலில் கூறினாள் அனுசூயா.

**SMS**

"அந்த ஆள் பெரிய பந்தா பேர்வழி..."
"அப்படி என்ன செஞ்சார்..?"
"சின்ன வீடு செட்டப் பண்ணதுக்குகூட கிரஹப்பிரவேசம் பண்ணார்னா பார்த்துக்கோயேன்!"
*- ஜி.சுப்ரமணியன், சென்னை-35.*



சைதன்யா திகைத்து, "ஆன்ட்டீ! உங்களுக்கு எல்லாம் தெரியுமா?" என்று வியந்து கேட்டாள்.

"இலியாசுக்கு தயக்கம்தான். நானும் மருமகனும்தான், அவனைத் துளைத்துத் துளைத்துக் கேட்டுத் தெரிந்துகொண்டோம்!" என்று அவள் கூற, சின்னவள் மறுபடியும் அதிர்ந்தாள். "மனுவுக்கும் தெரியுமா?"

"நன்றாகத் தெரியும். மனைவியின் மரணம் பற்றிக் கணவனுக்குச் சொல்லித்தானே ஆக வேண்டும்? சொல்லியிருக்கிறார்கள்! வக்கீல், அவர் ஏற்பாடு செய்தவர்தான். ஆனால், உன்னைக் காப்பாற்றுகிற விஷயத்தில், அவர் பெயர் வெளியே வந்துவிடக் கூடாது என்று இருக்கிறோம்! அவரும் மாட்டிக்கொண்டால், ஒன்றும் செய்ய முடியாது போகும். அது உங்கள் இருவருக்குமே நல்லதல்ல. நீயும் எச்சரிக்கையோடுதான் இலியாசிடம் சொன்னாய் போல!" – மெச்சும்போதே, ஒரு பெருமூச்சும் வந்தது.

மகளின் நினைவு வருகிறது. பாவம்! இந்த நேரத்தில், இப்படி ஓர் உதவி செய்ய நேர்வது, எவ்வளவு கொடுமை!

**எ**ந்த வார்த்தையும் சொல்ல முடியாமல் சைதன்யா திணறிய அப்போது, அவளைக் கைது செய்த அதிகாரி சபாபதி வந்தார்.

அனுசூயாவை உட்கார வைத்துப் பேசினார். "நீதாவுடைய தாயார் என்றார்கள். குற்றம் சாட்டப்பட்டவளுக்கு ஜாமீனுக்காக வந்ததாகவும் சொல்கிறார்கள்... எப்படி?" என்று கேட்டார்.

"இதில் ஏதோ தப்பு நேர்ந்திருக்கிறது சார். இந்தப் பெண் சைதன்யா ரொம்ப நல்லவள்..."

அனுசூயாவை இடைமறித்து, "நல்லவள் என்று நம்பும்படி நடித்திருக்கலாம் அல்லவா? உங்கள் பெண்கூட, அவளை நம்பி ஏமாந்ததாகத்தான் சொன்னாள்! உங்களுக்கு விருப்பமானால் அந்த டேப்பை போட்டுக் காட்

டச் சொல்லுகிறேன்'' என்றார் அதிகாரி.

எதிர்மறையாக, மெல்லத் தலையசைத்தாள் முதியவள். "தேவையில்லை சார். அவள் எப்படியெப்படி, உண்மை போலவே பேசுவாள் என்று எனக்குத் தெரியும்!''

அனுசூயாவை விசித்திரமாகப் பார்த்துவிட்டு. ''இல்லைம்மா... இது மரண வாக்குமூலம். உயிர் பிரிகிற கடைசி நேரத் தவிப்பில் இருக்கும்போது சொன்னது. அதை மறுப்பதற்கு இல்லை!'' என்றார் அவர், சற்று அழுத்தமான குரலில்.

கம்பிகளைப் பிடித்துக் கொண்டு நின்ற சைதன்யாவுக்கு, அவர்கள் இருவரையும் பார்க்கவும், அவர்கள் பேசியதைக் கேட்கவும் முடிந்தது!

அனுசூயாவின் குரல் அமைதியாகவே இருந்தபோதும், அதில் ஆழ்ந்த வருத்தமும் தொனிப்பது அவளுக்கு நன்றாகவே தெரிந்தது. அவ்வப்போது கண்களில் தோன்றிய லேசான நீர்த்திரையின் பளபளப்பும் உள்ளிருக்கும் வேதனையைப் புரிய வைக்க, 'முடியாது' என்று ஒரேயடியாக மறுத்தேனும், இந்த அதிகாரி ஆன்ட்டியை திருப்பி அனுப்பி விடக்கூடாதா என்று கூட அவள் நினைத்தாள்.

எப்படியும், மீள முடியாதபடி சிக்கியிருக்கும் இந்த வழக்கில், இப்போதைக்கு ஜாமீனில் வெளியே வந்தும்தான் என்ன பயன் என்ற சலிப்பும் அவளுக்குத் தோன்றிவிட்டிருந்தது!

அனுசூயாகூட, அப்படியே நினைத்து இங்கிருந்து போய்விட்டால் நல்லது!

ஆனால் அப்படியின்றி, அனுசூயாவின் குரல் வேறு முயன்றது. ''என் அவமானத்தை நானே சொல்ல வேண்டியிருக்கிறது ஆபீசர். என் மகள் போதை மருந்து எடுக்கிறவள். அந்த மயக்கத்தில் ஏதேதோ கற்பனை செய்வது வழக்கம்தான்...''

"எந்தக் கற்பனையும் உடம்பில் விஷத்தைக் கொண்டுவர முடியாதில்லையா?'' என்று பதிலுக்குக் கேட்டார் சபாபதி. சற்றுக் கடுமையான குரலில் எனலாம்.

தொடர்ந்து... "திருமதி நீதா சொன்னதைச் சரிபார்க்க, அவளது மருந்து பாட்டில்களையும் ஃபாரென்சிக் சோதனைக்கு அனுப்பியிருக்கிறோம். ஆனால் சகாயம் மருந்துக் கடையில், கையெழுத்திட்டு இந்தப் பெண் சைதன்யா

**SMS**

**''புது மிக்ஸி வாங்கித் தருவீங்கன்னு பார்த்தா, பழசையே ரிப்பேர் பண்ணிக் கொடுத்துட்டீங்களே..?''**
**''ஹி... ஹி... இது 'ரீமிக்ஸி'!''**
***-எஸ்.எஸ்.பூங்கதிர், வில்லியனூர்.***



மருந்து வாங்கிய நிரூபணம் இருக்கிறது. உங்கள் பெண் சொன்னதுபோல, அடிக்கடியும் வாங்கி வந்திருக்கிறாள். இவற்றை சைதன்யாவுமே மறுக்கவில்லை. இப்போதைக்கு, போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்டுக்காகக் காத்திருக்கிறோம். அது வந்த பிறகு, நாங்கள் சட்டப்படி நடவடிக்கை எடுத்துதான் ஆகவேண்டும்! ஆனால், ஒன்று சொல்லுங்கள் மேடம்... பெற்ற மகளுக்கு விஷமிட்ட ஒருத்திக்காக நீங்கள் பரிந்து பேசுவது விசித்திரமாக இல்லை? யாராவது மிரட்டுகிறார்களா? ஒருவேளை, உங்கள் மருமகன்?'' என்று அவர் கேட்கவும், சைதன்யா உள்ளூர நடுங்கிப் போனாள்!

இந்த ஆன்ட்டி பேசாமல் போய்விட்டாலே நல்லது என்று மறுபடியும் சைதன்யாவுக்குத் தோன்றியது. மனுபரனாவது தப்புவானே!

அவள்தான், ஆப்பு அசைத்த குரங்கு என்பார்களே, அது போல அசையக்கூட முடியாமல் சிக்கியிருக்கிறாள். அவனும் மாட்டிக்கொள்ளக்கூடாதே!

அனுசூயாவைக் கூப்பிட்டேனும், போய்விடச் சொல்லலாமா என்று அவள் எண்ணுகையில், பெரியவள் பேசினாள். பயமற்றுதான்... ''போலீஸ்கார மூளை எல்லோரையும் சந்தேகப்பட்டுத்தான் ஆகவேண்டும். ஆனால், தப்பாகவே யோசித்து, நல்லவர்களையே சந்தேகப்படுகிறீர்களே... அதுதான் வருத்தமாக இருக்கிறது, ஆபீசர்!''

அனுசூயாவின் குரலில் மட்டுமின்றி, முகத்திலும் ஒருவிதமான அமைதியைக் காணவும், சைதன்யாவுக்கு ஆச்சரியமாக இருந்தது!

நிலையற்று அலைபாயும் இந்த நேரத்தில் அமைதியா? கூடவே, விசித்திரமான வகையில், நீதாவைப் பெற்றவளின் முகம் அழகு பெற்றும் தெரிந்தது. நொந்து நூலாகிக் கொண்டிருக்கும் இந்த வேளையில், இது எப்படி சாத்தியம்?

அல்லது, இப்படியெல்லாம் எண்ணுவதற்கு தனக்குத்தான் மூளை கலங்கிவிட்டதா?

பல்வேறு உணர்ச்சிகளினால் பாதிக்கப்பட்டிருந்த அவர்கள் அனைவரையும், அப்போது வந்த போஸ்ட்மார்ட்டம் அறிக்கை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது!

**(தொடரும்)**

**SMS**

**''இவர் ஒரு போலி பேஷன்ட்டா இருப்பார் போலிருக்கு டாக்டர்!''**
**''எதை வச்சு அப்படிச் சொல்றீங்க சிஸ்டர்?''**
**''குதிரைக் காய்ச்சல் வந்திருக்குன்னு சொல்லி, பெட்ல அட்மிட் பண்ணிக்கச் சொல்றார்!''**

*- என்.பார்வதவர்த்தினி, சென்னை-75.*




அந்தப் பரிசோதனை அறிக்கையைக் கொண்டு வந்தவரும் ஒரு காவலரே.

''நீதா என்கிற பெண்ணின் கடைசிப் பரிசோதனை அறிக்கை, சார்! கையெழுத்துப் போட்டுவிட்டு வாங்கிக் கொள்ளுங்கள்'' என்று அந்தக் காவலர் கனத்த குரலில் கூறவும், எல்லோருமே உடலில் மின்சாரம் பாய்ந்தது போன்ற உணர்வில் அதிர்ந்து நிமிர்ந்தனர்.

சவப்பெட்டியின் கடைசி ஆணி என்பார்களே... அது அறிக்கை வடிவில் வந்திருப்பது போலத்தான் சைதன்யா உணர்ந்தாள்.

எஃப்.ஐ.ஆர் போடுவதற்காக, அந்த அறிக்கையை எதிர்பார்த்துக் காத்திருந்த அதிகாரி சபாபதியும், அந்தக் குரலில் சற்று நிமிர்ந்தார்.

விசித்திரமான பல்வேறு உணர்ச்சிக் கலவையில் விலுக்கென நிமிர்ந்துவிட்டு, மறுபடியும் அலுப்புற்றுச் சோர்ந்தாள் அனுசூயா.

அதிகமாகப் பேசாவிட்டாலும், நடப்பதை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்த வக்கீலின் பார்வையிலும் கூர்மை கூடிவிட்டிருந்தது.

இது போன்ற பல சம்பவங்களைச் சந்தித்துப் பழகியிருந்தவர் என்பதால், போலீஸ் அதிகாரி வெளிப்படையாக வேறு எந்த விதப் பரபரப்பும் காட்டாமல், உறையிலிருந்து அறிக்கையை எடுத்துப் படித்தார். ஒரு தரம் படித்தவரின் கண்கள் லேசாக இடுங்க, மறுபடியும் ஒரு தரம் படித்துவிட்டு, டெலிபோனை எடுத்தார்.

அந்த அறிக்கையை யார் தயார் செய்தது, திரும்பச் சரி பார்த்தார்களா என்று சில பல விவரம் கேட்டார். இன்னும் சிலருடனும் பேசினார். நம்பமுடியாத ஒரு தொனி அவரது குரலில் இருந்ததுபோலத் தெரிந்தது.

அவரது பேச்சில் பெரிதாக எதையும் கண்டுபிடிக்க முடியாவிட்டாலும், அவர் எதிர்பார்த்தபடி அந்த அறிக்கை இல்லை என்பது, எல்லோருக்கும் புரிந்தது.

ஆயினும், சைதன்யாவுக்கு மனதில் எந்த நம்பிக்கையும் தோன்ற மறுத்தது. அதுதான், நீதா ரொம்பத் தெளிவாகத் தன் மரணத்திற்கு, அவளை முழுக் குற்றவாளியாக்கிவிட்டுப் போயிருக்கிறாளே! அதன் பிறகு இந்த அறிக்கையில், 'க், ச்சுக்குப் புள்ளி வைக்காதது' போன்ற சிறு பிழைகளுக்காக, அவளை விடுவித்து விடுவார்களா என்ன?

அறிக்கையில் சில எழுத்துகளோ, வார்த்தைகளோ மட்டுமே உரிய விதமாக இல்லாதிருக்கக் கூடும். மற்றபடி முடிவில் எந்த மாற்றமும் இருக்கப் போவதில்லை என்று அவள் நிராசையுடன் நினைக்கையிலேயே, அதிகாரி சபாபதி அந்த மகளிர் காவல் நிலையத்தில் பணி புரியும் யாரையோ அழைத்து, ''அந்தப் பெண் சைதன்யாவை விடுவித்து இங்கே அழைத்துவா!'' என்று பணித்தார்.

விடுவித்து..? எப்படி? நீதாவின் மரண வாக்குமூலம்..?

SMS

''இந்த டாக்டர் இதுக்கு முன்னால ஹோட்டல் வச்சிருந்தவர்னு எப்படிச் சொல்றே..?''

''ஆஸ்பத்திரி வாசல்ல பிளாக்போர்டு வச்சு, 'பன்றிக் காய்ச்சல் மருந்து ரெடி'ன்னு எழுதிப் போட்டிருக்காரே..!''

- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.



''போர்க்களத்தில் இருக்கும் போர்டைப் பார்த்து மன்னர் ஏன் டென்ஷன் ஆகிட்டார்..?''

''போர்டுல, 'இது வீரர்கள் உலா வரும் ஏரியா... உள்ளே வராதே'ன்னு எழுதியிருக்காம்!''

- சி.பி.செந்தில்குமார், சென்னிமலை.



SMS

அல்லது, இது வெறும் நடைமுறைப் பழக்கமாக, அவளிடம் கையெழுத்து ஏதேனும் வாங்குவதற்காக வெளியே அழைத்துப் போவதைத்தான் சொன்னாரோ?

நம்பிக்கையும் பயமுமாக சைதன்யா திணறுகையிலேயே, அதிகாரி, அவர் முன்னே அமர்ந்திருந்த அனுசூயாவைப் பார்த்து, ''உங்கள் மகளை, நீங்கள்தான் சரியாக அறிந்து வைத்திருக்கிறீர்கள், மேடம். இந்தக் கொலை, சைதன்யா விஷம் கொடுத்தது எல்லாமே, நீதாவின் கற்பனைதான். நீங்கள் சொன்னது போலப் போதை மருந்தின் விளைவே...'' என்றவர், அதற்குள் அருகில் வந்து விட்ட சைதன்யாவிடம் திரும்பி, அவளை உட்காரச் சொன்னார்.

''சில சமயங்களில், இது போல தவறுகள் நேர்ந்து, உன் போல நிரபராதிகளுக்குத் தொல்லை கொடுக்கும்படி நேர்ந்து விடுகிறதம்மா...'' என்றவர், நிமிர்ந்து சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, ''சுமார் ஒன்பது மணி நேரம், ரொம்பவே தவித்துப் போயிருப்பாய். சாரிம்மா!'' என்று வருத்தம் தெரிவித்தார்.

ஒரு பெரிய காவல்துறை அதிகாரி அப்படி இறங்கி வந்து பேசியது சைதன்யாவுக்கு வியப்பளித்தது. லேசாக முறுவலித்து, ''சூழ்நிலை அப்படி அமைந்து விட்டது. அதற்கு நீங்கள் என்ன சார் செய்ய முடியும்..?'' என்றாள், மென்மையான குரலில்.

ஒரு தரம் பார்த்துவிட்டு, ''அந்தக் கற்பனையின் காரணம் இப்போதுதான் எனக்குப் புரிகிறது. பொறாமை!'' என்றார் அவர்.

''ராட்சசப் பொறாமை. சூர்ப்பனகைத்தனமான வெறி!'' என்று வருத்தத்துடன் இயம்பினாள் பெற்றவள்.

தனக்கு எப்படி விடுதலை வந்தது என்று அறிந்துகொள்ள சைதன்யாவுக்கு ஆசைதான். ஆனால் அனுசூயா முன்னிலையில், நீதாவின் தவறுகள் பற்றி விலாவாரியாகக் கேட்க மனமற்று அவள் பேசாதிருக்கையில், சபாபதியே பரிசோதனை அறிக்கையை வக்கீலிடம் கொடுத்தார்.

''படித்துப் பாருங்கள். நீதாவின் உடலில் எந்த விஷமும் இல்லை! படுக்கை அருகே உள்ள மேஜை மீது ட்ரேயில் இருந்த அவளது மருந்துகளிலும், விஷத்தன்மையுடன் எதுவும் இல்லை என்று ஃபாரன்சிக் பிரிவில் இருந்தும் தெரிவித்துவிட்டார்கள். மருந்து தீர்ந்து போயிருந்த ஒரு காலி பாட்டிலிலும்கூட எந்தவித

விஷப்பொருளும் இருந்திருக்க வழியில்லை என்கிறார்கள். பல காலம் எடுத்த போதை மருந்தினால், உள்ளுறுப்புகள் சிதில மடைந்து, அதனால்தான் ம... முடிவு நேர்ந்திருக்கிறது என்கிறது மருத்துவக் குறிப்பு!'' என்றவர், அனுசூயாவைப் பார்த்து, ''சாரிம்மா... இன்றைய பல பெற்றோருக்குப் பிள்ளைகளால் இந்தத் துன்பம் நேர்ந்து கொண்டேதான் இருக்கிறது! கண்ணைத் திறந்துகொண்டே சாவுக்குழியில் விழும் இந்த இளைய தலைமுறையைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!'' என்று வருத்தத்துடன் முடித்தார்.

சமுதாய உணர்ச்சி உள்ளவர் என்பது குரலிலேயே தெரிந்தது. அனுசூயா அதைச் சொல்லியே அவரைப் பாராட்ட, ''அப்போது தான் மகளை இழந்திருந்த உங்களுக்குத்தான் அந்த சமுதாய உணர்வு மிக அதிகம்'' என்று, பதிலுக்குப் பாராட்டினார் சபாபதி.

பல பொதுத் தொண்டுகளில் அனுசூயா ஈடுபட்டிருப்பது சைதன்யாவுக்குத் தெரியும். எனவே, பொருத்தமான பாராட்டே என்று அவள் எண்ணியபோது, அவளது கரத்தைப் பற்றி, ''சமுதாய உணர்வுக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை, ஆஃபீசர் சார். ஏனெனில், மனதளவில் இவளும் என் மகளே!'' என்று சொல்லி, சைதன்யாவின் கண்களில் நீர் மல்க வைத்தாள் அந்தத் தாய்.

காவல் அதிகாரியிடம் விடை பெற்றுக்கொண்டு, சைதன்யாவை அனுசூயா அழைத்துச் சென்ற இடம், அவள் வசிக்கும் வீடு!

**வீ**ட்டுக்குச் செல்லும்போதே, ''இலியாசையும் பரிமளாவையும் வழக்கம் போலக் கடையைத் திறந்து, தொழிலைப் பார்க்கும்படி, மருமகன்தான் வற்புறுத்தி அனுப்பி வைத்தார். உனக்கு நல்ல நட்புகள் நிறைய இருக்கிறார்கள், சைது... அவர்களை கட்டாயப் படுத்தித்தான் அனுப்ப வேண்டியிருந்தது! 'கடையை மூடிப் போட்டால், என்ன ஏது என்று செய்தி பரவிவிடக் கூடும். அது நிறுவனத்துக்கு நல்லதில்லை. சைதன்யா மிகவும் வருத்தப்படுவாள். அதனால், ஒன்றும் நடவாதது மாதிரி, நீங்கள் தொழிலைப் பாருங்கள். நாங்கள் சைதன்யாவைப் பார்த்துக் கொள்வோம்' என்று பலவாறு, பலமுறை சொன்ன பிறகுதான் இருவரும்

**SMS**

''கபாலிக்கு ரொம்ப நல்ல மனசு...''
''எப்படிச் சொல்றீங்க?''
''பெட்ரோல் விலை உயர்ந்திருக்கற இந்த நேரத்துல, மாமூலோட சேர்த்து 'பெட்ரோல் அலவன்ஸ்' தர்றானே..!''
*-ராம்.ஆதிநாராயணன், தஞ்சாவூர்.*





''நம் மகாராணியாரை எதிரி மன்னன் கடத்திப் போகவில்லை என்று அடித்துச் சொல்கிறீர்களே... எப்படி மன்னா?''

''எதிரி மன்னன் சந்தோஷமாக இருப்பதாக ஒற்றன் வந்து சொல்கிறானே..!''

-ராம்.ஆதிநாராயணன், தஞ்சாவூர்.

SMS

வேலையைப் பார்க்கப் போனார்கள். முதலில், அவர்களிடம் விஷயத்தைத் தெரிவித்து விடலாம். வக்கீல், மருமகனுக்குச் சொல்லியிருப்பார்'' என்று, செல்லில் இலியாசை தொடர்பு கொண்டாள், அந்த நல்ல பெண்மணி.

மகளைப் பற்றிய உண்மை சொல்வதற்காக, மூச்சை உள்ளிழுத்து, அனுசூயா தன்னைத் திடப்படுத்திக் கொள்வதைக் கவனித்து, தானே பேசினால் தன் நிறுவனப் பங்குதாரர்களுக்கு மகிழ்ச்சியாக இருக்கும் என்று சொல்லி, செல்லை வாங்கி, சைதன்யா பேசினாள்.

அனுசூயா ஆன்ட்டியே வந்து, தனக்காகப் பேசியதால், பிரச்னை உடனேயே சரியாகி விட்டதாகவும், இப்போது வீட்டுக்குப் போய்க் கொண்டிருப்பதாகவும் மட்டும் சொல்லித் தன் விஷயத்தை முடித்துவிட்டு, பூபாலனைப் பற்றி விசாரித்து, அத்துடனேயே பேச்சையும் முடித்தாள் சைதன்யா.

அவளையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, ''உங்கள் 'திரும்பிப்பா'ருக்கு நான் அடிக்கடி ஓடி ஓடி வந்தேனே, ஏன் தெரியுமா சைதன்யா? என் மகள் எப்படியெப்படி இருக்க வேண்டும் என்று, நான் ஆசைப்பட்டேனோ, அதுபோலெல்லாம் நீ இருந்ததால்தான்! நீதா இப்படி உருமாறி விட்டதாக ஒரு கற்பனையில், மனதை ஆறுதல்படுத்திக் கொள்வேன்!'' என்று அனுசூயா கூறவும், சைதன்யாவின் கண்களில், மறுபடியும் நீர் திரையிட்டது.

''ஆமாம்மா. இதுவும் பொண்ணு போலத்தான்னு, அம்மா என்கிட்டே கூடச் சொல்லியிருக்கிறாங்க...'' என்றான் காரை ஓட்டிய மாணிக்கம்.

அனுசூயாவின் கையைப் பற்றி, ''எனக்கும் சிறு வயதில் இருந்தே அம்மா இல்லை... ஆன்ட்டி'' என்றாள் சைதன்யா.

சைதன்யா மேலே பேசுமுன், ''அந்தத் தாயாகவே ஆகிவிடத்தான், எனக்கும் ஆசை! ஆனால், 'அம்மா' என்ற அழைப்பு மட்டும் வேண்டாம்மா! அந்த வார்த்தையைப் பயன்படுத்தியவள் தந்த துன்பம், இந்தப் பிறவி முழுமைக்கும் போதும்! அதனால், உனக்கு நான் ஆன்ட்டியாகவே இருக்கிறேன்!'' என்றுரைத்த அனுசூயாவின் முகம் சற்று வாடிப் பின் சீரானது.

அவர்கள் வீட்டுக்குச் சென்று பார்த்தால், அங்கே மானபரன் இல்லை!

**(அடுத்த இதழில் நிறைவு)**

# கண்ட நாள் முதலாய்...

சைதன்யா ஏமாற்றத்தோடு திரும்பும்போதே, மானபரன் குரலும் கேட்டுவிட்டது! உள்ளே வந்து, அவளைச் சில கணங்கள் பார்த்துக் கொண்டே நின்றவன், பிறகு லேசாக முறுவலித் தான்.

ஏதோ பானத்துக்குச் சமையல் ஆளிடம் சொல்வதற்காக உள்ளே சென்றிருந்த அனு சூயா வெளியே வந்து, ‘‘எங்கே போனீர்கள் மாப்பிள்ளை..? வீட்டில் உங்களைக் காணோம் என்றதும், இவள் முகம் ஒரேயடியாக வாடிவிட்டது. அதைப் பார்க்கச் சகிக்காமல்தான், பானத்துக்குச் சொல்லுகிற சாக்கில் உள்ளே போய்விட்டேன்!’’ என்றாள் இயல்பாக.

‘‘காரணமாகத்தான் போனேன் அத்தை. நடந் ததை வக்கீல் போனில் சொன்னாரா... அந்த வீட்டில் எங்கேயோ விஷம் இருப்பது எனக்கு உறுதியாகிவிட்டது. வேறு யார் கையிலாவது அது கிடைத்து, மறுபடியும் தோண்டத் தொடங்கினால் இவளுக்கு ஆபத்து என்று தோன்றவே, அங்கே



போனேன். போதை மருந்துகளைத் துணி அலமாரிகளில்தானே போட்டு வைப்பாள் என்று தேடினால், இதோ பாருங்கள்!'' என்று பேண்ட் பாக்கெட்டில் இருந்து, ஒரு சிறு பாட்டிலை எடுத்துக் காட்டினான், மானபரன்.

"இவைதான் நீதா விழுங்க எண்ணியிருந்த விஷ மாத்திரைகள். அவள் விழுந்து கிடந்த இடத்தின் அருகே இருந்த அலமாரியில்தான் இருந்தது! போலீசை உசுப்பி விட்டுவிட்டு, மாத்திரையை எடுத்து விழுங்கப் போயிருப்பாள் போல! எப்படியோ இவற்றை எடுக்குமுன்னரே, அவளது முடிவு நெருங்கி விட்டிருக்கிறது'' என்று சொல்லும்போதே, சைதன்யா அவனைப் பார்த்து லேசாகத் தலையசைக்க, அவனது பார்வையும் இரக்கமும் வருத்தமுமாக அனுசூயாவை நோக்கியது.

"என்னம்மா... எனக்காகப் பார்க்கிறீர்களா? எல்லோரும் பார்ப்பீர்கள். என் வயிற்றில் பிறந்த மகளைத் தவிர...'' என்றுவிட்டு, "முதலில் உட்காருங்கள். உனக்குச் சில விஷயங்களைச் சொல்ல வேண்டும், சைதன்யா. இந்த ஒரே ஒரு தடவை!'' என்று எல்லோரையும் அமரச் செய்தாள்.

தானும் அமர்ந்தவள், சிறு அமைதியின் பின் தொடங்கினாள். ''இந்தக் குடும்பத்துக்கே ஒரு மூர்க்கம் உண்டு சைதன்யா. ஒரு பிடிவாத வெறி! அடுத்தவருக்கு வலிக்குமே என்ற நினைப்பே இராது! பிறரைத் துன்புறுத்திப் பார்ப்பதில், ஒரு சந்தோஷம். நினைத்தது நடக்கவில்லை என்றால், என்ன வேண்டுமானாலும் செய்வார்கள். நீதாவுக்கு ஓர் அத்தை இருக்கிறாள். மனநோய் இல்லத்தில்! ஏதோ கோபத்தில், கணவர் மீது, மண்ணெண்ணெய் ஊற்றித் தீ வைத்துவிட்டாள்...''

நீதாவிடம் ஒரு பொருந்தாத் தன்மை, மூர்க்கம் இருப்பதாக தான் நினைத்தது, சைதன்யாவுக்கு ஞாபகம் வந்தது! அத்தையிடம் இருந்து வந்ததா? மானபரன் என்ன பாடுபட்டிருப்பான்? தன் துன்பம், அவள் படக்கூடாது என்றுதான், அவளை 'போ போ' என்று அவ்வளவு கடுமையாகப் பேசி, விரட்டியிருக்கிறான்!

அனுசூயாவின் பேச்சு தொடர்ந்தது... ''நீதாவின்

**sms**



''தலைவர் ஓவரா மணல் அள்ள ஆரம்பிச்சிட்டாருன்னு எப்படிச் சொல்றே..?''

''முன்னெல்லாம் அவர் பேச்சுல கனல் தெறிக்கும்; இப்ப மணல் தெறிக்குதே..!''

- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி.

அப்பாவுக்கும் அதே மூர்க்கம் உண்டு. வெறும் மூர்க்கம் மட்டுமல்ல... இவர்களின் உள்ளே இருந்தது வெறும் கல்! ஈரமே கிடையாது! அவரை விட்டு, என்னிடம் ஓடி வந்தது என்று, அவரது நாயைக் கட்டி வைத்துச் சாட்டையால் அடித்தே கொன்றிருக்கிறார்! என்னையும் நிற்க வைத்து, என் கண் முன்னாலேயே! அது அலறிய அலறல்! அவரைப் பிரிவது பற்றித் திருமணமான இரண்டாவது நாளே எண்ணியிருக்கிறேன்! ஆனால்... என் பெற்றோர், குடும்பம் என்று, ஏதேதோ தடைகள், தளைகள்!

அப்போதே பிரிந்திருந்தால், இவள் பிறக்காமலே போயிருப்பாளே என்றும் வருத்தப்பட்டிருக்கிறேன். ஏனென்றால், நீதாவுக்கும் அதே மூர்க்கம்! அதே வக்கிரம்! அவளைக் கேளாமல் ஒரு துணி வாங்கி வந்தேன் என்று, அதைப் பெட்ரோல் ஊற்றி எரித்தவள். இவர்களுக்குக் குத்திக் குதறுவதற்கு யாராவது வேண்டும்! அடுத்தவர் அழும் போதுதான் இவர்களால் சந்தோஷமாக இருக்க முடியும்! ஒரு வகையில், பரிதாபத்துக்குரிய பிறவிகள்தான். ஆனால், இது நம்மைத் தாக்கும்போது, நாம்தான் பரிதாபத்துக்கு ஆளாகிவிடுவோம்!

**sms**

**''இனிமே நீங்க குடிக்கறதை பாதியா குறைக்கணும்...''**

**''ஏன் டாக்டர்..?''**

**''எனக்கு இப்படி ஃபீஸ் பாக்கி வச்சா, அப்புறம் நான் எப்படி தண்ணி அடிக்கறதாம்..?''**

*-அதிரை புகாரி,*
*அதிராம்பட்டினம்.*



இவளுக்குத் திருமணம் செய்ய வேண்டாம். நிறையப் படிக்க வைத்துப் பெரிய ஆளாக்கலாம் என்று எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தேன்! தகப்பன் வெறிபிடித்துச் சம்பாதித்துக் குவிக்கவில்லையா? ஏன், உங்கள் இருவரையும் பிரித்து, மகளது விருப்பத்தை நிறைவேற்றித் திருமணம் செய்து வைத்த விதம்? மூளை நிறையத்தான்!

ஆனால், அந்தக் கூட்டம் வீட்டுக்குள்ளேயே வந்து கொட்டமடித்து, வீடும் சேர்ந்து நாறுமோ என்ற பயம் எனக்கு! நான் கேட்டுக் கொண்டதற்காகவே, மாப்பிள்ளை தொடர்ந்து அந்த வீட்டில் இருந்து, நான் பயந்தது நடக்காமல் ஓரளவு காத்தார். ஆனால் உன்னை அங்கே இழுத்து, அவளது வக்கிர விளையாட்டைத் தொடங்கவும், மருமகன் என்னிடம் உதவி கேட்டு வந்தார்.

அன்றிலிருந்து உன்னிடம் ஒரு கவனம் வைத்துக்கொண்டே இருந்தேன். அது எனக்கு சுகமாகவும் இருந்ததால், ஓடி ஓடி வந்தேன்...



**sms**

**‘‘என்னங்க இது... கல்யாண மண்டபத்துல பொண்ணைக் காணோம்னு தேடிக்கிட்டு இருக்காங்க...’’**

**‘‘நான்தான் அப்பவே சொன்னேனே... பொண்ணு இருக்கற இடமே தெரியாதுன்னு!’’**

*- அனார்கலி, தஞ்சாவூர்.*

பெரிய நன்மையாக, நேற்று உன்னைக் காப்பாற்றவும் முடிந்தது!

ஆனால், நீதாவின் உடல்நிலை இவ்வளவு கெட்டிருக்கும் என்று நானுமே எதிர்பார்க்கவில்லை. தன்னலம் நிறைய உண்டு என்பதால், தன்னைப் பாதுகாத்துக் கொள்வாள் என்று எண்ணினோம். நான் நிச்சயமாகவே நினைத்தேன். ஆனால் அந்த வக்கிரம், தன் சீரழிந்துபோன உடல்நிலையையும், இப்படி உன்னை அழிப்பதற்குப் பயன்படுத்த முயன்றிருக்கிறது பார்! ஆனால், மருமகன் சொன்னதுபோலத்தான் நடந்திருக்க வேண்டும். அந்த விஷ மாத்திரைகளை அவள் உட்கொள்ளும் முன்பாக, அவளையே முடித்து, அந்தக் கடவுள்தான் உன்னைக் காப்பாற்றியிருக்கிறார்!

எப்படியோ, நல்லவேளை! இது, இப்படி முடிந்தது! இந்தக் கேவலத்தில், இவளுக்கு ஒரு வாரிசு வந்துவிடுமோ... அது இன்னும் எத்தனை பேரை நோகடிக்குமோ என்று எவ்வளவு பயந்திருந்தேன்! இரவு பகல், அதே கவலை! எப்படியோ, அந்தத் துன்பம் நேராமலும் கடவுள்தான் காத்திருக்கிறார்!’’

சட்டென காவல்நிலையத்தில், அனுசூயாவின் அமைதியும் பொலிவும் சைதன்யாவுக்கு நினைவு வந்தன. அந்த பொலிவு அவளது மூளைக் குழப்பத்தினால் வந்த கற்பனையில்லை. நிஜம். கணவன், மனைவி, பெற்றோர், பிள்ளைகள் போல நெருங்கிய சுற்றம் யாரேனும் நீண்ட நாள் நோய்வாய்ப்பட்டிருந்து இறந்தால், நோயாளியைக் கவனித்துக் கொண்டவரின் முகத்தில், இந்த அழகு, அமைதி வருவதுண்டு. அவளுடைய தாய்மாமா ஓர் ஆண்டுகாலம் நோயால் அவதிப்பட்டு இறந்தபோது, அந்த அத்தையின் முகத்தில் இந்தப் பொலிவைச் சைதன்யா கண்டிருக்கிறாள். அன்புக்குரியவரின் வேதனையும், எப்போது என்ன ஆகுமோ என்ற கவலையும் ஒரு முடிவுக்கு வந்துவிட்ட நிம்மதி, அப்படி வெளிப்படும் போலும்!

மகள் விஷயத்தில், அனுசூயா பட்டிருந்த துன்பமும் சைதன்யாவுக்கு அப்போது நன்கு புரிந்தது! இந்தத் தாயின் மனம் வாடாமல், இயன்ற வரை காக்க வேண்டும்.

தன்னையறியாமல் திரும்பிப் பார்த்தபோது, மானபரனின் பார்வையும் அதையே கூறுவதை உணர்ந்தாள்.

அனுசூயாவின் மனநிலைக்கு மதிப்புக் கொடுத்து இருவரும் பேசாதிருக்க, சில வினாடி அமைதியின் பின், வக்கீல் பேசினார்.

''அம்மா, அந்த வீடு, தொழில், பணம் எல்லாவற்றையும் இனி என்ன செய்யலாம் என்று, பரன் சாரும் நீங்களும்தான் முடிவு செய்ய வேண்டியிருக்கும்...''

"எனக்கும் நீதாவின் சொத்துகளுக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லைப்பா, மணி!'' என்றான் மானபரன் அவசரமாக.

"என் பெண் கிறுக்குத்தனமாக ஏதாவது உயில் எழுதி வைக்காமல் இருந்தால் என்றும், சேர்த்துச் சொல்லுங்கள், வக்கீல் சார்!" என்றாள் அனுசூயா. ''மகள் புத்தி தெரிந்தும், அவளுடைய தந்தை எல்லாவற்றையும் அவளுக்குக் கொடுத்துவிட்டுப் போகவில்லை? அப்படி வில்லங்கம் ஒன்றும் இல்லாதிருந்தால், ஆதரிப்போர் இல்லாத சிறுவர் சிறுமியரை வளர்த்து, பிழைக்க வழியும் கற்றுக்கொடுத்து ஆளாக்கும் இல்லமாக அதை மாற்றி அமைக்க எனக்கு ஆசை! ஆனால், அதை அப்புறமாகப் பார்ப்போம்" என்று முடித்தாள் அந்தத் தாய்.

அதன்பின், "இனி உங்கள் விஷயம்..." என்று அனுசூயா தொடங்கியபோது, மானபரன் அவசரமாகவே குறுக்கிட்டுப் பேசினான்.

"அதை பிறகு பார்ப்போம்!" என்று சுருக்கமாக முடித்துவிட்டான்.

என்னதான் மகளின் குறைகளை எண்ணி வெறுத்து ஒதுக்கினாலும், பெற்ற வயிறு, 'என் பெண்... என் பெண்...' என்றுதானே குறிப்பிட வைத்தது? வருத்தமும் இருக்கத்தானே செய்யும்.

காலம் மனப்புண்ணை ஆற்றும் சிறந்த மருந்து என்பார்கள். எனவே, கொஞ்ச காலம் போகட்டும் என்பதே, இருவர் கருத்தாகவும் இருந்தது!

**சு**மார் ஒரு மாதம் சென்றபின், அனுசூயாவின் விருப்பம் போல மாற்றி அமைக்கப்பட்ட இல்லத்தின்



**sms**

**''எங்கே... மூச்சை இழுத்து விடுங்க!''**

**''விளையாடாதீங்க நர்ஸ்! உங்களைப் பார்த்ததுல இருந்து அதைத்தானே செஞ்சுக்கிட்டு இருக்கேன்...''**

*- இ.தங்கமணி, நாமக்கல்.*

திறப்பு விழாவுக்காக எல்லோரும் குழுமியபோது, சைதன்யா–மானபரனின் திருமண நாளையே குறித்துக் கொண்டு வந்தாள் அந்த அன்பான பெண்மணி!

''சும்மா விட்டால், என் மனம் ஆறட்டும் என்று இந்த இருவரும் இப்படியே மாதக்கணக்கில் இருந்து விடுவார்கள்! அப்புறம் நான் பேரன், பேத்திகளைத் தூக்கிக் கொஞ்சுவது எப்போது? அதனால்தான் இப்படித் திருமண நாளையே நிச்சயம் பண்ணி விட்டேன். ஆனால், என்னையும் அறியாமல் வயிறு காந்திவிடுமோ என்று பயமாக இருப்பதால், நான் கூட இருந்து, கலந்துகொள்ள மாட்டேன். எல்லோருமாகச் சேர்ந்து நன்றாக நடத்துங்கள்! ஆனால் நான் எங்கே இருந்தாலும், நீங்கள் நன்றாக இருக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்வேன் என்று உங்கள் எல்லோருக்கும் தெரியும்தானே?'' என்று அந்தத் தாய் கேட்டபோது, இலியாஸ், பரிமளா, பூபால், மனோகரி என்று எல்லோர் தலைகளும் ஒப்புதலாக ஆடின!

சைதன்யா–மானபரனின் தலைகளும்தான்!

எல்லோரையும் திரும்பித் திரும்பிப் பார்த்துவிட்டு, பூபாலின் மடியில் இருந்த சின்னுவும் அவசரமாகத் தலையை ஆட்டிய விதத்தில், எல்லோருக்கும் சிரிப்பு வந்தது!

சைதன்யாவுக்கும் மானபரனுக்கும் எளிமையாகத் திருமணம் நடந்தது!

தனிமையில் சந்தித்தபோது, ஒரு சத்தியம் செய்து தருமாறு மானபரன், சைதன்யாவைக் கேட்டான்.

என்ன என்று கூடக் கேளாமல், 'செய்கிறேன்' என்றாள் அவள்.

"சொல்லு... இனி நம்மிடையே யார் வருவதற்கும் இடம் தர மாட்டேன்..."

"எதையும் வர விட மாட்டேன்..."

"காற்றைக் கூட!''

"காற்றைக் கூ...'' என்றவள் திகைத்து, அவனை நிமிர்ந்து பார்த்தாள். மானபரனின் பார்வையில் முகம் சிவந்தபோதும், காற்று செல்லக்கூட இடமின்றி கணவனோடு ஒன்றிக்கொள்ள, அவள் சற்றும் தயங்கவே இல்லை!

(முற்றும்)



**sms**

**'அமைச்சரே... எதிரி மன்னன் வாள் பயிற்சி, வில் பயிற்சி, மல்யுத்தப் பயிற்சியெல்லாம் எடுத்துக்கொண்டபிறகுதான் போர்க்களத்துக்கு வருவானாமே?''**

**''அதனால் என்ன மன்னா? தங்களைப் பிடிக்க வேண்டுமென்றால் அவன் ஓட்டப் பயிற்சி அல்லவா எடுத்துக்கொள்ள வேண்டும்!''**

- பிரியதர்ஷன், சேலம்.